உபயவேதாந்த க்ரந்தமாலே

# உபநிஷத் ஸாரம்

ஸ்ரீபரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீமத் ரங்கராமானுஜ மஹாதேசிகன் திருவடியான

உத்தமூர் - தி. வீரராகவாசாரியர்
இயற்றியது



விசிஷ்டாத்வைத பிரசாரிணி சபையின்
வெளியீடு

அச்சிட்டோர் :
தி இண்டியா பிரிண்டிங் ஒர்க்ஸ், மைலாப்பூர், சென்னை-4

மூன்றுவது பதிப்பு

விலை] 1970 [ரூ. 4-00

ஸ்ரீ

# முதற் பதிப்பில் இருந்த முகவுரை

உபய வேதாந்த க்ரந்த மாலையில் முதலில் உபநிஷத்துக்கள் பூர்வாசார்யர்கள் அருளிச் செய்த பாஷ்யத்தோடும் நமது பரிஷ்காரத்துடனும் அச்சிடப் பெற்ற போதே அந்தந்த உபநிஷத்தின் ஸாரமும் அங்கங்கே பிரித்து அச்சிட்டு வெளியிடப் பெற்றது. ஆயினும் சிறிது விரிவாகவும் ஸம்ஸ்கிருத க்ரந்தம் வாங்காதவர்களும் படிக்கும்படியும் தனியாக வெளியிட வேண்டுமென்ற நோக்கமிருந்தது. இப்படி யிருக்க—அந்த உபநிஷத்துக்களின் அச்சுக்கு முதலில் ரூ. 2000-க்கு மேலாகப் பொருள் உதவிசெய்து தொடங்குவித்தவரும், திருப்பதியில் ஸ்ரீவேங்கடேச்வர அச்சகத்தில் பாவப்ரகாசிகை யென்ற க்ரந்தம் அச்சிடுவதற்கு முன்னுக அதை சோதித்துத் தருவதற்குப் பொருளுதவி செய்தவருமான ஸ்ரீமத் வேதமார்க்கேத்யாதியாய் ஸித்தாந்த ப்ரசார சக்ரவர்த்தியுமான ஸ்ரீரங்க ராமாநுஜ சக்ரவர்த்தி ஸ்வாமிகளே இந்த உபநிஷத் ஸாரத்தை அச்சிட்டு வெளியிட வேண்டுமென்று திருவுளம் கொண்டனர். அதற்கு அன்னுருடைய தேவியாரின் நினைவாக ஒரு புஸ்தகம் வெளியிட வேண்டுமென்று சிஷ்யர்கள் ப்ரார்த்தனை செய்து கொண்டதே காரணமாகும்.

ஸ்ரீஸ்வாமியின் தேவி ஸ்ரீமதி கமலம்மாள், விளாங்குப்பம் திருமலை கட்டம் கூடலூர் தாதாசார்ய வம்சத்தில் தோன்றினவள். கேதாண்டபட்டி ஸ்வாமியென்று ப்ரசித்தி பெற்ற ஸ்ரீமத் ரங்கராமானுஜ மஹாதேசிகனுக்கு கீதாபாஷ்யாசார்யராய் ஜ்ஞான வைராக்யானுஷ்டானங்கள் நிறைந்த (நாறுதாதா) ஸ்ரீமத் ஸதார்ய வரதார்ய ஸ்வாமியின் சிஷ்யரும் மாப்பிள்ளையுமான ராமானுஜ தாதாசார்ய ஸ்வாமியின் குமாரர் ஸ்ரீநிவாஸ தாதாசார்ய ஸ்வாமியின் புதல்வி, ஸ்ரீ உ. வே. ஸ்ரீக்ருஷ்ண தாதாசாரியர், ராவ்பஹதூர் ஜி. ரங்கஸ்வாமி ஐயங்கார், நரஸிம்ஹ தாதாசாரியர் என்னும் ஸ்வாமிகளின் உடன்பிறந்தவள்.

புத்ரிகள் மூன்று பேரில் இரண்டாவது பெண்; ஐப்பசி மீ மூல நக்ஷத்ரத்தில் ஸ்ரீகேதாண்டபட்டி ஸ்வாமி திருநக்ஷத்ரத்தில் அதே சக்ரவர்த்தி குலத்தில் தோன்றனதாலே ஸ்ரீரங்கராமாநுஜ சக்ரவர்த்தி என்றே திருநாமம் கொண்டு நன்கு விளங்கும் ஸ்வாமிக்கு காலத்தில் பத்னியானவள். பிறந்த குலத்திற்கும் புகுந்த குலத்திற்கும் ஏற்ப நடந்து கொண்டு பால்யத்தினின்றே ஸஹதர்ம சாரிணி என்ற பெயரையும் பொருள் பெறச் செய்தவள். பதிசுச்ரூஷையிலும் குருசுச்ரூஷையிலும் பந்து ஜனங்களை ஆதரிப்பதிலும் சிஷ்யர்களை அருள்வதிலும் உத்ஸாஹமுடையவள்.

அவளுக்கு ஒரு குமாரன் பிறந்து சிறு வயதில் மறைந்திருந்தும் அதைச் சிறிதும் பாராட்டாமல் தன் பந்துக்களின் பிள்ளைகளைத் தன் பிள்ளைகளைப் போல் அன்புடன் போஷிப்பதும், பந்துக்களின் விவாஹங்கள் போன்ற சுபங்களில் விடாமற் கலந்து களிப்பதும் அந்த ஸ்வாமிக்குப் போல் அவர் தேவியான இந்த அம்மாளுக்கும் இயற்கையாக அமைந்திருப்பவையாம். தம் ஆசார்யராய் உலகில் ப்ரஸித்தி பெற்று விளங்கின பரமஹம்ஸ பரிவ்ராஜக (ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமி) ஸ்ரீரங்க ராமாநுஜ மஹாதேசிகனுக்கு மாதுகர கைங்கர்யமும் இவர்கள் சில காலம் செய்ததுண்டு. அப்போது இவளுடைய பக்திக்கு உவந்து, 'போன ஜன்மத்தில் தாயாக நமக்கு இருந்தவளோ' என்று அங்கே சாதித்தபடி.

இந்த தம்பதிக்கு பெங்களூரிலும் அதற்கு அருகாமை பல அக்ரஹாரங்களிலும் சக்ரவர்த்திகளும் பிறருமாக வெகு சிஷ்யர்கள் பரம்பரையாகவு மிருக்கின்றனர். நடந்த சார்வாரி ஐப்பசிமீ சுக்ல த்ருதீயையில் அந்த அம்மாளின் மறைவேற்படவே சிஷ்யர்கள் அவளுடைய நினைவாக ஒரு நல்ல கார்யம் செய்யவேண்டுமென்று ஸ்ரீ ஸ்வாமியை வேண்டிக்கொண்டனர். அதற்கிணங்கி தம் தேவியாரின் ஞாபகார்த்தமாக இந்த உபநிஷத் ஸாரத்தை அச்சிட்டு வெளியிட ஸ்வாமி நியமித்துப் பொருளுதவி செய்தனர். உபநிஷத்துக்களின் அச்சுக்குத் தாம் உதவியிருப்பதாலே உபநிஷத் ஸாரத்திற்கு உதவுவதே தகுமென்றும். இது தமிழில் எழுதப்பட்டிருப்பதால்

ஸ்த்ரீகளும் படிக்க அனுகூலமா யிருக்குமென்றும் ஸ்வாமி யின் திருவுள்ளம்.

அச்சிட்ட இதன் ப்ரசாரத்திற்காக ஸ்ரீ விசிஷ்டாத் வைத ப்ரசாரிணி சபை வெளியீடாக இதை யாக்கி அந்த சபைக்கும் 250 காபிகள் அளிக்க இசைந்துளர். இந்த ஸ்வாமி அந்த சபைக்கு முதல்தர மெம்பர்களில் ஒருவராகி த்ரவ்ய ஸஹாயம் செய்திருப்பவர். இவ்வளவு சித்தாந்த ஸம்ப்ரதாய சிரத்தையுள்ளவராக ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவரும் ஆகவேண்டுமென்பதற்கு இவர் ஓர் உதாரண புருஷராவர். இதை ஸ்ரீ உ. வே. தேசிக தர்சன ரத்னதீபம், V. V. ஸ்வாமியே உபய வேதாந்த க்ரந்த மாலைக்குத் தாம் எழுதிய சிறந்த ஆங்கில முகவுரையிலே வெளியிட்டிருக்கிறார்.

இந்த உபநிஷத் ஸாரம் ஸ்ரீமத் வேதமார்க்கேத்யாதி —பரமஹம்ஸ பரிவ்ராஜகாசாரிய ஸதாசார்ய ஸார்வ பௌம (ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமி) ஸ்ரீமத் ரங்கராமா னுஜ மஹாதேசிகனுடைய திருவத்யயந மஹோத்ஸவத் தில் (16—12—61) ப்ரசுரிக்கப் பெறுகிறது.

இந்த உபநிஷத்ஸாரத்தில், ப்ரஸித்தங்களான பத்து உபநிஷத்துக்களுக்கும் மற்றும் பெரியோர்கள் கை யாண்ட உபநிஷத்துக்களுக்கும் புருஷ ஸூக்தத்திற்கும் ஸாரம் எழுதப்பட்டிருக்கிறது. ஸம்ஸ்கிருதம் கற்றவருக் கும் இது சுருக்கமாய்த் தெளிய அனுகூலமாகும். ஸம்ஸ் கிருதத்தில் எழுதப்பட்டிருக்கும் உபநிஷதர்த்த ஸங்க் ரஹகாரிகை என்ற க்ரந்தமும் வேதாந்த புஷ்பாஞ்ஜலி என்கிற க்ரந்தமுங்கூட தமிழுரையுடன் இனி வெளி வரும்.

உத்தமூர் தி. வீரராகவாசாரியர்.

ஸ்ரீ:
ஸ்ரீ லக்ஷ்மீஹயவதந பரப்ரஹ்மணே நம:

உபயவேதாந்த க்ரந்தமாலை

# உபநிஷத்ஸாரம்

(ஆசிரியர்: உத்தமூர் தி. வீரராகவாசார்யர்)

*ச்ரீசாரம்ப்பாம் ச்ரீ யதீச ச்ருத்யந்தாசார்ய மதத்யமாம்.*
*அஸ்மத்தேசிகபர்யந்தாம் வந்தே குருபரம்பராம்.*

வேதத்தின் ஒவ்வொரு சாகையையும் ஸம்ஹிதை, ப்ராஹ்மணம், ஆரண்யகம், உபநிஷத் என நான்கு பாகங்களாகப் பிரித்திருக்கிறார்கள். ஸம்ஹிதை யொன்று நீங்கலாக மற்றவை யெல்லாவற்றிற்கும் ப்ராம்மணமென்ற பெயருண்டென்பர். உபநிஷத்தும் ஆரண்யகத்திலுட் பட்டதே; அதன் முடிவான பாகமே. உபநிஷத்துக்கு வேதாந்த மெனவும் பெயர். இது பரப்ரஹ்மத்தினிடத் திலே நெருங்கி இருப்பதாலே, அதாவது—ப்ரம்மத்தை நன்கு ஸ்வரூப—ரூப—குண—விபூதிகளுடன் தெரிவிப்ப தாலே உபநிஷத் எனப்படுகிறதென ப்ரஹ்மநந்திவாக்ய முள்பட பழைய ஸம்ப்ரதாய வுரையாம். இது ஸ்ரீபாஷ்ய மங்கள ச்லோக வ்யாக்யான ச்ருதப்ரகாசிகையில் காட் டப்பட்டது. வேதம் முழுமையும் ப்ரம்மத்தினிடத்தி லிருப்பதாகிலும் இது நேரில் நன்கு அதை விளக்குவதால் இதுவே நெருங்கியிருக்கிறதாகும். முன்பாகம் பெரும் பாலும் ப்ரம்மத்தின் விபூதியை மட்டும் சொல்வதாம். குருவின் அருகில் உட்கார்ந்து கேட்கப்படுவதால் உப நிஷத் எனப்படுகிற தென்பர் லௌகிகர். (ஷத்ல்—விச ரணே) தாபங்களை அழிப்பது—தாபம் போக்கும் ஞானத்தை விளைவிப்பதாகையால் உபநிஷத் என்றனர்

அத்வைதிகள். இது வேதத்தின் முடிவாயிருப்பதாலும், அறிய வேண்டியது. இதற்கு, மேலொன்றில்லையென்ன லாம்படி இங்கே முடிவு பெறுவதாலும், இதைக் கொண்டே வேதம் முழுமைக்கும் முடிவாகப் பொருள் தெளிய வேண்டியிருப்பதாலும் இதுவே வேதாந்தமென் றும் பெயர் பெற்றது.

வேதத்தைக் கர்மகாண்டம், ஜ்ஞான காண்டமென வும் பிரிப்பர். கர்மத்தினால் பெறப்படும் புருஷார்த்தம் ப்ரக்ருதி மண்டலத்திலுள்ள ஸம்ஸார பலனேயாம். ஜ்ஞானத்தினாலே பெறப்படுவது பரம புருஷார்த்தம். கரண களேபரங்களை (கருவிகளையும் உடலையும்) கொண்டே அனுபவிக்க வேண்டியதை அவற்றின் செய லான கர்மத்தினாலே பெறலாம். அப் பலனும் அதற்கான விரகும் அழியக்கூடியதாம். பரம புருஷார்த்தமான மோக்ஷம் சாச்வதமாயுள்ளது. அதற்கு விரகான ஜ்ஞா னமும் அப்படிப்பட்டதே. சேதநனெனப்படும் ஒவ்வோர் ஆத்மாவுக்கும் சைதந்யமென்ற ஜ்ஞானம் இயற்கை யிலேயே யுள்ளதொன்று. இது இதன் பலனான மோக்ஷத் தைப் போலவே ஆத்மாவைச் சேர்ந்தது. கர்மம்போல் உடலைச் சேர்ந்ததல்ல. பரமாத்ம விஷயத்திலே வரும் உபாஸந ஜ்ஞானம் மேன்மேல் வளர்ந்தே வரும் பிறந்த அளவுக்கு அழிவு எப்போதும் கிடையாது. ஆகவே ஜ்ஞானம் த்ருவமாய் அழிவற்றதான உபாயமென்னலாம். ஆகப் பலனும் த்ருவமாகும்; உபாயமும் த்ருவமாகும். இதை யுபதேசிக்கும் காண்டம் ஜ்ஞாந காண்டம்: உபநிஷத்து.

உபநிஷத்துக்கள் நூற்றுக்கு மேலிருப்பினும், நம் தென் பாரதத்திலே ப்ரஸித்தமான (த்வைத—அத்வைத— விசிஷ்டாத்வைத) மதத்ரயத்திலும், வடதேசத்தில் ப்ரசா

ரமர யுள்ளவையுள்பட மற்றும் சில மதங்களிலும் விவாதமின்றி ப்ரஹ்ம ஸூத்ரத்தைப் பின்பற்றி ஆதரிக்கப்பட்டு வந்த உபநிஷத்துக்களையே நாமும் ஆதரித்துப் பொருள் தெளிவது நலம். அவை யாவன-ஈசாவாஸ்யம், கேநம், கடம், ப்ரச்னம், முண்டகம், மாண்டுக்யம், தைத்திரீயம், ஐதரேயம், சாந்தோக்யம், ப்ருஹதாரண்யகம் எனப்படும் 'தசோபநிஷத்' என்று ப்ரஸித்தி பெற்ற உபநிஷத்துக்களும், மற்றும் கௌஷீதகி, அக்நிரஹஸ்யம், ஸூபாலோநிஷத்து, அதர்வசிகை, நாராயணோபநிஷத்து முதலியவைகளும், இவற்றில் வேதசாகைகளின் உட்பிரிவுகளில் நான்காவதான உபநிஷத் பாகத்திற் சேராத சிலவற்றையும் உபநிஷத்து என்று வழங்குகிறார்கள். இதற்கு முதல் உதாரணம் முதல் உபநிஷத்தான ஈசாவாஸ்யமேயாம். இது சுக்லயஜுர்வேத ஸம்ஹிதையின் கடை (40-வது) அத்யாயம். ஏனைய உபநிஷத்துக்களைப் போல் இதுவும் பரப்ரம்மத்தை நேரில் நன்றாக விளக்கிச் சொல்வதால் இதற்குமிப்பெயர் ஏற்பட்டது. இது ஸம்ஹிதா பாகத்திலேயே சேர்ந்திருப்பதாலும், மற்ற உபநிஷத்துகள் போலே வீணே வேறு விஷயங்களைச் சொல்லப் புகாமல் ஸாரமாய் அறியவேண்டிய ஸர்வாம்சங்களையும் சுருக்கமாகவும் தெளிவாகவும் உபதேசிப்ப தொன்றுகையாலும் இதை முதலுபநிஷத்தாக எண்ணினர். இதற்கு ஈசோபநிஷத்து என்றும் பெயர். 'ஈசா' என்று இதன் தொடக்கமாம். இது தனிப்பதம்.

## 1. ஈசாவாஸ்யம்

இதில் 18 மந்த்ரங்கள் மாத்திரமே யுள்ளன. இங்கு உபாக்யானம் ஒன்றுமில்லை. இது சிஷ்யனைப் பார்த்து ஆசார்யன் உபதேசம் செய்யும் முறையிலே தொடங்கப்

பட்டுள்ளது. இதனால் உபதேசமின்றி இவ் அர்த்தம் அறிய வியலாதென்றும், ஆசார்யன் உபதேசிக்கப் பெற்றாலல்லது ப்ரம்மவித்யை பயன்பெறாதென்றும் தெரிவித்தபடியாம். அனேக உபநிஷத்துக்கள் இப்படி சிஷ்யாசார்ய ஸம்வாதமாகவே அமைந்திருப்பது இவ்விஷயத்தைத் தெளிவிப்பதற்கே யென்க.

இந்த ஈசாவாஸ்யத்தை ஒவ்வொரு மந்த்ரமாகப் பார்த்து வரும்போது இதன் முதற் பகுதியில் அடைவே இப்பொருள்கள் தெளியவரும். இறைவன் இவ்வுலகில் எங்கும் தங்கியுளன். இங்குள்ளவற்றில் ஒன்றும் சாச்வதமன்று இவற்றைப் போக்யமாகக் கண்டு மயங்காமல், வெளிப்படையாகப் புலப்படும் இவற்றைத் தவிர்த்து வேறில்லையென நினைக்காமல், இவற்றை விட்டு இவற்றின் உட்புகுந்திருக்கும் இறைவனையே அனுபவிக்க வேண்டும். அதற்கு வைராக்யம் வேண்டும். ஆகிலும் கர்மங்களை விடலாகாது. வைராக்யமுற்றவன் செய்யும் செயல்களால் நன்மையே யுண்டு. தீமை யணுகாது ஸம்ஸாரத்திலே நம்மை மூழ்க வைக்கும் கர்மங்களை யெல்லாம் அழித்து ஆத்மாவைக் காக்கும் பெருமை ப்ரம்ம வித்யைக்கு உண்டு. ஆத்மாவை அழிப்பவருக்கு நள்ளிருள் மூண்ட வுலகமே புகுமிடமாம். கரந்தெங்கும் பரந்துள்ளவன் பரமாத்மா. இவனிடத்திலே சராசரங்கள் எல்லாம் இருப்பனவாகப் பார்க்கவேணும். இவ்வண்ணம் எல்லாவற்றினுள்ளும் பரமாத்மாவை ப்ரதானமாகக் காண்பவன், 'எல்லாம் பரமாத்மாவே' என்று ஒன்றாகவே பார்ப்பான். ஒருவித தோஷமுமில்லாத எம்பெருமானையே உபாஸிக்க வேண்டும். ஜகத் ஸ்ருஷ்டி, ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் காரணமாய், ஸர்வஜ்ஞனாய். வேண்டும்போது தானே இங்கும் ஆவிர்பவிப்பவனும் அவனே என்றவாறு.

இப்படி எட்டு மந்த்ரங்களிற் சொல்லி மேலுள்ள பத்துமந்த்ரங்களால் கர்மஜ்ஞானங்கள் இரண்டும்வேண்டு மென்பது முதலானவை உபதேசிக்கப்படுகின்றன.

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு இது கண்ணுடி போலிருப்பதாகும். இங்கு ஸ்ரீ தேசிகன் அருளிச் செய்த பாஷ்யத்தின் ஸாரம் பின்வருமாறு—

ஸர்வ வஸ்துக்களிலும் வ்யாபித்தவனுய், ஸர்வத்தை யும் நியமிக்கின்றவனுய், வானத்தில் மேகம் முதலிய வற்றை வஹித்துச் செல்லும்படி வாயு போன்றதற்கும் தாரகனுயிருப்பவன் ஒருவன் உண்டு. அவன் அத்தன் மைத்தனுகையாலே ஸர்வத்துக்கும் ஆத்மாவாகிருன். ஆகவே ஸர்வமும் அவனுக்கு உடலாம். அவனை அனுப விக்க வேண்டும். அவன் ஒருவித தோஷமு மில்லாத வன். பாபத்திற்குக் காரணமாய் பாபத்திஞல் வரும் மாம்ஸ சரீரமற்றவன். ஸமஸ்த கல்யாண குணங்களும் நிறைந்தவன். இதற்கு முன் எப்போதும் போல மேன் மேலும் எல்லாம் ஸ்ருஷ்டிப்பவன். அவனைப் பெறுதற் குத் தனிக் கர்மமோ, தனி ஜ்ஞானமோ போதாது. ஸத்கர்மங்களைச் செய்துகொண்டேயிருந்து வினைகளைத் தீர்த்து நல்ல ஜ்ஞானத்தைப் பெற்று அதனுல் மோக்ஷம் பெற வேண்டும். சம தமாதிகள் பெற்று அதர்மங்களி னின்றும் அஞ்சி நடப்பவனுக்கே தெளிவாக ஜ்ஞானம் பிறக்கும். செய்ய வேண்டுவது இது என்று சிறிதேனும் கவனியாமல் இராப்பகலாக அலைந்து, பந்து மித்ராதி களின் பணத்தையும் பல வழியில் அபஹரித்துப் பிறர்க் கென்ப தொன்றில்லாமல் நமக்கே எல்லாம் வேண்டு மென்ற பேராசை பிடித்தாட்டும்படி நம்மை நாம் கெடுத் துக்கொள்ளாதபடி பார்த்துக் கொள்ளவேண்டும். ப்ரக் ருதி-புருஷ-ஈச்வர விவேசனம் செய்து நம்முடைய நற்

செய்வதாலே பகவானை ப்ரார்த்தித்து, அவன் அனுக்ரஹத்தாலே பாபங்களை கழிக்க வேண்டும். இப்படி அவனுடைய தயை பெற்று அவன் திவ்யமங்கள விக்ரஹத்தை யனுபவிக்க அவா கொண்டு அப்புருஷோத்தமனிடத்திலே பக்தியை அல்லது ப்ரபத்தியைச் செய்து அவன ஸங்கல்பத்தாலே அர்ச்சிராதி மார்க்கத்தாலே மேற்சென்று ஸகல பாபங்களும் கழிந்து விடுவதாலே பரமானந்தத்துடன் எப்பொழுதும் கைகூப்பி நின்று அவனுடைய சரணாரவிந்தங்களிலே நம் மனோரதங்களுக்குத் தடையொன்றுமின்றி வழுவிலா வடிமை செய்து வாழ்ந்திருப்போமாக. இது இந்த *பாஷ்யப்படி ஈசோபநிஷத்தின் ஸாரார்த்தமாகும்.

## 2. கேநோபநிஷத்து

ஐஹிகம், ஆமுஷ்மிகமென்னும் பயன்களைப் பெற நமக்கு முதல் ஸாதனமாயுள்ளவை கரண களேபரங்கள். இவற்றிற் சேர்ந்தவையான கண், காது, வாக்கு, மனது, பிராணன் எனப்படும் ஐந்து கருவிகளைப் ப்ரம்மஜ்ஞானத்தை ப்ரஸ்தாவிக்கும் பலவிடங்களிலே ப்ரசம்ஸை செய்திருப்பது உபநிஷத்துக்களை †ஊன்றிப் பாராயணம் செய்பவர்க்கே விளக்கமாகும். அதனை மனதிற் கருதி சிஷ்யனொருவன் முதலில் இந்த ஸாமவேதோபநிஷத்தில் வினவுகிறான்—

*இந்த பாஷ்யத்திற்கு யாம் செய்த மொழிபெயர்ப்பு ஸ்ரீ தேசிக ஸ்ரீஸூக்தி ஸம்ரக்ஷிணி வாயிலாக முன் வெளியாயிருக்கிறது. வேண்டுமாகில் மறுபடியும் பதிப்பிக்கப்படும்.

†அதன் விரிவை (தமிழுரையுடன் வெளியிடப்படவிருக்கும்) எமது வேதாந்த புஷ்பாஞ்ஜலி க்ரந்தத்திலும், உபநிஷத் பூமிகையிலும் காண்க.

வினு:—மனது தனக்கிஷ்டமானவற்றில் பறந்து போகின்றதே. அது யாருடைய ப்ரேரணையின்பேரில்? இப்படி ப்ராணன் ஸஞ்சரிப்பதும், வாக்கு பேசுவதும், கண் காதுகள் தம் தம் காரியங்களைச் செய்வதும் எவருடைய ப்ரேரணையாலாகும்?

[எதற்காக சிஷ்யன் இவ்வண்ணம் கேட்கிருனென்று முதலில் குரு தமக்குள்ளே விசாரிக்கலானூர். பிறகு தேவதைகளை வசப்படுத்தி இக்கருவிகளைக் கொண்டு பரமாத்மாவைப் பூரணமாக அறிய சிஷ்யன் அவா கொண்டிருக்கிருனென்றறிந்து, அது ஸாத்யமாகாதென்பதை உபதேசிக்க வேண்டுமென்று முடிவு செய்தார். அதைச் சொல்லி நின்ருல் மோக்ஷம் பெற வழியில்லையென்று சிஷ்யன் கவலைப்படுவானென்று பார்த்து, அவனுக்குத் தகுந்தவாறு உய்ய ஓர் உபாயத்தையும் உபதேசிக்கலானூர்.] குருவின் விடை வருமாறு—

விடை:—ப்ராணனுக்கும் ப்ராணனுய், இப்படியே முன் சொன்ன மற்றைக் கருவிகளுக்கும் அதற்குக் காரணப்படும் சக்தியை யளித்து, அவற்றிற்கு நிலமில்லாதபடி நிற்பவன் அந்த பரமாத்மா என்றிவ்வளவே யுணர்ந்தே ஜ்ஞானிகள் மோக்ஷம் பெறுகின்றனர். அவன் அனுக்ரஹத்தாலே ஒவ்வொரு கருவியும் தன் வேலை செய்யத் திறமையுள்ளதாகிறது. இவற்றிற்கு அவனைப் பூரணமாக அனுபவிக்க சக்தி கிடையாது. எவ்வளவு தெளிவாக நீ அவனை யறிந்ததாக நினைத்தாலும் நீ அறிந்தது பெருங் கடலில் ஓர் திவலையே யாம். 'பரமாத்மாவை நான் நன்கறியேன்' என்று தெரிந்தவனே அவனை நன்கறிந்தவனுவான். எங்கும் அவனை நன்கறிய வியலாது. தேவலோகத்திலும் இவனை முழுதும் அறிந்தவரில்லை. தேவர்களும் முழுதும் அறியார்.

உபாக்யானம் ஒன்று இவ்விஷயத்திலே சொல்லுகிறேன்; கேள் —

### யக்ஷப்ரஹ்மோபாக்யானம்

பரப்ரம்மமானது தேவர்களிடத்திலே அபிமானம் வைத்துத்தானே அவர்களுக்காக அஸுராதிகளை ஜெயித்து வருகிறது. உண்மை இவ்வாறிருக்க தேவர்கள் தாமே ஜெயிப்பதாக கர்வம் கொண்டனர். இதனைப் போக்கி உண்மையை இவர்களுக்கு விளக்க வேண்டுமென்று ப்ரம்மம் கருதினது. உடனே ஒருயக்ஷ (பூஜிக்கத்தக்க) ருபமெடுத்து எதிரில் தோன்றிற்று. தேவதைகள் இதைப் பார்த்து, யாரென்று தெரிந்துகொள்ள வேண்டுமென்று அவா கொண்டு, அக்னி தேவனைப் பார்த்து, 'நீ எல்லாம் தெரிந்தவனுயிற்றே, இதனைத் தெரிந்து வா' என்ருர்கள். அவனும் இதனிடம் ஓடிவந்தான். அவனை, நீ யார் என்று யக்ஷப்ரமமம் கேட்க, அவன் தன் பெரும் பெருமையும் தோற்ற விடை அளித்தான். 'உன்னிடமுள்ள வீர்யம் எவ்வகையானது' என்று ப்ரம்மம் உடனே அவனை வினவினது. பூமியிலுள்ளவற்றில் எதையும் நான் எரிப்பேன் என்ருன் அக்னி. ப்ரம்மம் ஒரு புல்லை யெடுத்து எதிரில் வைத்து, 'இதை தகித்துவிடு என்றது. வெகு விரைவோடு அக்னி அதற்கு முயன்ருன். தனக்குள்ள சக்தி முழுமையும் செலுத்திப் பார்த்தான். புல் - புல்லாகவே யிருந்தது. ஓகோ! இந்த யக்ஷனை யறிய நமக்கு ஸாத்யமாகாதென்று திடமாய்த் தெளிந்து அவன் திரும்பிவிட்டான்.

பிறகு வாயுதேவனைத் தேவர்கள் அனுப்பினுர்கள். 'நீ யார்? என்ன யோக்யதையுள்ளவன்?' என்று ப்ரம்மம்

கேட்டபோது, நான் பூமியிலுள்ளவற்றில் எதையும் எடுத்தெறிந்து ஆகாயத்தில் எங்கும் திரிந்து வருவேன் என்றான் வாயு. அவனிடத்திலும் அதே புல்லை எதிரில் வைத்து, 'இதை எடுத்துச் செல்லலாம்' என்றது ப்ரம்மம். வாயு தேவனுடைய வேகமனைத்தும் வீணாயிற்று. ஆக அவனும் வெட்கமடைந்து விலகினான். (பூமி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம் எனப்படும் மூவுலகங்களுக்கு ப்ரதான தேவதைகளாவார் அடையவே அக்னியும், வாயுவும் இந்த்ரனும்.) அக்னியும் வாயுவும் அவமானம் பெற்றனர்.

ஆகவே தேவர்கள் இந்த்ரனை யனுப்பினார்கள். அவன் வரும்போது அவனை யொன்றும் வினவாதபடி ப்ரம்மம் மறைந்துவிட்டது. அதற்கென்ன காரணமென்பதை நாமே ஊஹித்துக் கொள்ள வேண்டும். ஒருபால் அவன் தேவேந்த்ரனானபடியாலே அவனைப் பரிபவப்படுத்த வேண்டாமென்று நினைத்திருக்கலாம். அல்லது, அக்னி, வாயு, இவர்களைப்போல இவனுக்கு இன்ன விஷயத்தில் சிறப்பான யோக்யதை என்பதை இவனே சொல்ல முடியாதென்றதாகலாம். இவன் எப்படியாவது தன்னைத் தெரிந்து கொள்ளாமல் திரும்பமாட்டான்; ஆகப் பிறர் முகத்தாலே தன்னைத் தெளிவித்து இவனுக்கு மேற்பட்டவர்களும் உலகிலிருக்கின்றனரென்று நினைப்பூட்ட வேண்டுமென்றும் எண்ணியிருக்கலாம். காரணம் ஏதேனுமிருக்கட்டும். அது மறைந்துவிட்டது. இந்திரன் என்ன செய்வதென்றறியாமல் திகைத்து நின்றான்.

அத் தருணத்திலே அவ் வானத்திலே அனேகம் ஆபரணங்களை அணிந்து ப்ரஸன்னமாய் விளங்கி நின்றாள் ஒரு ஸ்திரீ. (அவள் இவன் பாராத உருவமாக விராதலால் யக்ஷமே வேறுருகொண்டு வந்ததாக நினைக்காமல் ஏற்கனவே தான் பலதரம் பார்த்துள்ள பார்வதி என்றும்,

யர்வஜ்ஞரான சிவபிரானுரின் மனைவியென்றும் தெரிந்து) அருகில் வந்து, 'யார் அந்த யக்ஷம்' என்று ஆவலுடன் அவளைக் கேட்டான். அதற்கு அவள் கூறினதாவது—'இந்திரனே! அது பரப்ரம்மம். அதனுடைய அனுக்ரஹம் இராவிட்டால் உங்களால் என்ன செய்ய முடியும்? ஆக நீங்கள் பெற்ற பெருமை யெல்லாம் அதன் பெருமையே என்றுணர்க' என்றவாறு.

இப்படி இந்திரன் உண்மையை உணர்ந்து வாயுவுக்கும் அக்னிக்கும் மற்ற தேவர்களுக்கும் தெளியச் சொன்னுன். இந்த ப்ரம்மஸ்வரூபம் பிறர்க்கு ப்ரகாசிப்பதென்றுல், அது மின்னலுக்கும் மனோகதிக்கும் ஒத்ததாகும். ஆயினும் அது ஆசைப்படக்கூடியவாறு ஆனந்தரூபமாய் அளவற்ற கல்யாண குணங்கள் நிரம்பியதுமாகையால் வனமெனப்படும். வேத வேதாங்கங்களை அத்யயனம் செய்து ஸத்யவாதிகளா யிருப்பவர்கட்கு, ப்ரம்மஜ் ஞானம் பிறக்கும். நல்லொழுக்கமும், இந்த்ரிய நிக்ரஹமும், தபஸ்ஸு முள்ளவர்களுக்கு ப்ரம்ம வித்யை ஓங்கி வளர்ந்து நிலை நிற்கும். இப்படி வித்யையைப் பெற்றவர்கள் அந்த பரமாத்மா வீற்றிருக்கு முலகினிற் புகுந்து உயர்ந்த புருஷார்த்தம் பெற்று விளங்குவர்—என்றது இவ்வுபநிஷத்து. இவ்வுபநிஷத்தில் பிரிவுகள் (கண்டம்) நான்காம். இது 'கேந' என்ற சொல்லைக் கொண்டு தொடங்கப்படுவதால் கேநோபநிஷத்தாம்.

## 3. கடோபநிஷத்து.

இது க்ருஷ்ண யஜுர்வேதத்தில் கடசாகையைச் சார்ந்த உபநிஷத்தாம். கடரென்றவரைச் சார்ந்த சாகை கடசாகை. இங்குள்ள நாசிகேதோபாக்யானம் விரிவாக உபாக்யான ரத்ன மாலையில் வெளிவரும். இந்த உபாக்

யானம் தைத்திரீய ப்ராம்மணத்தில் (3—11—8) உள்ளது இத்துடன் இணங்கக்கூடியது மஹாபாரதத்தில் (அநு சாஸந பர்வ. 1?) உள்ளது வேறுபடும். இவ் உபநிஷத்தில் வல்லி என்ற பிரிவுகள் ஆறு உள. மும்மூன்று வல்லிகள் கொண்ட அத்தியாயங்கள் இரண்டு.

(வல்லி 1.) வாஜச்ரவஸர் என்ற கௌதமருக்கு நசிகேதஸ் எனவொரு புதல்வன் இருந்தான். தந்தையான தம் சொத்துக்களை யெல்லாம் தக்ஷிணையாக்கி ஒரு யாகம் செய்தபோது வயது முதிர்ந்து தின்னவும் குடிக்கவுங்கூடத் திடமற்ற கோக்களை தானம் செய்வதைக் கண்டு 'இவற்றை தானம் செய்வதால் இருள் சூழ்ந்த உலகிலல்லவோ இருக்க வேண்டிவரும்' என்று நசிகேதஸ்ஸு வருந்தி அதற்காகத் தன்னையே தானம் செய்யும்படி ஒரு தரத்திற்கு மூன்று தரமாக வற்புறுத்தினன். அவனை தானம் செய்ய வியலாத அவர் சினம் கொண்டு, உன்னை நமனுக்குக் கொடுக்கிறேன்' என்று சொல்லி, பிறகு மனம் திரும்ப, வருந்தமுற்றபோது முன்னோர் நெறியினின்று தவறாமல் தந்தையை ஸத்யத்திலே நிலை நிற்கச் செய்து அவர்கள் நமனுலகம் போகத் துணிந்தான். அங்கே யமன் தன் கிருஹத்தில் இல்லாத தருணம் பார்த்துத் தகப்பனர் அவனை அனுப்ப இசைந்தார். அங்கே சென்று அவன் மூன்று நாள் பட்டினியிருந்தான். பிறகு யமன் வந்ததும், விருந்தனன் பட்டினி யிருந்ததைக் கண்டு வருந்தி மூன்றிரவு பட்டினிக்காகத் தான் மூன்று வரங்களை யளிப்பதாகக் கூறினன். நசிகேதஸ்ஸும், தந்தை மனக்கலக்கம் நீங்கித் தன்னைக் கண்டு களித்தருளும்படிக்கு முதல் வரனையும், ஜரா மரணங்களுக்கு இடமாகாததோர் ஒப்பற்ற ஸ்வர்க்கத்தை (சுத்தமாய் ஜீவாத்மா மன்னி விளங்கும் மோக்ஷத்தை) பெற அக்னி விஷயமாக 2.வது வரனையும் கோரிப் பெற்றன். அவ் அக்னி விஷயத்தை

(அதாவது ச(அ)யனத்தை, வைதிகாக்கிநியை வைத்து ஹோமம் செய்யத் தக்கவாறு பலவகைச் செங்கற்களை வேதம் விதித்த வண்ணம் செய்து ஓர் உருவம் கட்ட வேண்டிய வகையை) உடனே தட்டுத் தடங்கலின்றி, உபதேசித்தபடியே திரும்பச் சொன்னதற்காக அவனுக்கு யமன் வெகுமதியுமளித்தான்.

[இங்கு கடோபநிஷத்திலும், கேனோபநிஷத்திலும் மற்றும் சில விடங்களிலும் ஓதப்படும் ஸ்வர்க்கமானது மோக்ஷமேயாம். ப்ராக்ருத ஸ்வர்க்கமன்று. துக்கம் கலக்காததும் அழிவற்றதும் அனைவரும் ஆசைப்படக்கூடியதுமானதொன்றை ஸ்வர்க்கமென்று வேதமே விரித்துரைத்துளது. அது மோக்ஷமேயன்றி வேறாகாது. இந்திராதிகளின் உலகை ஸ்வர்க்கமென்பது அதிலீடுபட்டவரின் புகழ்ச்சிப் பேச்சாகும்.]

பிறகு மூன்றாவது வரன் கேட்கப்பட்டது—'இறந்தவன் இருக்கிறானா, இல்லையா என்று ஐயமுறுகின்றனர். இதன் தத்துவத்தை நன்கு நான் தெளிய வேண்டும் என்றவாறு. (யமன் பார்த்தான். உண்மையில் ஆத்ம தத்துவம் எவ்வண்ணமாயிருக்கிறதென்பதே இவ்வினாவின் ஸாரம். எனவே இவனுக்குப் பூரணமாய்த் தத்துவோபதேசம் பண்ண நேரிடுகிறது. ஜீவாத்மா முன்சொன்னபடி ஸுவர்க்கத்தை சாச்வதமாகத் தனியான பரமாத்மாவுடன் கூடிப்பெற்று விளங்குகிறானென விளக்கிக் கூறவேண்டும். இது தெளியுமாறு இவன் நடந்துகொள்ளுவானா என்று பரீக்ஷித்தே இவ்வுபதேசம் செய்யவேண்டுமென நினைத்தான் பல வழியில் வேறு பலன்களை அளித்து இவனை மாற்ற முயன்றான். நசிகேதஸ்ஸு மிக்க வைராக்யத்துடன் தன்னிலையினின்று சிறிதும் மாறவில்லை. இதற்கு யமன் ஸந்தோஷித்துப் பின்வருமாறு உபதேசித்தான்—

(வல்லி.2.) ச்ரேயஸ்ஸு, ப்ரேயஸ்ஸு, (அதாவது நன்மையானது, இஷ்டமானது) என புருஷார்த்தங்கள் இருவகைப்படும். நீ அவற்றில் ச்ரேயஸ்ஸில் நின்றது மெச்சத்தக்கதாகும். வித்யை, அவித்யை என இரண்டு உள. அவித்யையில் உழல்கின்றவர் நமனுன எனக்கு எப்பொழுதும் வசப்பட்டிருப்பர். நசிகேதஸ்ஸே! வித்யை உன்னைப் பெற்று விளங்க விரும்பி யிருக்கிறதென நினைக்கிறேன். இதனைக் கேளாதவரே உலகில் பெரும்பாலு மிருப்பர். கேட்பவரிலும் அறியாதாரே மிகுதியாவர். இதனையுரைக்கத் திறமை பெற்றவனும், அவனை யணுகி நிற்பவனும், நன்கு உபதேசிக்கப்பட்டபோதும் இதனைத் தெளிகிறவனும் உலகில் உண்டாகில்'இது வியப்பே. இது வெகு சூட்சமமாயும் பலபடி தர்க்கிக்கப்பட்டு மிருப்பதால் இதை எல்லோரும் சொல்ல வல்லவரல்லர். யாரும் காணவொண்ணுதபடி குறையினுள்ளுக்கு முள்ளே நிற்கும் இத் தத்துவத்தை, முதலில் யோகம் செய்து ஜீவாத்மாவைக் கண்டு, பிறகு உபாஸிப்பவனே முக்தனுகிருன். சேஷியாய் ஆராத்யமாயுள்ள இதைப் பெற்று ஆனந்த முறுகிருன். நசிகேதஸ்ஸே! உனக்கு ப்ரம்மவாயில் திறக்கப்பட்டுள்ளது த்ருவமாயுள்ள (அழியாத) இப் புருஷார்த்தத்திற்காம் உபாயமும் த்ருவமானதே; வந்தேறியான தர்மா தர்மங்கள் போன்றதல்ல. ஸர்வோபயோகியாய் ஸர்வ வேதங்களும் கொண்டாடும் ப்ரணவமே முக்யமாய் த்ருவமுமான உபாயம். ஜீவாத்மாவும் பிறப்பு இறப்பு அற்றவன். அவன் உடலை வேண்டுமானுல் அழிக்கலாமே யொழிய அவனை அழிக்க முடியாது. இப்படி அழிக்கப்பட்ட மாட்டாமையாலே ஸூக்ஷ்மமாய் அவயவமற்ற ஜீவனின் உள்ளிப்பதாய் மிகவும் ஸூக்ஷ்மமாய் பெரிதுமான இத் தத்துவத்தை நம்முடைய ஜ்ஞான சக்திகளாலே பெற்றுவிட முடியாது. பல முரண்பாடுகள் தோற்ற உளது அது.

யானே அறிவன். கெட்ட நடவடிக்கைகளினின்று விலகி அடக்கமுற்று, மனத்தை அதனிடம் அன்புடன் செலுத்தி ஞல் ஜ்ஞானம் முதிர்ந்து அதனைப் பெறலாம். தீச்செயல் தகா. உலக முழுவதையும், அதை அழிக்க உதவியாய் வைத்துக்கொண்ட நமனோடு சேர்த்து உருட்டி விழுங்கும் அத் தத்துவத்தின் தன்மையை யார் அறிவர்?

(வல்லி. 3.) ஆயினும் அவன் ஸுலபனும் ஸுசீலனு மாவான். ஜீவாத்மா, பரமாத்மா இருவரும் இங்கு ஹ்ரு தய குஹையில் புகுந்திருக்கின்றனர். இருவரும் ஸுக் ருத பலனைப் புசிக்கின்றனர். பரமாத்மா கூடநின்று குடிப்பவனும், புசிப்பவனுமே தானென்று தோற்றும்படி ஸுலபனாயிருந்து புசிப்பிக்கின்றவனாய் தானும் புசிப்ப வன்போல் நடனம் செய்கிறான். அவன் புசிப்பது லீலா ரஸமே. ஜீவாத்மா அதனை உண்மையில் புசிப்பதால் நிழல்போல் ஒளியற்றிருக்கிறான். பரமாத்மாவோ வென் றால் ஒளியுற்று விளங்குகிறான். ஜீவாத்மாவுக்கு உடல் ஒரு ரதம். புத்தி ஸாரதி. மனது கடிவாளம். புலன்கள் குதிரைகள். விஷயங்கள் அவற்றின் புலங்கள். இவற் றைக்கொண்டு இவன் ஸுக துக்கங்களைப் புசித்து வரு கிறான். இந்திரியக் குதிரைகளை வசப்படுத்தாதபோது வழி தவறி தவிக்க வேண்டும். அசுத்தமாயிருப்பவன் அறிவு பெறான். அறிவுள்ளவன் இவற்றை யெல்லாம் தக்கவாறு பயன்படுத்தி முழுவழியும் கடந்து விஷ்ணு வின் பரமபதம் போய்ச் சேருவான். புலன்கள், விஷயங் கள், மனது, புத்தி, ஜீவாத்மா, சரீரம், பரமாத்மா என்ப வற்றில் மேலுள்ளவற்றை வசீகரித்தால் கீழுள்ளவை அநாயாஸமாக வசப்படும். பெறவேண்டும் பேறும் அப்பரமாத்மாவே. இதுவே ச்ரேயஸ்ஸு. எழுந்திருங் கள். விழித்துக் கொள்ளுங்கள். அறிய வரன்களை பெறுங்கள். கத்தியின் முனை போன்று நுண்ணிய நெறி யில் நடப்பது போலாம் இது.

(வல்லி. 4,) இனி இவன் பரமாத்மா என்பதை விரித்துரைப்போம். இந்திரியங்களெல்லாம் வெளிநோக்காகப் படைக்கப்பட்டிருக்கின்றன. உள்நோக்குப் பெறுதல் அரிதே. ஆயினும் பல தீரர்கள் இதனைத் தெளிந்து மோக்ஷம் பெறுகின்றனர். எல்லா விஷயங்களை உணர்தற்கும், சொப்பனம், ஜாகரம் எனப்படும் அனுபவங்களுக்கும் கருவியான கீழ்ச்சொன்ன இந்திரியங்களெல்லாம் அவனே. அந்த நிலைக்கு மாறாக ஜீவ பரமாத்ம ஸ்வரூபம் தெளிந்தவரெல்லோரும்கூட அவனே. பிரமனை அனுக்ரஹிக்கும் வ்யூஹ ரூபமும் அவனே. பிரமனை முதலிற் படைத்து அவனுக்கு எல்லாம் ஈந்து கடாக்ஷிப்பவனும் அவனே. ஸர்வ ஜீவனும் யாகாதிகளுக்கு வேண்டும் அக்னியும் எல்லாம் அவனே. அவனே எங்கும் பரந்த பரமாத்மா. அக்னியில் ஆராதனத்திற்குக் காலமான உதய அஸ்தமயங்களை விளைக்கும் சூரியன் முதலான ஸர்வ தேவதைகளும் அவனையே ஆச்ரயித்தவர். அவனை மீறுகின்றவன் இல்லை. மண்ணுலகிலும் விண்ணுலகிலும் அவனே ஈச்வரன். இங்கு வேறுபாடு கொள்ளுமவனுக்கு மோக்ஷம் கிட்டாது. (நேஹ நாநாஸ்தி கிஞ்சந), இப்படி எல்லாம் ஆளுகின்றவன் ஒருவனே. வேறில்லையென்றதை சுத்தமான மனத்தைக் கொண்டு தெளிய வேண்டும். இவன் அறியவியல் வேண்டுமென்றே கட்டை விரலளவான நமது ஹ்ருதயத்திலே உபாஸிக்கும்படி வெறுப்பின்றி வந்திருக்கின்றான். மலைகளில் புகவொண்ணாத இடத்தில் பெய்ந்த மழைநீரானது பல பக்கங்களில் ஓடுகின்ற வண்ணம் உண்மையில் இவன் விஷயமான தர்மாசரணைகளே வெவ்வேறு உபதேச்ய முடையனவாகச் சிலரால் கொள்ளப்படுகின்றன. அவர்களுக்கு அவற்றை அங்ஙனமே செய்யும் ஸம்ஸாரமேயாம். ஸர்வத்திற்கும் அந்தர்யாமி ஒருவனென்று எண்ணினால் தர்மாசரணையில் மாறுபாடில்லை. இவனை

யறிந்த யோகியின் ஆத்மஸ்வருபம் நீருட் கலந்த நீர் போலாகும்.

(வல்லி. 5.) கீழ் ரதமாகச் சொல்லப்பட்ட சரீரமே ஜீவாத்மாவுக்குப் பல வாயில்களுள்ளதொரு பட்டண மாம். கோணலான மனமுடைய ஜீவர்கள் விஷயத்தி லும் நேர்மனமுடைய பரமாத்மாவின் பட்டணம் இதென்று அறிந்து அனுஷ்டிப்பவன் துன்பமற்று மோக்ஷம் பெறுகிருன். இந்த முக்தாத்மாவும், சிறியனவும் பெரி யனவுமாக உலகிலுள்ள எல்லா வஸ்துக்களும். ப்ராணு பாநங்களை வசப்படுத்தி உபாஸிப்பவனும், உடலில் ஊடாடி மடிகிறவனும் எல்லாம் தானே என்னும்படி யிருக்கும் இவனே ஸ்வப்னத்திலும் ஜீவனின் வினைகளுக் கேற்ப ஸங்கல்பித்து எல்லாம் ஸ்ருஷ்டித்துக் கொடுப்ப வன். ஸர்வாந்தர்யாமியா யிருந்து, அழிவில்லாத அநந்த சேதநர்களுக்கும் வேண்டுவன அளிக்குமோர் அழிவற்ற சேதநன் இவனே. ஸூர்ய சந்திராதிகளான சுடர்கள் எல்லாவற்றிற்கும் ஒளியளிப்பவனும், அவ் வண்ண மொளி வீசும் அவையெல்லாம் இருள் என்னும் படி சுடர்மிகு சோதியுமான அவனை யுபாஸிப்பவர்க்கு சாச்வதமாயுள்ள ஸுகமுண்டாம். ஹ்ருதயத்தில் உபா ஸிக்க வேண்டும். முடிவிம் பாபங்களெல்லாம் ஒழியும். அவன் இங்கு உள்ள வரையில் சரீரம் ப்ராணனை உடை யதாம். அறியாதார் தேஹாத்ம ப்ரம்மம் பெறப் பிறக்கின் றனர். அறியும் பிறருக்கு மோக்ஷமாம்.

(வல்லி. 6.) அநாதியாய், வேர் மேலும், கிளைகள் கீழுமாக வளர்ந்துவரும் இந்த ஸம்ஸார வ்ருட்சத்திலே உள்ளவை யெல்லாம் அவனிட்ட வழக்காகும். (இந்த அச்வத்த விருட்சம் கீதையிலும் கூறப்பெற்றது). எல்லாம் அவனிடம் நடுங்கி நடக்கின்றன. இப்ரக்ருதி மண்ட லத்தில் இம்மண்ணுலகில் அவனை யறிவதுபோல் வேறு

உலகில் அறியவியலாது. இங்குள்ள கஷ்டங்களைக் கண்டு சோகிக்கலாகாது. கண்ணுற் காணமுடியாத அவனைப் பக்தியுடன் மனத்தினுற் காணவேண்டுமாகை யால் யோகத்திற் நிலைபெற வேண்டும். வசீகரிக்கப் பட்ட பிறகு இந்திரியங்கள், மனம், திடாத்யவஸாயம் எல்லாம் அனுகூலமாகும். உபதேச மூலமாய் அவனைத் தெளிந்து அவன் உளன் என்ற நம்பிக்கையுடன் முயன்று வருபவன் பிறகு காமங்களும் பாபங்களும் நீங்க இங்கே அவனை யனுபவிப்பான்; பிறகு ஹ்ருதயத்திலுள்ள முடி களிலிருந்து விடுபட்டு, உடலிலுள்ள பலவகை நாடி களிலே ஸம்ஸார மண்டலத்தினுட் செல்லவிருக்கும் நாடுகளை விட்டு, தலையிற் சேர்ந்துள்ள தன் ஸுஷும்நா நாடி வாயிலாக விஷ்ணுவின் அப் பதம் சென்று விளங்குவான். ஆகையாலே அப்பரமாத்மாவை நன்கு பிரித்தறிவது நலம்.

இது கடோபநிஷத்தின் ஸாரமாகும். இப்படி ஜீவன் விஷ்ணுவை யுபாஸித்து அவனுக்கு அடிமையாகவே ஸுகானுபவம் அழியாமற் பெற்று வாழ்வது இங்கே கூறப் பெற்றது—

சுபமஸ்து.

---

## 4. ப்ரச்நோபநிஷத்து

சென்ற மூன்று உபநிஷத்துக்களுக்கு மேலான ப்ரச்நம், முண்டகம், மாண்டூக்யம் என்ற மூன்று உப நிஷத்துக்களும் அதர்வசிகை முதலானவைபோல் அதர்வ வேதத்தைச் சேர்ந்தவை. ப்ரச்நோபநிஷத்தில் ப்ரச்நங்கள் (கண்டங்கள்) ஆறு. ப்ரச்நமாவது வினு. ஒவ்வொரு கண்டமும் ஒவ்வொரு முனிவரின் வினுவைக் குறிப்பிட்டு அதன்விடையை விளக்குவதாலே ப்ரச்நமெனப் பெயர் பெற்றது. ஸுகேசர், சைப்யர், ஸௌர்யாயணி, கௌஸல்

யர், பார்க்கவர், கபந்தி என்னும் அறுவர் வேத வேதார்த் தங்களிலே தெளிவு பெற்று பரப்ரஹ்ம விசாரத்திலே இழிந்து, 'நமக்கெல்லாம் தெளியச் சொல்லுவார் இவர்' என்று பிப்பலாதரென்னும் பெரியாரை யணுகிப் பணிந்து நின்றனர். முன்முன் முனிவர் மிக்க அறிவுடையார். பின் பின் முனிவர் குறைந்த அறிவுடையவர். அம்மஹர்ஷியும், இன்னும் ஒரு வருஷகாலம் தபஸ்ஸு ப்ரம்மசர்யங்களோடு ச்ரத்தையாக இருந்து பிறகு கேட்டால் தெரிந்தால் சொல்லுகிறோம்' என எல்லோருக்கு மாக மொழிந்தார். அதன்படி காத்திருந்து அவர்கள் கேட்டுத் தெளிந்து கொண்டனர். அவ்வறுவரில் முன் முன் முனிவரைவிட பின்பின் முனிவருக்கு ப்ரம்மஞானம் குறைவாயிருந்தமையால் குறைவான அறிவுடையாரின் வினா முன்னும், பிறகு வேறுமாக, விடைகளும் தொடர்ந்து இணையுமாறு, வினாக்களின் முறை அமைக்கப்பட்டது. அவர்களில் முதலில் வினவினவர் ஆறும் முனிவரான கபந்தியாவர்.

கபந்தி முனிவரின் வினா:—"இந்த ப்ரஜைகள் எங் கிருந்து பிறக்கின்றன" (அதாவது, 'ப்ரஜைகளின் பிறப்புக்குக் காரணம் யாது' என்றது.)

ஆசார்ய பிப்பலாதர்-"ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்ற ஆவல் கொண்ட ப்ரஜாபதி (ப்ரஜை களின் ஸ்வாமி)யானவர் ப்ரஜைகள் பலவாறு பிறக்கும்படி ஆலோசித்து ரயி, ப்ராணன் என இரண்டை உண்டு பண்ணினார். ப்ராணனாவது ஜீவஸமஷ்டி. ரயியாவது அதற்கு உடலாயுள்ள ப்ரக்ருதி. இப்படி ஸ்ருஷ்டிக்கும் பரமாத்மாவே காலரூபமாயும் அந்த ரூபமாயுமிருக்கிறான். ஸம்வத்ஸரம், மாஸம், நாள் என்றபடி காலரூபமான இவருடைய அம்சமான தக்ஷிணாயனத்தின் வாயிலாகச் சில ப்ரஜைகள் சந்திரலோகம் சென்று பலனை அநுபவித்து திரும்புகின்றனர். இவர்கள் முழுமையும் கர்மாநுஷ்டானத்

நிலேயே இழிந்தவர்கள். வித்யையை அனுஷ்டித்து ஆத்மாவையறிந்தவர். உத்ராயணம் வாயிலாக ஸூர்ய மண்டலம் சென்று ஸம்ஸாரத்திற்குத் திரும்பாதபடி நிற்பர். மாஸத்திலும் சுக்லபக்ஷமே சுபகர்மங்களுக்குரியது. நாளிலும் பகலில் ஸ்திரீஸங்கமில்லாமல் ப்ரஹ்மசர்யத்துடனிருப்பவர் ப்ராணஹாநி செய்யாதவராவர். அன்னத்தினின்று பிரஜைகள் பிறப்பதால் பரமாத்மா அந்நரூபனுயிருந்து காரணமாகிருன். த்ரிகரண (மனோ வாக்காயங்களாம் முக்கரண) சுத்தியும், தபஸ்ஸும் ப்ரஹ்மசரியமு முள்ளவர்க்கு ப்ரகிருதி மண்டலத்துக்கு மேலுள்ள ப்ரஹ்மலோகம். அப்படியில்லாதவர்க்கு இந்த ப்ராக்ருத உலகாம்—" இங்ஙனம் ப்ரஜைகளின் பிறப்புக்குக் காரணம் சொல்லிற்று. (சந்திரலோகமாவது ஸ்வர்க்கம்.)

2. பிறகு ஐந்தாம் முனிவரான பார்க்கவரின் வினு :— "ஆசார்யரே! ப்ரஜையின் உடலேத் தாங்கும் தேவதைகள் யாவர்? இதை ப்ரகாசப்படுத்துகின்றவர் எவர்? இவர்களில் யார் உயர்ந்தவர்?

ஆசார்ய பிப்பலாதர்:—ஆகாயம் முதலான ஐந்து மஹாபூதங்கள், இந்திரியங்கள் எனப்படும் எல்லா தேவதைகளுமே உடலேக் காக்கின்றனர். ஆகிலும் ப்ராணவாயுவே உயர்ந்ததாம். இதை அத்தேவதைகள் அறியாதிருப்பதைக் கண்டு ஒரு ஸமயம் ப்ராணவாயு அவர்களேப் பார்த்து, 'உங்களுக்கு மோஹம் வேண்டா. தேன்கூடு கட்டும் ஈக்கள் ஈயரசனுக்கு உட்பட்டு நடப்பது போல் எனக்கு நீங்கள் உட்பட்டு நடப்பவராவீர்கள். நான் உடலே விட்டுக் கிளம்பினுல் நீங்கள் இங்குத் தங்க முடியாது' என்று தெளிவித்து அதனே ரூபித்தது. அப்போது உண்மை உணர்ந்து வாக்கு, மனம், கண், காது என்றவை ப்ராணனேயும் மட்டும் உபநிஷத்துக்களில் எங்கும் ப்ரம்ம ப்ராணனேப் புகழ்ந்தன (இந்நான்கையும்

வித்யைக்கு வேண்டும் கருவிகளாகக் கொண்டாடும் ஐதரேயத்தில் இதன் விரிவு. இந்நான்கு புகழ்ந்தன என்றால் எல்லா இந்திரியங்களும் புகழ்ந்ததேயாம். இவை ப்ராணவாயுவைப் பலவாறு புகழ்ந்தன. இந்த ஸ்தோத்ரத்தை விஸ்தாரமாகச் சொல்வது இந்தக் கண்டம்.) 'ப்ராண வாயுவே! அக்னி, ஸூர்யன், மேகம், இந்திரன், சந்திரன், பூமி, ஸ்த்தூலம், ஸூக்ஷ்மம், வேதம், ஆசாரம், கெட்டவன், நல்லவனெல்லாம் நீயே. எங்கள் சக்தி அழியாமைக்காக நீ வெளிப்புறப்படாமல் உடலிலே இருக்க வேண்டும்' என்று வேண்டிக்கொண்டன.

முன் ப்ரச்னத்தில் ப்ராண என்ற சொல்லாலே ஜீவனைக் குறித்தது. ஜீவனையும் அப்படி குறிக்கும்படி ப்ராணவாயுவின் பெருமை இங்கே விளக்கப் பெற்றது.

3. நான்காம் முனிவரான கௌஸல்யர் :—இப்படியுள்ள ப்ராணவாயு எங்கிருந்து பிறக்கிறது? எப்படி இந்த உடலில் வந்து சேருகிறது? எவ்வண்ணம் தன்னைப் பிரித்துக்கொண்டு இங்கு நிலைக்கிறது? எவ்வழியாக வெளிக்கிளம்புகிறது? உடலுக்குள்ளும் வெளியிலும் எங்ஙனம் இருந்து வருகிறது?

ஆசார்ய பிப்பலாதர் :—கேள்விகள் சிறந்தனவாகையாலே நீர் சிறந்த ப்ரஹ்மஞான முள்ளவர். உமக்கு நான் விளக்கிச் சொல்லுகிறேன். முன் சொன்ன பரமாத்மாவினிடமிருந்தே ப்ராணவாயுவும் பிறக்கிறது. உருவத்திற்கு நிழல் போலே ஜீவனைச் சேர்ந்து மனதும், மற்ற இந்திரியங்களும் பிரியாதபடியுள்ளன. அவற்றிற்கு அதிகாரியாய் ப்ராண வாயு ஜீவனுக்கு நிழல்போல் இருந்து அவற்றுடன் உடலில் ப்ரவேசிக்கிறது. மஹாராஜாவாயிருப்பவன் மண்டல வரசர்களை ஏவி நடத்திக் கொள்வது போல் இது மற்ற ப்ராணன்களை (அதாவது—இந்திரியங்களை) ஏவி ஆண்டுவருகிறது. தானே (ப்ராணவாயு

வாகவே) முகபாகத்தில் நின்று கொண்டு கீழ் இந்திரிய ஸ்தானங்களிலே அபாநமாகவும், வயிற்றில் அக்னி உள்ளவிடத்திலே ஸமானமாகவும், ஆத்மாவின் இருப்பிடமான ஹ்ருதயத்தைச் சேர்ந்த அளவற்ற நாடி நரம்பு) களிலேவ்யாநமகாவும், புண்யத்தினுல் பெறப்படும் புண்ய லோகமும், பாபபலனுன பாபலோகமும், இரு வினையின் பலனுன மனித உலகும் பெற வழியாயுள்ள நாடிகளிலே உதாநமாயும் நிற்கிறது. கீழ்ச்சொன்ன ப்ராண—அபாந—ஸமாந—வ்யாந—உதாநங்களுக்கு சூரியன், பூமி, ஆகாயம், வாயு, தேஜஸ்ஸு என்றவற்ரேடு ஒருவாறு ஸம்பந்தமுண்டு. ஆக ப்ராணன் சூரியாதிரூபமாய் வெளியிலிருக்கும்.

4. மூன்ரும் முனிவரான ஸௌர்யாயணி—"உறங்கும் போது இவ்வுடலில் எவை வேலையற்றிருக்கின்றன? எவை வேலை செய்கின்றன? ஸ்வப்நங்களைக் காண்பது யார்? எதற்கு ஸுகமுண்டாகிறது? எல்லாம் எங்குத் தங்கி நிற்கின்றன?"

ஆசார்ய பிப்பலாதார் :—பலவிடங்களிலும் பரவியுள்ள சூரிய கிரணங்களெல்லாம் சூரியன் அஸ்தமிக்கும்போது அதன் மண்டலத்திலே ஒன்று சேருவது போல், உறங்கும்போது எல்லா இந்திரியங்களும் வேலையற்று மனதிலே லயித்து நிற்கின்றன. அப்பொழுது ப்ராணுபாநாதி வாயுக்களே வேலை செய்துவருகின்றன. வயிற்றில் அக்னியும் உண்டதை ஜீர்ணமாக்க வேலை செய்துவருகிறது. அத்தருணத்திலே ப்ராணன் மனதை உடலில் பரப்ரஹ்ம முள்ளவிடம் கொண்டு போகிறது. வழியில் ஸ்வப்நாநுபவம் கண்டதும், கேட்டதும், எங்கோ எப்பொழுதோ அனுபவித்ததும், அனுபவியாததும், இருப்பதும், இல்லாதது மெல்லாம் ஸ்வப்னத்திலே காணப்படும். பிறகு தேஜஸ்ஸினுல் (பரமாத்மாவினுல்) அடிக்கப்பட்ட போது ஸ்வப்பனத்தையும் காணுதொழி

கிறன். ஸுகம் பெறுவது ஜீவன். அதுவும் அவன் உடலுக்குள் இருக்கும்போது. எல்லால் இப்படி தன்னிடம் லயித்திருக்கும்போது ஜீவாத்மா பரமாத்மாவினிடம் தங்கி நிற்கிறுன். இப்பரமாத்மாவை உபாஸிப்பவன் எல்லா மறிந்து எங்கும் விளங்குவான். (இங்கு முடிவில் மொழிந்த உபாஸனையை விளக்குவது மேற்ப்ரச்னம்.)

5. இரண்டாம் முனிவரான சைப்யர்-"ப்ரணவத்தை மரணம் வரும் வரை உபாஸிப்பவன் பெறும் உலகம் யாது?"

பிப்பலாதர்-ப்ரணவமானது பர - அபர ப்ரஹ்மரூப மாயிருக்கும். ஒற்றை மாத்திரையுள்ள, அதாவது ஹ்ரஸ்வமான ப்ரணவத்தை உபாஸித்தால் மனிதவுலகிற் பிறந்து தபஸ்ஸு, ப்ரஹ்மசர்யம், ஆஸ்திக்யம் என்ற ஸம்பத்துக்களுடன் உயர்ந்ததை அனுபவிப்பான். இரண்டு மாத்திரையுள்ள (தீர்க்க) ப்ரணவத்தை யுபாஸிப்பவன் சந்திரலோகம் சென்று ஸ்வர்க்காதிகளை யனுபவித்துத் திரும்புவான். யாவனொருவன் மூன்று மாத்திரை கொண்ட ப்ரணவத்தினுலே பரமான ப்ரஹ்மத்தை யுபாஸிப்பான், அவன் எல்லா பாபங்களும் நீங்க, நித்யஸூரிகள் கண்டு உவக்கும் ப்ரஹ்ம லோகம் சென்று ஜராமரண பயங்களைப் போக்குகின்ற சாந்தமான பரமபுருஷனைக் கண்ணாரக் கண்டு களிப்பான்.

(மேற் ப்ரச்னம் ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்கு முள்ள வாசியை விளக்கும்.)

6. முதல் முனிவரான ஸுகேசர் கடைசியில் கேட்டார்—ஹிரண்ணநாபனென்னும் கோஸலதேசத்து அரசகுமாரன், "ஷோட சகலபுருஷன் யார்" என என்னைக் கேட்டுத் தெளிய விரும்பினுன். எனக்குத் தெரியவில்லை யென்று உண்மையைச் சொன்னேன். அப் புருடன்

யார், எங்குளனென அடியேனுக்கு அறிவிக்க வேண்டு கிறேன்.

ஆசார்ய-பிப்பலாதர்-. "(ஷோடசகல) பதினறு கலைகளுள்ள புருடன் இவ்வுடலிலேயே இருக்கிருன். 'எவை உள்ள வரை நான் இங்கு நிலை பெறுவேன். எவைகளோடு நான் வெளியே புறப்பட்டு விடவேண்டும்' என்று அவன் சிந்தனை செய்து-ப்ராணன், ச்ரத்தை, ஐந்து பூதங்கள், இந்திரியம், மனம், அன்னம், வீர்யம், தபஸ்ஸு, மந்த்ரம், கர்மம், பலன், பேர் என்ற பதினறை யும் ஸ்ருஷ்டித்துக் கொண்டான்" என்ருர். பிறகு இந்த ஜீவனுக்கு மேலானவன் ப்ரஹ்மமென்ற புருஷனெனத் தெளிவித்து உபதேசத்தை முடிக்கின்ருராய், "பெரும் பெருக்குள்ள ஆறுகள் கடலுட்புகுந்து தம் பேரும் உருவமும் போய்விடவே அதற்கு அடங்கியிருப்பது போல், இந்த ஜீவனுடைய இப் பதினறு கலைகளும் ஒரு புருஷனுக்கு அதீனங்களாய் அவனுள் அடங்கி விடுகின் றன. அப்புருஷனை யறியவேண்டும்; அவனை அறிந்த வனுக்கு ம்ருத்யு பயமில்லை. (இந்த ஷோடசகல புருஷனை மட்டும் அறிந்தால் போதாது.) இப்படி நான் அறிந்த பரப்ரஹ்ம ஸ்வரூபம் உள்ளது." என உபதேசித் தருளினர்.

பிறகு அறுவரும் அம்முனிவரைத் துதித்து ஆராதித் துப் போந்தனர். மஹர்ஷிகளை வணங்குவோமாக. இது ப்ரச்நோபநிஷத்ஸாரம்.

## 5. முண்டகோபநிஷத்து

எல்லா தேவர்களுக்கும் முன் பிறந்து உலகங்களை ஸ்ருஷ்டித்துக் காத்துவரும் ப்ரஹ்மா, ஸர்வவித்யைகளுக் கும் ஆதாரமாயுள்ள ப்ரஹ்மவித்யையைத் தம் மூத்த குமாரரான அதர்வருக்கு உபதேசித்தார். அவ் வித்யை

அங்கீர், பாரத்வாஜஸத்யவாஹர் வாயிலாக அங்கிரஸ்ஸி டம் சேர்ந்தது. சௌநகரென்னும் மஹான் அங்கிரஸ்ஸை முறைப்படி அணுகி, 'எதை யறிந்தால் எல்லாம் அறிந்த தாகும்' என வினவினர். (அதற்கு அங்கிரஸ்ஸு என்ற மஹர்ஷி அளித்த மறுமொழியாக இம் முண்டகோப நிஷத்து அமைந்துளது. இது முழுமையும் அங்கிரஸ்ஸு என்ற மஹர்ஷியின் உபதேசமென்பது கடைசியிலும் வியத்தமாயுளது. இவருடைய ப்ராசார்யரான அங்கீர் என்பவர் அதர்வரின் சிஷ்யர். அங்கீர் என்னுமே அவரும் அங்கிரஸ்ஸே என்பதுமுண்டு. அதர்வசிகை யென்ற உபநிஷத்தின் தொடக்கத்திலே பிப்பலாதருடைய புதல் வரான அங்கிரஸ்ஸு அதர்வரின் சிஷ்யரெனத் தெரி கிறது. அங்கே பைப்பலாத என்று படிக்காமே, பிப்ப லாத என்றே படித்து அங்கிரஸ்ஸைப் போல் பிப்பலாத ரும் அதர்வசிஷ்யரென்பர். அதர்வரின் உபதேசம் அதர்வசிகை. அவர் சிஷ்யர் பிப்பலாதரின் உபதேசம் ப்ரச்நோபநிஷத்து. அதர்வ சிஷ்யரான அங்கீர் அல்லது அங்கிரஸ்ஸின் ப்ரசிஷ்யரான அங்கிரஸ்ஸின் உபதேச மாம் இந்த முண்டகோபநிஷத்து. ஸ்ரீ விஷ்ணு புராணத் திற் கூறியது அதர்வ வேதோபதேச பரம்பரையாகலாம். இது வேதாந்தோபதேச பரம்பரை யென்னலாம்.) அங் கிரஸ்ஸு இங்கு அருளினதாவது—

''பரை, அபரை என்னும் இரண்டு வித்யைகளை யறிய வேண்டுமென்று ப்ரஹ்மம் அறிந்தோர் சொல்லு வார்கள். அபரையாவது வேதங்களும் அவற்றின் அங்கோபாங்கங்களும். [அதாவது—அவற்றை யோதிப் படித்துப் பெறப்படும் தெளிவான ப்ரஹ்மஜ்ஞானம் அபர வித்யை.] பரவித்யையாவது—அக்ஷரமான (அழிவற்ற) பரப்ரஹ்மத்தைப் பெற விரகாயுள்ள அதன் ஸாக்ஷாத் காரம். சேதந-அசேதனங்களைப் போலன்றியே நித்ய மாய், ஸர்வவ்யாபியாய், மிகவும் நுட்பமாய், எல்லாவற்

நிற்கும் காரணமுமான ப்ரஹ்மத்தின் ஸாக்ஷாத்கார மானது ஞானிகளுக்கே யுள்ளது. இந்த வஸ்துவுக்கு மேம்பட்ட தொன்றில்லை. இது மேலுலகில் நிலைபெற்றிருப் பதோடு இங்கும் எங்கும் வ்யாபித்துள்ளது. தன் உடலி னின்று தானே நூல் நூற்றுக் கூடுகட்டிப் புகுந்து தங்கி விளங்கும் (ஊர்ண நாபி) சிலந்திப் பூச்சியே இந்த ப்ரபஞ் சத்திற்குக் காரணமான ப்ரஹ்மத்திற்குச் சிறந்த உவமை யாம். ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்களுக்கு இருப்பிடமான இது ஸர்வஜ்ஞும். ஸர்வசக்தி—எல்லா விஷயத்திலும் அறிவும் வல்லமையு முள்ளதாம்.

2. இந்த ஸத்யமான ப்ரஹ்மத்தை விரும்பிக் கர்மா நுஷ்டாநம் செய்பவருக்கு ப்ரஹ்மலோகமுண்டு நித்யகர் மங்களில் ஒன்றையும் விடலாகாது. ஸர்வ தேவ தேவ ஞன பிரமனின் லோகம் வரையிலுள்ள பலன்களெல்லாம் கர்மங்களாலே பெறப்படும். அவ்வித கர்மங்கள் கடலில் வீழ்ந்து மூழ்கிக் கிடப்பவனுக்குக் கிடைத்த ஓட்டைக் கப்பல்கள் போலவாம். தத்துவம் அறியாமே இவற்றை யனுபவிப்பவருக்குக் கீழே வீழ்ச்சியும், ஜனனமரணங் களும், நரகாதிகளுக்குச் செல்வதுமேயுண்டு. பரம புருஷனை யறிந்து கருதிச் சிறந்த அநுஷ்டானம் செய்பவர் சூரிய மண்டலம் வாயிலாக அவனுள்ள இடம் போய் நிற்பர். ஆகையால் காம்யங்களை விட்டு, நித்யகர்மா னுஷ்டானத்துடன் பரமபுருஷனை யறிவதற்கு வேத வேதார்த ஞானமுள்ள உயர்ந்த குருவை ஆச்ரயிக்க வேண்டும். நித்யமான பலனை நித்யமான விரகாற் பெற அதிகாரிக்கு குருவும் அறியவேண்டும் ப்ரஹ்மத்தை உபதேசிப்பான்.

3. ஸர்வவிலக்ஷணமாய் மேலுலகிலுள்ள அப்பரம புருஷனிடமிருந்தே நெருப்பிலிருந்து தீப்பொறிகள் கிளம் புவனபோல் (அணுக்களான ஜீவர்கள் முதலாக)

எல்லாம் பிறக்கின்றன. மேலுலகிலிருப்பதாய் எங்கும் பரவி ஜீவ விலக்ஷணமாய் மூலப்ரக்ருதிக்கு மேலான ஜீவனுக்கும் மேலான இவனிடத்தினின்றே ப்ராணனும், மனது முதலிய மற்றைக் கருவிகளும், பஞ்ச பூதங்களும், உலகங்களும், உலகப் பொருள்களும், வேதங்களு மெல்லாம் உண்டாகின்றன. இவனுக்கு உலகெல்லாம் உருவங்களாக இவன் விச்வரூபனாகிறான். இவன் அந்தர்யாமியாயிருக்க எல்லாம் உண்டாகின்றன.

4. ப்ரணவம் என்கிற வில்லைக்கொண்டு ஜீவாத்மாவாம் அம்பை உபாஸனையால் கூர்மையாக்கித் தொடுத்து ப்ரஹ்ம மென்ற இலக்கியத்தில் எறியவேண்டும். அதே மோக்ஷத்திற்கு உபாயம். இவனே பரமபதத்திலுமுள்ளவன். எங்கும் இருப்பவன். இப்படிப்பட்ட காரண வஸ்து ஹ்ருதயத்திலுள்ளது. இதைக் கண்டவனுக்கு ராகம், த்வேஷம் முதலான முடிவுகளும், ஐயங்களும், வினைகளுமெல்லாம் கழன்றுவிடும். அந்த சோதியின் எதிரில் வேறொரு சோதியும் விளங்காது. அதனாலே எல்லாம் விளங்கும்.

5. உடல் ஒரு மரம். அதில் இரண்டு அழகிய பக்ஷிகள் குடியிருக்கின்றன. ஒன்று அதில் பழுக்கும் பழங்களை யெல்லாம் உண்கிறது. மற்றொன்று உண்ணாமல் மிக்க ஒளியுடன் விளங்குகிறது. இங்ஙனமுள்ள கர்மியான ஜீவன் தன்னைக்காட்டிலும் வேறான பரம புருஷனையும் அவன் ப்ரபாவத்தையும் அறிந்தால் மோக்ஷம் பெறுவான். உபாதாந காரணமாயும், நிமித்த காரணமாயுமுள்ள அவனைப் பார்த்தவர்களுக்கு, புண்ய பாபங்கள் கழிந்து அவனோடு சிறந்ததொரு ஸாம்யத்தைப் பெறுவதே மோக்ஷமாம். கர்மங்களை நன்கு செய்துகொண்டேயிருப்பவனே ப்ரஹ்ம வித்யை யநுஷ்டிப்பவரில் சிறந்த ஜ்ஞானி. ஸத்யம், தவம், நல்லறிவு, ப்ரம்மசர்யம் எல்லாம் வேண்டும். பிரம்மவித்துக்களை யாராதிப்பவனுக்கே.

ஸர்வலோகமும் ஸர்வபலனுமாம். (ஆக ப்ரம்ம வித்துக்களிடம் அபசாரம் தகாதென்பது சொல்லாமலே விளங்கும்.)

6. ப்ரஹ்மோபாஸநத்தில் இழிந்தவனுக்குக் கர்ம பலன்களிலே நசை தகாது. ஆசார்யனருகில் கேட்பது, தானும் பிறகு ஆராய்ந்து தெளிவது, த்யாநம் செய்வது என்றவை மட்டும் போதா; பகவானின் அனுக்ரஹமும் வேண்டும். அவ் அனுக்ரஹம் பெறத் திறம் பெற்றவனுக்கே அவன் தன் உருவை நன்கு தோன்றுவிக்கிறுன். திடம், தபஸ்ஸு, வெளியாசாரம் எல்லாம் வேண்டும். அஜாக்ரதை—கவனமற்றிருப்பது தகாது. (பக்தி யோகம் பெறக் கருவிகளாக ஆன்றோர் (ப்ரஹ்மநந்தி) வகுத்தனவாக ஸ்ரீ பாஷ்யத்திற் குறிக்கப்பட்ட ஏழும் இங்கே கருதப் பெறும். அவையாவன—விவேகம், விமோகம், அப்யாஸம் க்ரியை, கல்யாணம், அநவஸாதம் அநுத்தர்ஷம் என்பனவாம். விவேகமாவது சாஸ்த்ர ஸம்மதமான சுத்தமான ஆஹாரத்தையே உட்கொண்டு உடலை ஆபாஸவுடலை விட வேறு படுத்துகை. விமோகமாவது பற்றற்றிருக்கை; அப்யாஸமாவது—பக்திக்கு இலக்கான ப்ரஹ்மத்தையே சிந்தை செய்து வருகை க்ரியை வைதிக கர்மானுஷ்டானம்; கல்யாணமாவன — ஸத்யம், முக்கரணங்களு மொத்திருக்கை, தயை நன்கொடை, ஹிம்ஸிக்காமை, பிறர்கேட்டைச் சிந்தியாமை என்பனவாம். அநவஸாதமாவது — சோர்வற்றிருக்கை. அநுத்தர்ஷம் — அதிக மகிழ்ச்சிக்கு ஆளாகாமை) பக்தியோகத்தை ஸாதிக்க இப்படியெல்லா உபாயங்களும் சேர்ந்தால்தான் ப்ரஹ்மத்தைப் பெறலாம். பக்தியால் இவன் மோக்ஷம் பெற இடையூறான வஸ்துக்கள் கர்மங்களெல்லாம் விலகிவிடுகின்றன. பெருகும் ஆறுகள் கடலினுட் புகுந்து தம் பேரையும் உருவத்தையும் விட்டொழிகின்ற வண்ணம் அறிஞனை சேதனனும்—ஆத்மாவும் பேரும் உருவமும் விட்டொழியப்

பெற்று பரம பதத்திலுள்ள பரம புருஷனை நெருங்கியிருந்து விடுகிறான். இப்படிப்பட்டவனுடைய ஸந்ததியும் ப்ரஹ்மஜ்ஞான முள்ளதாகவே யிருக்கும்.

இது முண்டகோபநிஷத்ஸாரம். இவ்வுபநிஷத்து, 'முண்டகம் எனப்படும் மூன்று பிரிவாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பிரிவிலும் கண்டங்கள் இரண்டு. ஆக ஆறு பிரிவுகள்.

## 6. மாண்டுக்யோபநிஷத்து

இது ஒரு சிறிய உபநிஷத்து. ஆகிலும் கண்டங்கள் நான்கு. இது ப்ரணவத்தில் அக்ஷரங்களைப் பிரித்து உபாசநத்தை உபதேசிப்பதாகும். இவ் அக்ஷரங்களுக்கு, பல ப்ரமாணங்களிலே பொருள்கள் கூறப்பட்டுள்ளன. இது இவ்வக்ஷரங்களை வைச்வா நரன், தைஜஸன் ப்ராஜ்ஞன் என்றவாறு உபாஸிக்க வேண்டுமென்கிறது. அதற்காக முதலில் ப்ரணவத்தை இவ்வண்ணம் வர்ணிக்கிறது—'எல்லாம் ஓம் என்னும் ப்ரணவமே. இறந்தது பிறந்தது, பிறக்கப் போவது எனப்படும் மவையும் கால வரைக்குட் படாதவையும் எல்லாம் இதுவே. நாலு பதங்களுள்ள ஆத்மாவான ப்ரஹ்மமும் இதுவே என்று.

2.வது கண்டத்தில்-'ஆத்மாவின் பதங்கள் வைச்வாநரன், தைஜஸன், ப்ராஜ்ஞன், துரீயனென நான்கு' என்றது. ஜீவனுக்கு விழிப்பு, சொப்பனம், உறக்கம், மோக்ஷம் என நான்கு தசைகள் உள. ஒவ்வொரு தசையை நிர்வாகிப்பது ஒவ்வொரு மூர்த்தி. அதற்குத் தக்கபடி அதை வர்ணித்து இம் மூர்த்திகளே ஸ்ருஷ்டி ஸ்திதி வியாபாரங்களுக்குக் காரணமென்றும், 'இவ் வியாபாரங்களின்றி சாந்தமாய் இருப்பது நான்காவது மூர்த்தி; அதுவே ஆத்மா; அதனை யறிய வேண்டும்' என்றும் இங்கே கூறிற்று. இந்த வைச்வாநரன்,

தைஜஸன், ப்ராஜ்ஞன், துரீயன் என்ற பதங்கள் நான்கும் முறையே அநிருத்தன், ப்ரத்யும்னன், ஸங்கர்ஷணன், வாஸுதேவன் என்ற பகவந்மூர்த்திகளென நம் உபநிஷத் பாஷ்யகாரர் விவரித்துள்ளனர். இது ஸ்ரீ பாகவதம் (12, 11), ஸ்ரீ பாஞ்சராத்ரம் முதலான இடங்களில் வெகு விரிவாக வர்ணிக்கப் பெற்றதேயாம். இப்படி ஜீவனுடைய விழிப்பு சொப்பனம் முதலிய நிலைகளை நிர்வஹித்துக் கொண்டு கூட நின்றாலும் பரமாத்மாவுக்கு ஹேயம் சிறிதுமில்லை யென்று இதன் கருத்தை விளக்குகின்றது. ப்ரஹ்ம ஸூத்திரத்தில் உபயலிங்காதிகரணமென்ற அதிகரணமென்று ஸ்ரீ பாஷ்யத்தில் மிக ஊன்றித் தெளிக.

3-வது கண்டத்தில் ப்ரணவத்திலுள்ள அகரம், உகரம், மகரம் என்ற அக்ஷரங்களை மூன்று வ்யூஹ மூர்த்திகளாக பாவிப்பதும் அதன் பலனும் கூறப்பெற்றன.

நான்காவது கண்டத்தில் இப்படி தனி அக்ஷரமாகாத அம்சம் அல்லது முழு ப்ரணவம் ஆத்மாவான முக்ய மூர்த்தியாக பாவிக்கப்படுவதும், அதன் வாயிலாகமோக்ஷ பலன் பெறலாவதும் ஓதப்பெற்றன.

ஸ்ரீ பாஞ்சராத்திரத்தில் ப்ரஸித்தமான வ்யூஹ ரூபங்களைப் பற்றிய விரிவு பூர்வாசார்ய க்ரந்தங்களிலும் குறிக்கப் பெற்றிருக்கிறது. அதை இங்கே சுருக்கமாக அறிவிக்கிறோம். வ்யூஹங்களாவன—பொதுவாக லீலாவிபூதியை நடத்துவதற்காக வேண்டும். குணங்களைப் பிரித்துத் தோன்றுவித்த பகவத்ரூபங்கள் பரவாஸுதேவ மூர்த்தியானது முக்தி பெறுமவர்களைக் கைக்கொண்டு போகமளிக்க வானது. வ்யூஹ ரூபங்கள் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்கானவை. ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் மூன்றான படியாலே அம்மூன்றை நடத்தும் மூன்று ரூபங்களான ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்த

மூர்த்திகளை மட்டும் கொண்டு வ்யூஹங்கள் மூன்று என்பர் சிலர். பகவானுடைய ஷாட்குண்யமான ஜ்ஞாந-பல ஐச்வர்ய வீர்ய-சக்தி—தேஜஸ்ஸுக்களில் ஞான பலங்கள் ஸங்கர்ஷண மூர்த்தியில் தோன்றும்; ஐச்வர்ய வீர்யங்கள் ப்ரத்யும்ன மூர்த்தியில்; சக்தியும் தேஜஸ்ஸும் அநிருத்த மூர்த்தியில், ஸங்கர்ஷணன் செய்வது ஸம்ஹாரமும், சாஸ்த்ர ப்ரசாரமும்; ப்ரத்யும்னன் செய்வது ஸ்ருஷ்டியும் தர்ம வ்யவஸ்த்தையும்; அநிருத்தன் செய்வது ரக்ஷணமும் அறிவை யளிப்பது மென்பர். உண்மையில் வ்யூஹங்கள் நான்கே. முதல் வ்யூஹம் வாஸுதேவன் எனப்படும். மூல வாசுதேவனை விட வேறுபாடு தோற்ற அவனை பரவாஸு தேவனென்றும், இம்மூர்த்தியை வ்யூஹ வாஸுதேவ னென்றும் சொல்லுகிறது. ஸங்கர்ஷணாதிகளுக்குத் தனித் தனியே செயல்கள் பிரிக்கப்பட்டுள்ளன. வ்யூஹ வாஸு தேவன் எல்லாவற்றிற்கும் பொதுவாம். ஆகவே இம் மூர்த்தியில் ஆறு குணங்களுக்கும் தோற்றமுண்டு. ஆறு குணங்களும் இருத்தலாலும் வாஸுதேவனென்ற ஒரே பெயருள்ளமையாலும் வாஸுதேவனை ஒன்றாகச் சொன்ன லும் உண்மையில் பர வ்யூஹ பேதத்தாலே வாஸுதேவ மூர்த்திகள் இரண்டேயாம்.

அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையிலும் அகராதிகளின் பொரு ளாக வ்யூஹ மூர்த்திகள் விரித்துரைக்கப் பெற்றன. லக்ஷ்மீ தந்த்ரத்திலும், ஸாத்வத ஸம்ஹிதையிலும்கூட வ்யூஹம் மிக விரிவாகவும் வரையப் பட்டுள்ளது. அது பின்வருமாறு—பரமபதத்தில் எம்பெருமானுடைய ரூபம் விசாக யூபம் என்கிற பெயருடையதொன்றுண்டு. இதுவும் முண்டகோபநிஷத்தில், 'வ்ருக்ஷ இவ ஸ்த்தப்த்த: திவி திஷ்ட்டதி ஏக:' என்னப்பட்டது போலும். அந்த நீண்ட மரம் போன்ற உருவத்தில் நாலு இடங்களில் நான்கு பக்கங்களிலும் கிளைகள்போல் கிளர்ந்த உருவங்கள் அமைந்திருக்கின்றன. ஒவ்வோரிடத்திலும் கிழக்கினின்று

வடக்கு வரையிலான நான்கு திக்குகளிலும் நான்கு கலை களாம். மூர்த்திகள். ஒவ்வொரு நான்கு மூர்த்திகளும் வாஸுதேவஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்த மூர்த்திக ளாக முறையே மொழியப்படும். அங்கே நுனியிலுள்ள நாலு மூர்த்திகளுக்கு அங்க ப்ரத்யங்கங்கள் நன்றாகப் பிரிக்கப் படாத குணங்களின் தோற்றம் மட்டுமுண்டு. அடுத்த கீழ்ப்பாகத்திலுள்ள நான்கு மூர்த்திகளில் கிழக்கிலுள்ள வாஸுதேவ மூர்த்தி முன் வாஸுதேவ மூர்த்தியைவிடச் சிறிது ஸ்பஷ்டமானாலும் அங்கே தெற்கு முதலான திக்கு களிலுள்ள ஸங்கர்ஷணாதி மூர்த்திகளுக்கே கைகால் முத லான அங்கங்கள் விளங்கா நிற்கும். ஆயுவம் முதலா னவை ரேகை மட்டுமாயிருக்கும். இப்படி ஓரிடத்தில் வாஸுதேவ மூர்த்தி தெளிவற்றும் மற்ற மூர்த்திகள் தெளிவாகவுமிருப்பதாலும் வ்யூஹங்கள் மூன்றென்கிற நாம். அதற்கும் கீழான இடத்தில் நாலு மூர்த்திகளும் அங்க ப்ரத்யங்கங்கள் அமைந்து ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம் ஹாரங்களில் நோக்குத் தோன்றும்படியும், நிறம், ஆயு தம் முதலானவை ஸ்பஷ்டமாகவும், த்வஜாதிகள் மட்டு மில்லாமலுமிருக்கின்றன. அதற்கும் கீழான இடத்தில் நான்கு ரூபங்கள், ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களிலே நோக்கு மட்டுமின்றி அச்செயல்களையும் உடையனவாய் த்வஜாதிகளையும் பெற்று மிக மிகத் தெளிவாக விளங்கு கின்றன.

இப்படி வாஸுதேவாதி மூர்த்தி ஒவ்வொன்றுக்கும் நாலு நிலைகள் இருப்பன. ஜீவனுடைய விழிப்பு, சொப் பனம், உறக்கம், மயக்கம் என்ற நான்கு அவஸ்த்தை களுக்கு ஒத்திருக்கின்றன என்று கொண்டு, கீழே ஜாக்ரந் மூர்த்தி, மேலே ஸ்வப்நமூர்த்தி, மேலே ஸுஷுப்தி மூர்த்தி அதன்மேலே துரீயம் அதாவது மூர்ச்சாமூர்த்தி என்று ஒவ்வொரு மூர்த்தியையும் நான்கு விதமாகச் சொல்வதுண்டு. (துரீயமாவது மோக்ஷமென்று கீழே

கூறப்பட்ட வகை வேறு.) விழித்திருப்பவன் எல்லா வியாபாரங்களையும் செய்கிறன். அவ்வண்ணமே ஜாக்ரத்தான வாஸுதேவாதி மூர்த்திகளும் ஸ்ருஷ்டி முதலான வியாபாரங்களை யெல்லாம் செய்து வருகிறன. ஸ்வப்னத்தில் ஜீவனுக்கு நோக்கம் முதலியன இருந்தாலும் உடலின் செயல் தோன்றுவதில்லை. அங்ஙனமே ஸ்வப்ன வாஸுதேவாதி மூர்த்திகளில் உறக்கத்தில் ஜீவனுக்கு நோக்கமுமிரா. ஆகிலும் மூச்சுவிடுவதுண்டு. அவ்வாறு ஸுஷுப்தி மூர்த்திகளில் மூர்ச்சையில் மூச்சுயில்லாமை போல் துரீய மூர்த்திகளில் எல்லாம் மறைந்திருப்பதாம். இப்படி ஜீவ நிலைகளுக்கொத்திருக்கும். இப்படி பொதுவாக சரீரம் பெற்ற ஜீவனுக்கு விழிப்பு முதலான நாலு நிலைகள் இருக்க இவையன்றி, அவன் செய்யும் த்யானத்திலும் நாலு நிலைகளைக் குறிப்பர். அதாவது—வெளி வஸ்துக்களிலே விசேஷமாக ஈடுபட்டுக்கொண்டே எம்பெருமானைச் சிந்திப்பது ஜாக்ரத் த்யானமென்றும், வெளி வியாபாரங்கள் ஒழிந்து மனது மட்டும் வெளி விஷயங்களிலும் பற்றை விடாமலிருக்க எம்பெருமானின் சிந்தனை ஸ்வப்ந த்யானமென்றும், அதுவுமின்றி அந்த வெளி வாஸனையோடு மட்டும் கலப்புண்ட சிந்தனை ஸுஷுப்தி த்யானமென்றும், எல்லாம் விலக எம்பெருமானின் த்யானமொன்றே நிற்கும்போது மூர்ச்சா த்யானமென்றும் வகுத்துக் கூறுவர்.

இவ்வண்ணம் நாலு மூர்த்திகளும் நான்கு வகைகளாகப் பிரிந்திருப்பது ஸ்ரீ பாஞ்சராத்ரத்தில் பணிக்கப்பட்டது. ஸஹஸ்ரநாமாத்யாயத்திலும், 'சதுராத்மா சதுர்வ்யூஹ:!' என்னப்பட்டதென்னலாம். ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் அபியுக்தர்களின் ச்லோகங்களைக் கொண்டும், வரதராஜ பஞ்சாசத்தில் ஒரு ச்லோகமாகவும் ஸ்ரீ தேசிகன் அருளிச் செய்திருப்பதை ஸாராஸ்வாதினி முதலான உரைகளுடன் அறிந்து இதனைத் தெளிக.

இவ்வளவும் ஜாக்ரத், ஸ்வப்நம், ஸுஷுப்தி துரீயம் என்ற பிரிவுகளைக் காட்டும். இம்மாண்டூக்யோபநிஷத்தில் கருதப்பெற்றது போலும்.

இம்மூர்த்திகளில், லீலாவிபூதியில் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களில் ப்ரஹ்ம ருத்ராதிகளின் ப்ரேரணைக்காக, வாஸுதேவ மூர்த்தியினின்று ஸங்கர்ஷண மூர்த்தி, அதனின்று ப்ரத்யும்ன மூர்த்தி, அதினின்று அநிருத்த மூர்த்தி தோன்றுமென்பதும், ஸங்கர்ஷணன் ஜீவதத்துவத்திறகு அபிமானி, ப்ரத்யும்னன் மனஸ்ஸுக்கு அபிமானி, அநிருத்தன் அஹங்காரத்திற்கு அபிமானி என்பதும் பஞ்சராத்திரத்தில் ஓரிடத்தில் கூறப்பட்டிருப்பதாகவும், மோக்ஷம் பெற விரும்புவோர் முதலில் அநிருத்தனையும் பிறகு, ப்ரத்யும்னனையும் பிறகு ஸங்கர்ஷணனையும் பெற்று வாஸுதேவனைப் பிறகு பெற விரும்பினால் அவர்கள் விஷயமான உபாஸனம் ஒரு படி யுண்டென்று சொல்லப்பட்டிருப்பதாகவும் ஸ்ரீ பாஷ்யத்திலே அருளிச்செய்தார்.

உறங்கும்போது ஜீவாத்மா மட்டும் ஸுக ரூபமாக ப்ரகாசிப்பது உண்டாகையால், ப்ரளயத்தைப்போல் உறக்கத்தை நடத்தும் ஸங்கர்ஷணனை ஜீவதத்துவாபிமானியென்கிறது. சொப்பனத்தில் மனது மட்டும் வேலை செய்வது பெரும்பாலும் இசையப் பெற்றது எல்லோராலுமென்று—சொப்பனம், ஸ்ருஷ்டி இவற்றை நிர்வஹிக்கும் ப்ரதயும்னனை மனஸ்ஸுக்கு அபிமானி யென்கிறது. அஹங்காரமாவது தேஹாத்ம ப்ரமத்திற் குரியது. இது தேஹாதிகளைக் கண்ணுற் காணும்போது கார்யம் செய்வது எளிதிலாம். ஆகவே விழிப்புக்கும் பரிபாலனத்திற்கும் காரணமான அநிருத்தனை அஹங்காரத்திற்கு அபிமானியாகச் சொல்லுகிறது.

இவ்வாறு ஆராயப் புக வ்யூஹ விஷயம் மிகப் பெரி

தாம். இதற்கெல்லாம் மூலமாகும் இந்த மாண்டூக்யோப நிஷத்து. இந்த உபநிஷத்தில் அத்வைதம் என்ற பத மிருப்பதாலும், 'இந்த ஆத்மா ப்ரஹ்மம்' என்ற சொல்லால் ஜீவனே ப்ரஹ்மமென விளங்குமென்கிற எண்ணத்தினாலும் அத்வைதத்தை வைதிக மாக்குவதற்காக—அத்வைதம் பௌத்த மதமென்ற லோக ப்ரஸித்தியைப் போக்குவதற்காக (ஆகவே, 'நைதத் புத்தேந பாஷிதம்' என்றது முடிவில்—கௌடபாதரென்பவர் உரையிட்டார். இவர் ஸ்ரீ சங்கராசார்யருக்கு ப்ராசார்யர். ஸ்ரீ பகவத் ராமானுஜருக்கு தம் ப்ராசார்யரான ஆளவந்தாரின் பல ஸூக்திகள் போல் சங்கராசார்யருக்கு இவருடைய இந்த க்ரந்தமே அத்வைதஸாரமெல்லாம் விளக்கினதாம். இதனைக் கொண்டு அவர் ச்ருதிகள், ஸூத்ரங்கள், கீதை போன்றவற்றிற்கு பொருளை விரித்ததத்தனை. இந்த கௌட பாத க்ரந்தத்தில் நான்கு ப்ரகரணங்கள்—ஆகம ப்ரகரணம், வைதத்ய ப்ரகரணம், அத்வைத ப்ரகரணம் அலாத சாந்தி ப்ரகரண மென்பன. எல்லாம் அநுஷ்டுப் ச்சோகங்களே (காரிகைகளே). முதல் ப்ரகரணம் மாண்டூக்யோபநிஷத்தின் பொருளையே சுருக்கிச் சொல்லுவதால் ஆகம ப்ரகரணமெனப்படுகிறது. இதை ஸ்தாபிப்பதற்காக மேலே மூன்று ப்ரகரணங்கள் ஸ்வதந்த்ரமானவை சொப்பனம், மாயை முதலானவை போல் உலகம் பொய் என்றார் வைதத்ய ப்ரகரணத்தில்: "எல்லாம் பொய்யானாலும் ஒன்று உண்டு. அது ஆத்மா, விஞ்ஞானம்! என்றார் அத்வைத ப்ரகரணத்தில். நான்காம் ப்ரகரணத்தில், 'பிற மதங்கள் முரண்படும். அத்வைத மதத்திற்கு எதிர்ப்பில்லை' என்றார். கொள்ளிக் கட்டை அலாதமென்பது. அது போன்ற மதங்களெல்லாம் அழியுமென்னலாம். கொள்ளிக்கட்டையைச் சுற்றினால் அதில் இல்லாத பல (மண்டலமாயிருக்கை

போன்றன) தோற்றுகிறதுபோல் ப்ரஹ்மமென்ற ஒன்றில் எல்லாம் தோன்றி சாந்தமாகுமென்னலாம். கார்யம் காரணமென்று லோகத்திலும் சொல்லி ப்ரபஞ்ச விரிவு செய்வதெல்லாம் வெறும் கல்பனையென்க என்றார் இதில்.

வ்யூஹ மூர்த்திகளைப் போலே ஸ்ருஷ்டி முதலான வியாபாரங்களில் பாகுபாடும் பல மூர்த்திப் பிரிவுமில்லாமலிருப்பதால் வாஸுதேவ மூர்த்தியை அத்வைத மென்கிறது. ஆகையால் 'ஏகமேவ அத்விதீயம்' என்கிற வாக்யம் போலவே அத்வைத பதம் அத்வைத மத ஸ்த்தாபகமாகாது. இங்கே ஜீவ ப்ரஹ்மைக்யம் சொல்லப்படவில்லை. ஜீவதசைகளை நிர்வஹிக்கும் மூர்த்திகள் ஜீவனுக்கு ஒத்திருப்பது மட்டுமுளது. அவன் இவனுக்கு அந்தர்யாமி. மற்ற விஷய விரிவு உரையிலே காணலாம். பாரதம், பாகவதம், பாஞ்சராத்ரம் முதலான க்ரந்தங்களுக்கு இணங்க வ்யூஹ விஷயமாக மாண்டுக்யோபநிஷத்திற்கு உரை செய்வதே தகும். உலகம் பொய்யென்பதற்கு இங்கே சிறிது மிடமில்லை. இவ்வளவு மூர்த்திகளையெடுத்துக் காட்டும் மாண்டுக்யத்தை இப்படி புராண பாஞ்சராத்ரங்களுக்குச் சேர உரைக்காமல் நிர்விசேஷ ப்ரஹ்ம விஷயமாக உரைத்து உலகம் பொய்யென்ன கௌடபாதர் செய்த தகாத விரிவை விட்டொழித்து ஸர்வ ப்ரமாணங்களுக்கும் யுக்திக்கும் பொருத்தமான விசிஷ்டாத்வைதிகள் இசைந்த விரிவு இவ்வாறுமென்று குறித்தோம். இப்படி அத்வைத ஸ்த்தாபனத்திற்கான கௌடபாத க்ரந்தத்தின் முதல் ப்ரகரணத்தையும், அதற்கு வைத்த ஆகமமென்ற பெயரைக் கண்டு போலும் மாண்டுக்யோபநிஷத்தாகவே சிலர் நினைத்து (தம் மதத்திற்கிணங்க அத்வைதத்திற்கு விரோதமாகவே) உரையும் செய்துள்ளனர். உண்மையில் மாண்டுக்யோபநிஷத்தில் ச்லோகங்களில்லை; மற்ற விரிவு வேறிடத்தில்.

இப்படி ப்ரணவத்திற்கு வ்யூஹ மூர்த்தி விஷயமாக விவரணம் செய்த மாண்டூக்யோபநிஷத்தில் ஸாரம் சொல்லப்பெற்றது. இவ்வாறு அதர்வ வேதத்திற் சேர்ந்த பிப்பலாத சாகையிலுள்ள ப்ரச்னோபநிஷத்து, முண்டக சாகையிற் சேர்ந்த முண்டகோபநிஷத்து, மண்டூக சாகையிற் சேர்ந்த மாண்டூக்யோபநிஷத்து என்ற மூன்று உபநிஷத்துக்களின் ஸாரம் கூறப்பெற்றது.

## 7. தைத்திரீயோபநிஷத்து

இனி தைத்திரீயோபநிஷத்தின் ஸாரம் குறிக்கப்படுகிறது. க்ருஷ்ண யஜுர்வேதத்திலுள்ள தைத்திரீய சாகையில் ஆரண்யகத்தில் 5-வது ப்ரச்நமும் 6-வது பிரச்நமும் தைத்ரீயோபநிஷத்தாம். இவற்றில் முதல் ப்ரச்நத்தில் சிக்ஷாவல்லி, ஆநந்தவல்லி அல்லது ப்ரஹ்ம வல்லி, ப்ருகுவல்லி என மூன்று பிரிவுகள் அடங்கியுள்ளன. ஸ்ரீ சங்கராசார்யரும் ஸ்ரீ ஆநந்ததீர்த்தா (மத்வா) சார்யரும் இந்த ஒரு ப்ரச்நத்திற்கே உரை செய்திருக்கின்றனர். 108 உபநிஷத்துக்களின் பதிப்பில் இப்ரச்நம் மட்டுமே தைத்திரியோபநிஷத்தென பிரிக்கப்பட்டு, 6வது ப்ரச்நமானது நாராயணோபநிஷத்து என்னும் வேறு உபநிஷத்தாக எண்ணப்பட்டிருக்கின்றது. இப்படி பிரித்தாலும் உண்மையில் இவை இரண்டும் தைத்திரீயாரண்யகத்தில் தொடர்ச்சியாக அமைந்திருப்பதால் எல்லாம் தைத்திரீயோபநிஷத்தென வழங்குவது தவறாகாது; பொருத்தமுள்ளதே, இவற்றை ஒரு க்ரந்தமாக்கி, தனித் தனியாக மங்கள ச்லோகம் முதலியன அருளிச் செய்யாமல், நம் உபநிஷத்பாஷ்யகாரர் பாஷ்யம் இயற்றியருளினார். இப்படியே அதற்கு முன் ஸ்ரீ கூரநாராயண ஜீயரும், பட்ட பாஸ்கரருமெனவும் காண்க. 6-வது ப்ரச்நமான நாராயணோபநிஷத்துக்கு சங்கராசார்யர் முதலானோர் உரை செய்யாவிடினும் பாஸ்கரரும், வித்யாரண்யரும்

மற்றும் மத்வ ஸம்ப்ரதாயஸ்தரும் வ்யாக்யானம் செய்தே யிருக்கின்றனர்.

இவ் இரு ப்ரச்நங்களை ஸாம்ஹிதீ உபநிஷத்து, வாருணீ உபநிஷத்து, யாஜ்ஞிகீ உபநிஷத்து என மூன்ருகவும் பிரிப்பதுண்டு. முதலில் ஸம்ஹிதோபாஸநத்தின் வகையைத் தொடங்கி இருப்பதைக் கணிசித்து சிக்ஷா வல்லிக்கு ஸாம்ஹிதீ எனப் பெயர் வழங்கினர். ஆநந்த வல்லியும் ப்ருகுவல்லியும் ஆநந்தமய ப்ரஹ்ம வித்யையே சொல்வதால், ஸைஷா பார்கவீ வாருணீ வித்யா' என் ஶ்ருதி யுள்ளதற் கிணங்க, அவ்விரண்டு வல்லிகளுக்கும் வாருணீ உபநிஷத்து எனப் பெயராம். மேல் நாராய ணோபநிஷத்து யாஜ்ஞிகியாம். இவ்வண்ணமே சிக்ஷை என்கிற வேதாங்கத்திற் கூறும் விஷயங்களைக் குறிக்கும் சிக்ஷாத்யாயம் முதலிலிருப்பதாலே முதல் வல்லிக்கு சிக்ஷாவல்லி யென்றும் பெயராம். ஆநந்தமய வித்யை யையே உபதேசிக்கப் பிறந்த அடுத்த வல்லிக்கு, எம் பெருமானுடைய ஆநந்தத்திற்கே அளவிட முடியா மையை அது அறுதியிட்டிருப்பதாலே ஆநந்தவல்லி யென்றும், 'ப்ரஹ்மவித் ஆப்நோதி பரம்' என்று ப்ரஹ்ம சப்தம் தொடக்கமாயுள்ளதால் ப்ரஹ்மவல்லி யென்றும் பெயராம், இது வாருணி உபநிஷத்தின் முன்பாகம். பின் பாகமான மூன்ருவது வல்லியானது இவ்வித்யையை ப்ருகுவுக்கு அவர் பிதாவான வருணன் உபதேசித்த முறையை விளக்குவதால் ப்ருகுவல்லி யெனப் படுகிறது. 2வது ப்ரச்னம் யக்ஞன் என்ற நாராயணன் என்னும் ரிஷியினுல் ஸாக்ஷாத்கரிக்கப் பட்டிருப்பதைக் கொண்டு யாஜ்ஞிகி யென்றும், நாராயணோபநிஷத்து என்றும் பேர் பெறுமென்பர். நாராயணுநுவாகம் நடுநாயகமாய்த் திகழ இப்ரச்நமானது முற்றிலும் நாராயணனையே நன்கு உரைப்பதால் நாராயணோபநிஷத்து என்றும், அவனை

ஆராதிக்கும் முறையை உணர்த்துவதால் யாஜ்ஞிகி என்றும் சொல்லப்படுகிறதென்று கூறிலும் உள்ளபடி கூறினதேயாம். இந்த ப்ரச்நமானது நித்ய கர்மானுஷ்டானத்திலும், பஞ்ச கால ப்ரக்ரியையிலும் நோக்குள தென்று உபநிஷத் பகிஷ்காரத்தில் விளங்க உரைத்துளோம்.

## சிக்ஷாவல்லி

இங்கு முதலில் சாந்தி பாடம் (ஐதரேயோபநிஷத்தின் சாந்தி பாடத்தின்படி). (இரவும் பகலும் எப்போதும் வேதம் ஓதிவர விரும்பும்) எனக்கு (இவ்விராப் பகல்களுக்கு தேவதைகளான) மித்ரா வருணர்களும், என்னுடைய கரண களேபரங்களுக்கு அபிமானிகளாய் உலகளந்த பிரான் அளவாயுள்ள தேவதைகளும், வேதமும் வேதமாய்ப் பரிணமித்து வரும் வாயு தேவதையும் சுகமளித்து நன்கு ஓதச் செய்து என்னையும் எனது குருவையும் காக்க வேணுமென்று ஒரு பிரார்த்தனை முறையை இது விளக்குகிறது.

மோக்ஷமென்னும் பெரும் பேற்றைப் பெற உபாயங்களை உபதேசிக்கவே உபநிஷத்துக்கள் விளங்குகின்றன கரண களேபரங்கள் எனப்படும் ப்ராணேந்த்ரிய சரீரங்கள் இராதபோது ஜீவன் அவ்வுபாயங்களை அநுஷ்டிக்க வியலாது. 'சரீரம் ஆத்யம்கலு தர்மஸாதநம்' என்றார்களல்லவா? இப்படி கரணகளேபரங்கள் அமைந்தாலும் உபகரணங்கள் இல்லாவிடில் என்ன செய்ய முடியும்? எம்பெருமானும் போக்ய போகோபகரணங்களைப் பல வண்ணமாக ஸ்ருஷ்டித்துப் பல சேதநர்களுக்கும் பரஸ்பரம் சேர்க்கையை ஏற்படுத்தி யிருப்பதெல்லாம் இவ்வளவு ஸௌகர்யங்களில்லாதபோது இவர்களை க்ருத்யர்களாக்கித் தான் மோக்ஷ ஸ்தானத்திற்கு அழைத்துக்கொள்ள முடியாதென்று அவன் நினைத்தே. ஆகவே எம்பெருமானைப் பெற உபாஸநத்தில் இழியுமவர்கள் பல

விதமாக ஐஹிக ஸுகங்களைக் கோருவர்கள். அதனால் அப்படி கோரப்படும் அற்ப பலன்களுக்கும் விரகுகளை விளங்கச் சொல்வதில் உபநிஷத்துக்குப் பொறுப்பு ஏற் படுகிறது. ஆகையாலே கர்ம காண்டங்களிற் கண்ட பலவகையான ஆமுஷ்மிக புருஷார்த்தங்களிலே ப்ரவர்த் தித்தவர்களுக்கு அவை அழிவுற்றவை யென்றும் அற்பங் களென்றும் தெளிவித்து அவற்றில் நசை யற்றிருக்கும் போது பரமபுருஷார்த்தமான பகவத் ப்ராப்தியைப் பரக்க உபதேசிக்கவே பிறந்த உபநிஷத்துக்கள் மோக்ஷத்திற் காம் உபாஸனை செய்பவருக்கே வேண்டும் ஐஹிக பலன் களுக்காகவும் அநேகம் வழிகளை வர்ணிக்குமென்று தெளிய வேண்டும்.

இத் தைத்திரீயோபநிஷத்தும் ப்ரணவம், வ்யாஹ்ருதி இவைகளை மந்த்ரங்களாகக்கொண்ட ஓர் உபாஸனத்தை மோக்ஷத்திற்காக இந்த சிக்ஷா வல்லியிலேயே உபதேசிக் கப் போகின்றது. மற்றும் பல உபாஸனைகள் மேலேயாம். ஆகவே, இது உபாஸகனுக்கு வேண்டும் ஸௌகர்யங் களுக்குப் பல வழிகளைச் சொல்லக் கருதிற்று. ப்ரண வத்திலுள்ள ஓகாரமானது அகர உகரங்களின் இணைப்பி னால் வந்திருப்பதால் இப்படியுள்ள ஸம்ஹிதை அதாவது இணைப்பு என்றதின் விஷயமாக உபாஸனத்தைப் பின் வருமாறு உபதேசிக்கத் தொடங்கிற்று.

'வேதத்திற்கு அங்கமான சாஸ்த்ரங்கள் ஆறு. அவற்றிலொன்றான சிக்ஷையென்ற சாஸ்திரத்திலே, வர்ணம், ஸ்வரம், ஹ்ரஸ்வ தீர்க்காதி மாத்திரை, உச்ச ரிப்பதற்கு வேண்டிய ப்ரயத்ன பலம் (வலிவு), ஸாம, ஸம்ஹிதை எனப்படும் ஸந்தானம் என்றவை கூறப்பட் டுள்ளன. இவற்றில் ஸம்ஹிதா விஷயமான ஓர் உபா ஸனத்தைச் சொல்லுகிறோம். ஸம்ஹிதையாவது இணைப் பன்றோ. இணைவதற்கு இரண்டு வர்ணங்கள்—அக்ஷரங்

கள்—இரண்டு உரு வேண்டும். அவையே பூர்வ ரூபமும் உத்தர ரூபமும். அவற்றைச் சேர்க்கும் வழியென்ற ஸந்தாநமொன்றுண்டு. அதன்படி இணைத்து ஏற்பட்ட ரூபம் ஸந்தியென்றும் ஸம்ஹிதையென்றும் சொல்லப் படும். இந்த பூர்வ ரூபம், உத்தரரூபம், ஸந்தி, ஸந்தா னம் என்ற நான்கு வஸ்துக்களிலே லோக ஸம்பந்தமா யும், சோதி ஸம்பந்தமாயும், வித்யா ஸம்பந்தமாயும், ப்ரஜா ஸம்பந்தமாயும், சாரீர ஸம்பந்தமாயும் சிந்தனை களை விரித்துரைத்திருக்கிறபடி செய்பவருக்கு ப்ரஜை, பசுக்கள், வேதார்த்த ஞானத்தின் சிறப்பு, அன்னம், ஸுவர்க்கம் என்ற பலன்கள் உண்டு. இத்த ஸம்ஹிதா பாவனையின் வகைகளுக்கு மஹாஸம்ஹிதைகள் எனப் பெயராம்.' என்று கூறி உபநிஷத்து அவ்வகைகளை மேலே விரித்துக் கூறிற்று.

பிறகு ப்ரணவத்தைத் துதித்து அதன் அநுக்ரஹத் தினால் தனக்கு அறிவும், ஆரோக்யமும், இனிமையாகப் பேசும் திறமையும், எல்லாம் கேட்கும்படி காதிற்கு வலி மையும் வர வேணுமென்று கோர வேண்டுமென்றது. பிறகு லக்ஷ்மீஸ்துதி, ஊண், உடை, பசுக்கள், ஸத்துக் களின் சேர்க்கை, கீர்த்தி, பெருமை, பெரிய ஐச்வர்ய மென்ற இவையும், இவ்வைச்வர்யக் கடலிலே மூழ்கி யிருக்கும் தனக்கு தேஹாத்ம சுத்தியும், எல்லா வேத வித்துக்களும் ஈடுபட்டு வரும்படியான ஏற்றமும் எல்லாம் வேண்டுமென்று கேட்கிற வகையை வர்ணித்தது.

'பூ:, புவ:, ஸுவ: என்ற மூன்று வ்யாஹ்ருதிக ளோட மஹ: என்னும் நாலாவது வ்யாஹ்ருதி யையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். மஹ: என்ப தற்கு எல்லா தேவதைகளும் தனக்கு உடலாய், தான் ஆத்மாவாய் நிற்கும் ப்ரஹ்மமே பொருள். இவ் வ்யாஹ்ருதிகளிலே நாலுவகை உபாஸநங்கள்

உண்டு. அவற்றைச் செய்தால் எல்லா தேவதைகளும் உபாஸகனுக்குக் காணிக்கை ஸமர்பித்து கௌரவிக்கும்படி ப்ரஹ்மவித்யை ஸித்திக்கும். இப்படிப்பட்டவன் தனது ஹ்ருத யாகாசத்திலேயுள்ள அழிவற்ற அழகிய புருஷனை யுபாஸித்து, முடிவில் ஹ்ருதயத்தினின்று ஒரு நாடி வழியாய் சிரஸ்ஸிலே கபாலத்தைப் பிளந்து கிளம்பி, அக்னி லோகம், வாயு லோகம், ஆதித்ய லோகம் என்றவைகளிலே தங்கி, ப்ரஹ்மத்தினிடம் சேர்ந்து, கர்மபந்தம் கழன்று விட்டதாலே சுத்தமாய் அப்ராக்ருதங்களான சரீரேந்திரியங்களைத் தன் இஷ்டப்படி பெற்று (அநந்த கருட விஷ்வக்ஸேநாதிகளான) நித்யஸூரிகள் அநுபவித்துவரும் பேரானந்தத்தைப் பூரணமாக அனுபவித்து வருவான்' என்று மேலே சொல்லிற்று.

அதன்மேல் பாங்க்தோபதேசம். அதாவது (பங்க்தி என்பது ஒரு சந்தஸ்ஸு; அச் சந்தத்தில் பாதம் தோறும் எழுத்துக்கள் ஐந்து உண்டு. அதனால், ஐந்து கொண்டதெல்லாம் பாங்க்த மெனப்படும்.) தன் சரீரத்திலே ஐந்து ஐந்தாக மூன்று ஐந்து உள்ளதையும், புறமே வேறு மூன்று ஐந்து உள்ளதையும் சரியாக தெளியவேணு மென்றதோர் உபதேசம். பிறகு ப்ரணவத்தைக் கொண்டாடிற்று. 'எல்லாம் ப்ரணவ ரூபம். ப்ரணவ மில்லாமல் எந்த வைதிக தர்மமும் அனுஷ்டிக்கப் பட மாட்டாது' என்றது.

## உயர்ந்த தபஸ்ஸு

உலகில் நடந்ததை நடந்தபடி சொல்வது, அழியாத (ஆத்ம) தத்துவம் உள்ளதை யறிந்து உள்ளபடி சொல்வது, உபவாஸாதிகளான தவங்களை நன்கு அனுஷ்டிப்பது, வெளிப்பலன்களை அடக்குவது, மனத்தை அடக்குவது, வைதிகாக்நிகளை ஸம்பாதிப்பது,

அக்நிஹோத்ரத்தை ஆசரிப்பது. அதிதிகளை ஆராதிப்பது, மனிதருக்கான மாஹோத்ஸவங்களைச் செய்வது, ப்ரஜைகளைத் தனக்கு உண்டு பண்ணிக் கொள்வது உசித காலத்தில் தன் மனைவியோடு புணர்வது, ஸந்ததி விருத்தி செய்வது என்றிப்படியுள்ள எல்லா தர்மங்களோடும் அத்யயனம், அத்தியாபனம் என்ற இரண்டும் எல்லோருக்கும் அவசியம் வேண்டியவை. ராதீதரரென்று ருஷி ஸத்யமே போதுமென்றார். பௌருசிஷ்டி என்பவர் தவமே—உணவைக் குறைத்து சாஸ்த்ர முறையில் உடலை உலர்த்தலே அமையுமென்றார். அததில் அவர்கள் வைத்துள்ள ஊற்றத்திலே அப்படி அவர்கள் சொன்னார்கள். அத்யயநாத்யாபநங்களையே மௌத்கல்ய நாகர் முக்கியமாக மொழிந்தார். இவையே ப்ரதானமான தபஸ்ஸாம். [எந்த தர்மாநுஷ்டானமும் துர்க்குணங்களை விலக்கி ஸத்துவ குணத்தை வளர்த்தி அறிவை யூட்டுவதற்காகவேயாம். மற்றவை செய்யப்பட்ட போதும் அத்யயநாந்யாபநங்களே நேரில் அறிவை உண்டாககுகிறன வாகையாலே இவையே முக்கியமான தபஸ்ஸாம்] தைத்திரீயத்தின் முடிவிலே ந்யாஸமென்ற தபஸ்ஸே சிறந்ததென்பது வேறு.

அஹங்கார மமகாரங்கள் கழிந்து, அசையாத கீர்த்தியும் குணங்களும் பெற்று, எம்பெருமானுக்கு போக்யமாயும் போகோபகரணமாயு மிருந்து, அறிவின் பலத்தாலே அழிவற்று நிற்பேன்' என்கிற பொருளைத் தரும் மந்த்ர மோத வேண்டும். இது த்ரிசங்குவின் உபதேசமாம்.

ஆசார்யனிடத்தில் வேதாத்யயனம் மட்டும் செய்திட்டு வருவது போதாது. கடைசியில் அவரிடமிருந்து நல் வார்த்தைகளைக் கேட்டே வரவேண்டும். அவர் சீடருக்கு உபதேசிக்க வேண்டுவன என்னவெனில்—. உண்மையைச் சொல். தர்மத்தை யநுஷ்டி.

அத்யயனத்தை விடாதே, குருதக்ஷிணை ஸமர்பித்துப் போய் சந்ததி விருத்தியுண்டாகும்படி விவாஹம் செய்து கொள். யோக க்ஷேமங்களுக்கு வேண்டுவனவற்றில் உபகைஷ கொள்ளாதே. தாயும், தந்தையும், குருவும், அதிதிகளுமே தெய்வமென்றிரு. தேவ பித்ரு கார்யங்களை விடலாகாது. நாங்கள் செய்வதெல்லாம் சரியென்று முடிவு செய்து கொள்ளாமல் எங்கள் வைதிக தர்மா நுஷ்டாநங்களில் எவற்றிற்கு ஒருவித குற்றமுமில்லையோ எவை ஸதாசாரங்களோ, அவற்றை மட்டுமே நீ செய்ய வேண்டும். நமக்கும் மேல் பெரியோர் உண்டு. அவர்கள் இருக்குமிடத்தில் அடக்க ஒடுக்கத் தோடு இருக்க வேண்டும். தானம் செய்யும்போது ஊற்றத்துடனும், கொடுக்கும் வஸ்துவில் பற்றற்றும், தன் ஸம்பத்துக்குத் தக்கபடி யாகவும், அளிப்பது அற்பமென்று வெட்கத் துடனும், சாஸ்த்ரோக்தமாய் நடைபெற வேண்டுமே என்கிற பயத்துடனும், ஸங்கல்ப்ப பூர்வமாய் தெளிந்தும் தானம் செய்ய வேண்டும். சாஸ்த்ரங்களில் ஓதியுள்ள க்ரியைகளிலோ, ஆசாரங்களிலோ எதை எப்படி யநுஷ்டிப்பது என ஸந்தேஹம் ஏற்பட்டால், அது விஷ யத்திலே விசாரம் செய்யத் திறமை வாய்ந்தவராய், பண்டி தர்களாய் ஆசாரசீலராய் ஆக்ரஹமற்றவர்களாயுமுள்ள பெரியோர்களின் நடத்தையையொத்து நடந்து கொள். துராசாரிகளென்று நிந்திக்கப்பட்டவர்கள் உண்டாகில் அவர்களிடத்தில் முன்சொன்ன வண்ணமுள்ள பெரியோர்கள் எங்ஙனம் நடந்து கொள்கிறார்களோ, அங்ஙனம் நடந்து கொள். இதுதான் வேதரஹஸ்யம். இதைத்தான் பெரியோர்களும் கடைசியாகச் சொல்வது. இதை யிப்படியே, அறிய வேண்டும். அனுஷ்டானத் திற்குக் கொண்டுவர வேண்டும் என்றது.

இவ்வளவு விஷயங்களை யுபதேசித்து சாந்தி பாடத் துடன் சிக்ஷாவல்லி முடிவுற்றது.

## ஆநந்தவல்லி

ப்ரம்மத்தை யறிந்தான் அப் பரப்ரஹ்மத்தைப் பெறுகிறான். அழியாததும், அறிவே உருவாயும், அளவற்றதுமான—முவ்வகை அளவுமில்லாத—ஏதெனு மொரு காலத்திலில்லாமை, ஒரு தேசத்தி லில்லாமை, ஏதேனுமொரு வஸ்துவாகாமை என்ற முவ்வளவற்ற—அந்த ப்ரஹ்மத்தை (தன் ஹ்ருதயத்திலே வீற்றிருக்கும் அதை) உபாஸிப்பவன் பரமபதத்தில் அந்த ஸர்வஜ்ஞனை ப்ரஹ்மமென்ற பரனைப் பெறுவதுமாத்திர மின்றி ஸர்வ காமங்களையு மனுபவிக்கிறான்.

எங்ஙனே யென்னில்—அந்த பரமாத்மாவினிட மிருந்தே ஆகாய முதல் பூமி வரையிலுள்ள பஞ்சபூதங் களும், பூமியினின்று ஒஷதிகளும், அவற்றினின்று அன்னமும், அதிலிருந்து இம்மானிட வுடலும் பிறந் துள்ளன. இவ்வுடல் அந்நரஸமயம்—அந்நமயமெனப் படும். இதற்குத் தலை, கால் முதலிய அங்கங்கள் ப்ரஸித் தமே. ப்ரஜைகள் எல்லாம் அன்னத்தினின்று பிறந்து அதனால் வளர்ந்து அதிலே லயிக்கிறார்கள். அதனால் அன்னமே உயர்ந்தது; ஸர்வௌஷதம். ஆக அதையே ப்ரஹ்மமாக வைத்து உபாஸிப்பவருக்கு எல்லா வகை யான அன்னமுமுண்டு. (ப்ரஹ்ம மென்ற ஆத்மா வினின்று ஆகாயம் முதல் அன்னமயம் வரையிலெல்லாம் உண்டாயினவே) அந்த ஆத்மா யாதெனில்,—கேண்மின்—

அந்த அன்னமயனென்ற உடலிலும், ஸூக்ஷ்ம மாய் ப்ராணமய மென்ற ஆத்மா வுண்டு. இதற்கும் உடலுக்குப் போல் தலை முதலிய அவயவங்களாகச் சில வற்றைக் கற்பிக்கலாம். அன்ன மயத்திற்குத் தலை, வலது பக்கம் (புஜம்), இடதுபக்கம், நடு உடல் கீழ்ப் பாகமான அடி என அவயவங்கள் போல் ப்ராண மயத்திற்கு ப்ரா ணனே தலை, வ்யானம், வலபாகம், அபானம், இடபாகம்,

ஆகாயத்தில் வாயு நடுவுடல், பூமியில் உள்ளது கீழே ஆதாரமாம். ப்ராணனில்லாமல் எந்த ப்ராணியும் ஜீவிக்க முடியாதாகையாலே இதையே ப்ரம்மமாம் வைத்து உபாஸிப்பவர்க்குப் பூரண ஆயுள் உண்டாம்.

இதன்மேல் ஸூக்ஷ்மமாய் உள்ளது மநோமயம். வேதங்களெல்லாம் இதற்கு அவயவங்களாய் விளங்கும் யஜுர் வேத சிந்தை தலை, ருக் வேதசிந்தை வலபாகம், ஸாம வேத சிந்தை இடபாகம். ஆசார்யாதிகளின் ஆஜ்ஞையின் சிந்தை நடுவுடல். அதர்வ வேத சிந்தை ஆதாரம். இம்மனதே தனக்கும், தனக்கு அவயவங்களாயுள்ள வேதம் முதலிய வாக்குகளுக்கும் எட்டவொண்ணாத பேரானந்தம் பரப்ரஹ்மத்திற்குள்ளதென்பதை நமக்கு அறிய வைப்பது. இது இதற்குள்ள பெருமையாம்.

இம் மநோமயத்திற்கும் மேற்படவுள்ளது விஜ்ஞானமயம். அதாவது ஜீவன். இவனுக்குப் பலவித அறிவுகளும் சக்தியுமே அவயவங்கள். ச்ரத்தை, அநித்ய வஸ்துவின் அனுபவம், நித்ய வஸ்துவின் அனுபவம், யோகம், சக்தி என்ற போன்றவை அவயவங்கள். (விரிவு நமது உபநிஷத் பாஷ்ய பரிஷ்காரத்தில்). இவன் தான் லௌகிக வைதிக ஸர்வ கர்மங்களையும் செய்கிறவன். இவனையே தேவதைகள் ப்ரஹ்மமாக உபாஸிப்பர். இவனை ப்ரஹ்மமாக உபாஸிப்பவன், தவறுதலின்றி உள்ளபடி உபாஸிப்பானேயானால், சரீரத்தினின்று விலகும்போது பாபங்களைப் போக்கி ஸர்வ காமங்களையும் பெறலாம்.

இந்த விஜ்ஞான மயத்திற்கும் மேற்பட ஸூக்ஷ்மமாயுள்ள ஆத்மா ஆனந்தமயம். இதற்கு ஆனந்தத்தின் உட்பிரிவுகளே அவயவங்களாம். ப்ரியம் தலை, மோதம் வலபாகம்; ப்ரமோதம் இடபாகம், ஆனந்தம் நடுவுடல், ப்ரஹ்மம் ஆதாரம். ஆக இவை அவயவங்கள். ப்ரியமாவது-வஸ்துக்களைக் கண்டு பெற்ற ஆனந்தம்; மோத

மாவது—கண்டவற்றைப் பெற்று அடைந்த ஆனந்தம்; ப்ரமோதமாவது பெற்றவற்றைப் பயன்படுத்திப் பெறும் ஆனந்தம், நடுவுடலான ஆனந்தமாவது சிறந்த ஸுக மான தனது அனுபவம். ப்ரஹ்மமென்ற கீழ்ப்பாக மென்றது இவற்றிற்கெல்லாம் ஆதாரமான ப்ரஹ்மமே. இப்படி ஆனந்தமயன் என்ற சொல்லின் பொருளில பரப்ரஹ்மமும் அதன் ஆனந்த வகைகளும் அடங்கியுள் ளன. இப்படி ப்ரம்மம் நிரூபிக்கப் பெற்றது. இதை அறிந்தவன் ஸத்புருஷன். இல்லையேல் அஸத்தேயா வான். இதுதான் விஜ்ஞான மயன் அளவாய்ச் சொன்ன எல்லாவற்றிற்கும் (ஐந்து பூதங்கள், அன்னமயம், ப்ராண மயம், மநோமயம், விஜ்ஞான மயமென்றுற் போன்றவற்றிற்கு) ஆத்மா.

[இப்படி எல்லாவற்றிற்கும் ஆத்மாவானபடியாலே நிர்விகாரமாகிறது. எல்லாம் அனுபவிப்பதாலே பூர்ணஜ் ஞானமாகிறது. எல்லாக் காலத்திலும் எல்லா தேசத்தி லும் இருப்பதோடு எல்லா வஸ்துவுக்கும் ஆத்மாவாய் அந்தந்த வஸ்துவாகவே சொல்லப்படுவதால் கால பரிச் சேதம், தேச பரிச்சேதம், வஸ்து பரிச்சேதமென்ற மூன்று அளவும் கடந்தது மாகிறது. இவ்வளவால் 'ஸத்யம் ஜ்ஞானம் அநந்தம் ப்ரஹ்ம, யோ வேதநிஹி தம் குஹாயாம் என்றது தெளிவாக்கப்பட்டது. இனி பரமேவ்யோமந் என்று தொடங்கியுள்ளதை விரித்து ரைக்கும்]

வினு -இந்த ஆனந்தமய ப்ரஹ்மத்தை யுபாஸிப்ப வன் மரணமடைந்த பிறகு வேறு உலகத்திற்குப் போகி ருனு? போய் அந்த உலகினையும் செவ்வனவே அனுப விக்கிருனு?

இதற்கு வெகு விரிவான விடை:-கீழ்ச் சொன்ன ஆனந்தமய ஆத்மாவானது பலவகைப் பரிணமங்களு டையதாகச் சொல்லப்பட்டு சேதனனை யாச்ரயிக்கும்

அழிவுறும் அசேதனங்களையும், அவ்வாறுகாத சேதநங்களையும் ஸ்ருஷ்டித்து அவற்றினுட் புகுந்து அவையாகவே நின்றது. இப்படி உட்புகுந்தே அவையாக நின்றதால் அழியாததாயிற்று. இப்படி உட்புகுந்தமையைக் கொண்டே தன்னையே தான் ஸ்ருஷ்டிக்கப் பெற்ற இதுவே ரஸம் — ஆனந்த ரூபம். இதனைப் பெறுதலாலே ஜீவன் ஆனந்தம் பெற்றவனுகிருன். ஐஹிகம், ஆமுஷ்மிகமென்ற (இம்மையிலும் மறுமையிலுமான) எல்லா ஆனந்தத்தையு மளிப்பது இவ் ஆநந்த ரூபனுன பரமாத்மாவே. ஸர்வ சேதந-அசேதன விலக்ஷணமான இதன் உபாஸனத்திலே நிலையுள்ளவனுக்கு பயம் போம். உபாஸனத்தை அரைக்ஷணம் விட்டாலும் அந்த க்ஷணமே அதிக பயத்திற்குக் காரணமாமென்றும், உபாஸநத்தை விடுவதே பெரும் நஷ்டமென்றும் கருதி இடைவிடாது உபாஸனம் செய்து வர வேண்டும். உபாஸித்து மோக்ஷம் பெருதவர்களுக்கெல்லாம் பயம் அளிப்பான் இவனுகையாலே வாயு ஸூர்யாதி தேவதைகளும் இவனிடம் அஞ்சி அவரவர்களின் தொழில்களைச் செய்து வருகின்றனர்.

இப்படி சதுர்முகனளவான ஸர்வ தேவர்களுக்கும் ஸ்ருஷ்டி கர்த்தாவான இந்த பரப்ரஹ்மத்தின் ஆனந்தமானது அளவிடமுடியாததென விளக்குவோம். கேண்மின்—மனுஷ்யா நந்தமென்று நாம் நினைத்திருக்கிருேமே, அதுவே பூரணமாவது எப்போதெனில், ஒரு மனுஷ்யன் நல்ல நவயௌவனம் உள்ளவனுய், ஸகல ஹிதாஹிதங்களையும் தெரிவிக்கும் ஸர்வ சாஸ்திரங்களையும் தன்னைப் போன்ற யுவர்களுக்கு, அவர்கள் தனக்கு எந்த விதத்திலும் விதேயர்களாயிருப்பதைக் கண்டு களித்து, நன்கு உபதேசிப்பவனுய், புசிக்கும் திறமையும், பூரண ஆயுளும், மனோ தேஹ பலமும் பெற்று, இப்பூவுலகம் முழுமையும் ஓர் இடம்கூடப் பாழாகாதபடி, பணத்தைக்

குவிக்கும்படி தன் ஆட்சிக்குட்பட, இப்படிச் சிறந்து விளங்கினுகில், அவன் ஆனந்தம் மானுஷானந்தமாம் இதைப் போல் நூறு மடங்கு பெருகியுள்ளது மனுஷ்ய கந்தர்வர்களின் ஆனந்தம். இனி தேவகந்தர்வர்கள், பித்ருக்கள், தேவலோகத்திற் பிறந்தவர்கள், தேவஸா யுஜ்யம் பெற்றவர்கள், தேவர்கள், இந்திரன், ப்ருஹஸ்பதி, ப்ரஹ்மா வரையிலுள்ள ஆனந்தத்தை மேன்மேல் நூறு மடங்காகப் பெருக்கிச் சேர்த்து, 'இவ்வண்ணமான சதுர் முகாநந்தம் நூறு கொண்டது பரப்ஹ்ரமத்தின் ஆனந்தம்' என்றவாறு சொல்லிப் பார்க்கவேணும். ஆக இதை எவ்வளவென்று சொல்லலாகும். (இங்கே நூறு சரியாக எடை போட்டு அளவிட்டுச் சொன்னதன்று; அனந்தம் என்கிற பொருளிலேயாம். ஒரே காலத்தில் அனந்த ப்ரம்மாண்டங்களைத் தன் திருமேனி மயிர்க் கால்களில் நிறுத்திக்கொண்டு எண்ணற்ற ப்ரஹ்மாக்களை ஸ்ருஷ் டித்து ஆண்டு வருபவனுக்கு அப்போதுள்ள ஆனந்தம் எத்தனை ப்ரஹ்மாக்களின் ஆனந்தத்திற்கு மேற்பட்ட தாமென வாராய்க. மேலும் கங்கையிலுள்ள மணற்களை இத்தனையென்று எண்ணி விடலாம். மழைபெய்யும்போது விழும் துளிகள் எத்தனை யென்றும் எண்ணிவிடலாம். இதவரையில் நடந்த ப்ரஹ்மாக்களின் எண்ணிக்கை கூறவியலாது என்றது ஸ்ம்ருதி இப்படி பிறக்கப்போகும் ப்ரஹ்மாக்களையும் காண்க. இப்படியுள்ள ஸர்வத்தையும் ஸாக்ஷாத்காரம் செய்யும் எம்பெருமான் ஆனந்தத்தை எவ் வளவென்று சொல்வது?) ஆக வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத ஆனந்தம் அது.

மனுஷ்யானந்தத்திற்கு மேலாக இங்கூச் சொன்ன எல்லாவிதமான ஆனந்தமும், வேதம் ஓதி விரக் தனாய் உபாயாநுஷ்டானம் செய்து 'ஸகல பாவங்களும் கழிந்து ப்ரஹ்மநிஷ்டனாய் மோக்ஷம் பெற்றவனுக்கும் உண்டு. ச்ரோத்ரியஸ்யச அகாமஹ தஸ்ய' என்றதே.

மனுஷ்யானந்தத்தைத் தனியாக ச்ரோத்ரியனுக்கும் உண்டென்று ஏன் சொல்லவில்லை யென்றால் இங்குச் சொல்லப்பட்ட யுவாவே ச்ரோத்ரியனனபடியாலே யென்னலாம். ஸ்திரீ ஸம்பந்தத்தைச் சொல்லவில்லை யாகையால் இவன் விரக்தன். கடைசியில் பரப்ரஹ்மா நந்தத்தைச் சொல்லு மிடத்தில் சொல்லப்பட்ட ச்ரோத்ரியின் முக்தனே. அதுபோல் ஒவ்வோரிடத்தில் சொல்லப்பட்ட ச்ரோத்ரியனும் முக்தனே யென்பர். அப்போது முக்தனுக்கு இந்த ஆனந்தங்களுமெல்லாம் உண்டென்றதாயிற்று. (இனி மனிதவுலகிலும் பரமபதத்திலும் போலே எல்லா வுலகிலும் விரக்த ச்ரோத்ரியன் உண்டு. அவனது ஆனந்தம் அங்கங்குள்ள தேவகந்தர்வாதிகளின் ஆனந்தத்திற்குக் குறைந்ததன்றெனத் தெரிவிக்க எங்கும் ச்ரோத்ரியனைச் சொன்னதென்றாலும் குற்றமில்லை.) இங்ஙனம் அளவற்ற ஆனந்தம் பரப்ரஹ்மத்திற்கும் அதனை யுபாஸித்தவனுக்கும் ஸமமாமென்று சொல்லியாயிற்று.

ப்ரஹ்மஜ்ஞானியானவன், சூர்யமண்டலத்திலும் தன் சரீரத்திலுமுள்ள பரமாத்மா வொன்றாகையாலே அவ் அறிவினால் அர்ச்சிராதி மார்க்கத்தினாலே அவ்வுலகம் சென்று கீழ்ச் சொன்ன அந்நமயாதிகளுக்கெல்லாம் ஆத்மாவான ப்ரஹ்மத்தைக் கண்டு, புண்ய பாபங்களுக்குப் பரவசப்பட்டிருக்கை நீங்கி விட்டதாலே நிர்விசாரனாய்—க்ருத க்ருத்யனாகாத ஆஸ்திகன் மரணமடையும்போது கவலைப்படுவது போன்ற கவலையற்றவனாய்-ப்ரஹ்மத்தின் இஷ்டத்தை நேரில் கண்டு நடப்பதால் தான் எனக்கு என்ன செய்தாலும் பாபமில்லையெனத் தெளிந்து ஸர்வ காமங்களையும் ப்ரம்மத்துடனே சேர்த்து ப்ரஹ்மானந்தமாய் அனுபவிப்பானாய், பாபம்போல் புண்ணியமும் ஸம்ஸாரத்தை விளைப்பதால் இரண்டினின்றே தன்னைக் காக்கிறானென்றது மேலே.

இவ்வளவால் மேலுலகம் சென்றே மோக்ஷம் பெறுவ தென்றும், அது எல்லா உலகத்துடன் சேர்ந்த பரப்ரஹ்மத்தின் அனுபவமென்றும் சொன்னதாம்.

## ப்ருகுவல்லீ

கீழ் ஆனந்தவல்லியில் அன்னமயத்திற்கும் ஜகத் காரணத்வம் சொல்லப்பட்டிருப்பதாலே ப்ரஹ்மத்திற்கு ஜகத் காரணத்வம் லக்ஷணமாகாதென சிலர் நினைக்கலாம் அந்நினைவை மாற்றவும், ஆனந்தமய வித்யைக்கு ஸம்பந்தப் பட்டுள்ள மற்றும் சிலவற்றைக் கூறவும் மேல் ப்ருகுவல்லி பிறந்தது. பரப்ரஹ்மோபதேசம் செய்யும்படி ப்ருகுவானவன் வருணரென்ற தகப்பனுரை ப்ரார்த்தித்த போது அவர் ஜகத்காரணத்வம் என்கிற லக்ஷணத்தைக் கொண்டே ப்ரஹ்மத்தைத் தெளிவித்ததால் ப்ரஹ்மத் திற்கே ஸர்வஜகத்காரணத்வம் பொருந்துமெனத் தெளிக. இதன் ஸாரமாவது—

வருணரென்பவர் ப்ரஹ்மத்தைக் கேட்ட குமாரனுக்கு முதலில் அன்னம், ப்ராணன், கண், மூக்கு, மனது, வாக்கு என்றவைகளைச் சொன்னூர். [இத்தனை ப்ரம்மங்களா என்று குமாரனுக்கு விசாரம் ஏற்பட்டது. அதனைக் கண்டு] மறுபடியும், 'இவ்வுலகிலுள்ள எல்லா ப்ராணிகளுக்கும் ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்கள் எதனுலோ, அது ப்ரஹ்மம்' என்றூர். இதைக் கேட்டவுடன் ப்ருகு, 'இந்த ஜகத்காரணத்வமென்ற லக்ஷணமுள்ளதே ப்ரஹ்மம். ஆகவே கீழ்ச்சொன்னவை ப்ரஹ்மங்களாக மாட்டா. ஒருக்கால் அன்னமும் ப்ராணனும் ஜகத்காரணமோ என்று சங்கிக்க அடுக்கும். கண் மூக்கெல்லாம் காரண மாகுமா? ஆக அக் கோவையிலே சேர்க்கப் பெற்றிருப்ப தால், அன்ன ப்ராணன்களும் காரணமாயிரா. இப்படி யாகில் அவைகளை ஏன் பிதா நமக்கு உபதேசித்

தனர். உண்மையில் அவை காரணங்களாகா விடினும் காரணமான ப்ரஹ்மத்தை யறியக் கருவியாயிருப்பதாலாம். ஆக இவற்றைக் கருவியாகக் கொண்டு தபஸ்ஸு செய்து விசாரித்து எது ஜகத்காரணமென்று தெளியவேண்டும்' என்ற முடிவுக்கு வந்தான். (இவ்வாராய்ச்சியை விரிவாக நம் டிப்பணியிலே காண்க.)

தபஸ்ஸாவது ஆலோசனம். முதன் முதல் தபஸ்ஸு செய்து பார்த்ததில் அன்னமே ஜகத்காரணமாகிறதென நினைத்தான். ஆக அதுவே ப்ரஹ்மமாம் என்று எண்ணினான். பிறகு மீண்டும் விசாரித்துத் தெளிவுபெருதே ப்ரஹ்மத்தைச் சரிவர அறிய விரும்பி, பிதாவினிடம் வந்து ப்ரார்த்தித்தான். பிதாவும் சொன்ன லக்ஷணத்தைக் கொண்டே தவத்திஞல் ப்ரம்மத்தை அறிய நியமித்து விடவே, அன்னமும் ஒருவர் செய்யப் பிறந்து அழிவதாலே ப்ரஹ்மமாக மாட்டாதெனத் தெளிந்து ப்ராணமய மனோமய விஜ்ஞாந மயங்களை முறையே ஜகத்காரணமாக நினைத்து நடுநடுவே பிதாவின் ப்ரேரணையிஞலே அவை ஜகத் காரணங்களல்லவெனத் தீர்மானித்துக் கடைசியில் ஆனந்த மயத்திற்கே இந்த லக்ஷணம் உள்ளதென்றும், அதுவே ப்ரஹ்மமென்றும் தெளிந்தான் ('நானே வெகு ரூபமாக ஆகக்கடவேன்' என ஸங்கற்பித்து எல்லாவற்றிற்கும் நிமித்தம் உபாதாநமென்ற இருவித காரணமாகும் சக்தி வேறெதற்காவது கூடுமோ? அன்னமயாதிகளுக் கில்லாமல் ஆனந்தமயத்திற்குள்ள இவ்வேற்றத்தைக் குறிப்பதற்கன்ரே முன்னமும் 'ஸோகாமயத' என்று தொடங்கி இதைச் சொன்னது )

'இப்படி அன்னம் ஜகத்காரணமனருகிலும் அதனிடத்தில் மதிப்பு இருக்க வேண்டும். அதனை நிந்திக்கலாகாது, நிராகரிக்கக் கூடாது, அதனை கௌரவிக்க வேண்டும், வந்தவர்களுக்கெல்லாம் அன்னம் அளிக்கும்படி எந்த விதத்தாலும் அதனை ஸம்பாதிக்க வேண்டும். இப்படி

வ்ரதம் பூண்டு சிற்சில உபாஸகங்களைச் செய்தால் அன்னம், ப்ரஜை, பசு, அறிவு, கீர்த்தி எல்லாம் உண்டாம் என்றவாறு சொல்லிப் பல உபாஸனங்களை உபதேசித்துக் கடைசியாக, ஆனந்தமய வித்யையிலிழிந்தவன் பரமபதம் சென்ற பிறகு எம்பெருமானோடு கலந்து நின்று அவன் போமிடமெல்லாம் அவனுடன் கூடவே இங்கும் அங்கும் எங்கும் இஷ்டமான ரூபங்களைக் கொண்டு போய் இஷ்டமானபடி யெல்லாம் உண்டு அனுபவித்து, என்றும் பெருமானுடைய கீர்த்தியையே பலபடி பாடித் திரிந்து பரமாநந்தம் பெற்று விளங்குகிறான் என்று முடிந்தது. இதனின்று முன்வல்லியில் கேட்ட கேள்விகளுக்கு விரிவாக விடை வந்ததாம் — உபாஸிப்பவன் இருந்த இடத்திலேயே மோக்ஷம் பெறவாகாது; ஸூர்ய மண்டலம் வாயிலாகப் போக வேண்டும். ஆனந்த மயமே பரமாத்மா. அவனைப் பெற்று அங்கே அனுபவிப்பதோடு நிற்காமல் அவன் எங்குச் சென்றாலும் அவதரித்தாலும் கூடவே பணிவிடை செய்துகொண்டு எல்லாவுலகத்துடனும் சேர்ந்து அவ்வாத்மாவை அனுபவித்துப் பாடிப் பெருமைப்படுகிறானென்று விசிஷ்டாத்வைத மதப்படியான மோக்ஷம் விரித்துரைக்கப் பெற்றதாம்.

இரண்டாம் ப்ரச்னம். (நாராயணோபநிஷத்து)

இந்த நாராயணோபநிஷத்தை மேலொடு பார்க்கும் போது மந்த்ரவாக்யங்கள் ஒன்றுக்கொன்று ஸம்பந்தப் படாமல் என்னென்னவோ சொல்வதாகத் தோன்றும் ஊன்றிப் பார்த்தால் யோகிகளுடைய ஆன்னிகமான நித்யகர்மாநுஷ்டானத்தைச் சொல்வதில் இதற்கு நோக்கு என்று டிப்பணியில் விரித்துரைத்துள்ளோம். அதுபடி இங்கே ஸாரஸங்க்ரஹம் செய்கிறோம்.

இது முதலில் 20 வாக்கியங்களாலே எம்பெருமானைத் துதிக்கிறது. 'கடலிலும், கதிரவன் மண்டலத்திலும்,

பரமபதத்திலுமுள்ளவன். எல்லா ஜ்யோதிஸ்ஸுக்களுக்கும் ஒளியளிப்பவன். ஸர்வாந்தர்யாமி. ஸர்வ சேதநா சேதந ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்கிறவன். இரண்டு விபூதிகளுக்கும் நாதன். பரமபதத்திலும் பாற் கடலிலும் பெருங் கவிகளால் ஏத்தப்படுகிறவன். மூல ப்ரக்ருதி பலவகையாக உண்டாதலும் இவனாலேயாம். ஸர்வகர்மங்களாலும் ஆராதிக்கப்படுகிறவன். ஸர்வ தேவதாந்தர்யாமி. காலங்களுக்கும் காரணம், 'அதப்ய ஸம்பூத:' என்ற உத்தர நாராயணமும், ஹிரண்ய கர்ப்ப ஸூக்தமும் இவனையே சொல்லும். இவன் நித்ய ஸூரி, பரிஷதுரீயமாந புண்யச்லோகன். (கந்தர்வன்-ஹயக்ரீவன்). பலவிதமாக அவதரிப்பவன். ஜ்ஞான பக்திகளைக் கொண்டு இவனை யடைந்தேன்' என்றவாறு. இது இரவில் உறங்கி விழித்தவுடன் செய்யும் அநுஸந்தானத்திற் சேர்ந்ததென்க.

பிறகு முறையே அக்னி, ருத்ரன், விநாயகர், கெருடன், துர்க்கி, நாராயணன் இவர்கள் விஷயமான மந்த்ரங்கள். அதன் மேல் அறுகம்புல், மண் முதலியவற்றை எடுத்துக் கொண்டு ஸ்நாநத்திற்காகத் தீர்த்தமுள்ளவிடம் சென்று அகமர்ஷண ஸூக்தத்தை ஜெபித்து நாராயணனை நினைத்து ஸகல பாபங்களையும் போக்கும் ஸ்நாநம் செய்யும் முறையை விளக்கிற்று. ஸ்நாநத்திற்குப் பிறகும் தீவினையும் துயரும் நீங்கச் சில மந்த்ரங்களைச் சொல்லிற்று. இதுவரையில் அபிகமந காலத்திற் செய்யும் கார்யத்தைச் சொன்னதாம்.

பிறகு ப்ரணவமும், வ்யாஹ்ருதிகளும் (பூ:புவ:ஸுவ: என்ற மந்த்ரங்கள்) கலந்த ப்ரம்மோபாஸனத்தை யுபதேசித்து, ஸத்யம் முதலான எல்லா தபஸ்ஸுக்களையும் விட வ்யாஹ்ருதி ப்ரஹ்மோபாஸநமே உயர்ந்த தபஸ்ஸு என்று தெளிவித்தது. 'ஆயினும், புஷ்பித்துள்ள மரத்தினுடைய மணம்போல் புண்ய கர்மத்தின் மணம் வெகு

தூரம் வரையில் வீசும். மனிதன் கத்தியின் கூர்முனைக்கு இலக்காகக் கூடாதுபோல் பொய் சொல்வது என்னும் பாதகத்திற்குட்படக் கூடாது; படுகுழியில் விழக்கூடாது' என்றவாறு சொல்லி, 'செய்யாதென செய்யோம்' என்றிருக்க வேண்டுமென்று ஸூசித்தது. மறுபடியும் பகவானே ப்ரபஞ்சத்திற்கெல்லாம் காரணமென்று வர்ணித்து, 'காற்றும் கடலும் ஆறும் அல்லும் பகலும் மண்ணும் விண்ணும் மரம், செடி, ஸூர்யன், பசு முதலானவையும் எல்லாம் நமக்குத் தேனையே பெருக்க வேண்டும்' என்ற மதுஸூக்தத்தையும், பிறகு க்ருத ஸூக்தத்தையும் படித்தது. நெய்யும் தேனும் பாலும் கன்னலும் போலவன்றோ பரவ்யூஹ விபவாதிரூபனான பகவான் பக்தர்களுக்கு போக்யமாகிறானென்று தெளிவித்தபடி.

மேலே, 'ந கர்மணா ந ப்ரஜயா தநேந' இத்தியாதிகளாலே தர்மார்த்த காமங்களால் மோக்ஷம் கிடையாது. அவற்றை விட்டொழித்தவரே மோக்ஷம் பெற்றனர். ஆக வேதாந்த விக்ஞானமும் ஸந்யாஸமும். அதாவது ஸாத்விக த்யாகமும் வேண்டுமென்றது. இப்படி பரமபதத்திலிருப்பவனும் பல அவதாரங்கள் செய்கின்றவனுமான பரம புருஷனை ஹ்ருதய கமலத்திலே உபாஸிக்க தஹர வித்யையை உபதேசித்து, அந்த வித்யையாலே உபாஸிக்கப் படுகிறவன் ப்ரணவத்திற்கு மூலமாய் எல்லா வர்ணங்களுக்கும் முதலான அகரத்தின் பொருளாயும் ஈச்வரர்களுக்கெல்லாம் மேலுள்ள ஈச்வரனுமானவனே என்று விளக்கிற்று.

பிறகு நாராயணானுவாகத்திலே 'புருஷ ஸூக்தத்திலே ஓதப்பெற்றவனும், ப்ரபஞ்ச காரணமாயும், ப்ரபஞ்சமாயும், ப்ரபஞ்சத்திற்கு மேலாகவும், நித்யனுமான இந்த நாராயணனையே எல்லா வித்யைகளிலும் உபாஸிப்பர். ஆக பரப்ரம்மம், பரஞ்யோதிஸ், பரதத்துவம், பரமாத்மா, பிரமன், சிவன், இந்த்ரன், அக்ஷரன்

என்றாற் போலுள்ள சொற்களெல்லாம் இவனையே குறிக்கின்றன. இவனே மோக்ஷ வித்யைகளென்று பரவித்யைகளிலே உபாஸிக்க படுகிறவன். கண்டவையும், கேட்டவையும், பிறவுமான எல்லா வஸ்த்துக்களிலும் உள்ளும் புறமும் இந்த நாராயணனே கரந்தெங்கும் பரந்துளன். கழுத்துக்கும் நாபிக்கும் நடுவிலேயுள்ள தாமரை மொட்டு போன்ற ஹ்ருதயத்திலுள்ள சிறியதொரு சந்திலே இருப்பவன். புசிக்கும் பலவித ஆஹாரங்களையும் ஜரித்துக் கொடுக்கும் ஜாடராக்நியுள்ளதே; அதன் இடையில் நீர் கொண்ட மேகத்தோடு கூடி ஒளி வீசும் மின்னல் போன்றதான ஜ்வாலை உண்டு. அதில் மத்யத்தில் இப் பரமாத்மா சிறந்து விளங்குகிறான்.

(இப்படி எல்லாருடலிலும் இருப்பதாலே எல்லோருக்கும் ப்ரஹ்மாதிகளுக்கும் அந்தர்யாமீ.) இவனே எல்லாச் சொற்களுக்கும் கடைப் பொருள்' என்று அவனை கொண்டாடிற்று. (அழகான ஸ்வர அமைப்பினால் தைத்திரீயம் வேதங்களிற் சிறந்ததாய் ஓதவும் கேட்கவும் இனியது. இதனைப் பொருளிலும் சிறந்ததென்னவேண்டும். நாராயணன் பரதத்துவமென்பதை மிகத் தெளிவாக உபதேசிக்கின்றதே.

இதன் மேல் ஸூர்ய மண்டலத்திலே எம்பெருமானையுபாஸிக்கும் விதத்தை விதித்தது. பிறகு விரைவில் பலன் ஸித்திப்பதற்கான த்வரிதருத்ரங்களென்னும் மந்த்ரங்களும் ஹோமங்களும்.

அபிகமனத்திற்குப் பிறகு உபாதானத்திலே பகவானுடைய ஆராதனத்திற்கு வேண்டுமவற்றைச் சேகரிக்க வேண்டுமல்லவா? அவற்றில் ஜ்ஞானம், பக்தி, வைராக்கியம் முதலாக ஆத்ம குணங்களையும் இந்த காலத்திலே சேகரிக்க வேண்டும். இது வரையில் அது பணிக்கப் பெற்றதாம். பகவதாராதன மென்பது ஹ்ருத்யாகம் பாஹ்யயாகம் என இருவகைப்பட்டதாகையாலே பாஹ்ய

யாகத்திற்குச் சிறப்பாயுள்ள சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், அன்ன பானங்கள் எல்லாம் சேகரிப்பதைக் கருத்தில் கொண்டு அவை யெல்லாம் பூமி, ஜலம் முதலான மஹாபூதங்களின் பரிணாமங்களாகையாலே பூமி முதலானவற்றிற்குத் துதியைச் செய்து, இவற்றை ப்ரதிக்ரஹிப்பதால் வரும் பாபங்கள் நீங்க மாத்யான்னிக ஆபோசனத்தை யோதி, இதுபோல் காலையிலும் மாலையிலும்கூட ஆபோசனங்களுக்கு மந்த்ரங்களைக் காண்பித்து, ப்ராணாயாமம், ஜபம், உபஸ்த்தான மென்பவற்றைச் சொல்லி, பிறகு ஒரு மந்த்திரத்திலே முதற் பாதியாலே ஹ்ருத்யாகம் செய்வதைச் சொல்லி வெளியில் ஆராதன மூர்த்தியும் அவனே என்று மேலே குறித்து இங்கே ஸர்வ மூர்த்திகளிலுமுள்ளவனும் யஜ்ஞ ரூபியும், சர்வ தேவ ரூபியுமானமான நாராயணனுடைய ஆராதனம், (வைச்வதேவம்) பஞ்ச மஹா யஜ்ஞங்கள், இவை போன்றவைகளை யெல்லாம் ஸூசனம் செய்து ஆராதனத்திற்போல் புசிக்கும் போதும் உபயோகப்படும் ப்ராணாஹூதி மந்திரங்களையும், பிறகு வேண்டும் பிற மந்த்ரங்கள் முதலானவற்றையும் மொழிந்தது. ஆராதனத்தை விஸ்தாரமாக ஏன் சொல்லவில்லை யென்னில் —எல்லாம் ஆராதனமே யென்றும், பக்தி யோகத்திலிழிந்தவர்க்கு இது சுருக்கமாகுமென்றும், மற்ற க்ரியைகள் போலன்றி ஆராதனமென்பது விரிவும் சுருக்கமுமாய் அந்தந்த நிலைக்கேற்ப வெகு விதமாகையால் வரையிட்டுச் சொல்லல் தகாதென்றும் அறிவிக்க வென்க. மேலும் கீழே விடியற் காலத்தில் சிந்திக்கும் போது ஹிரண்ய கர்ப்ப ஸூக்தம் முதலானவை காட்டப்பட்டன. அந்த ஸூக்தம் எம்பெருமானுக்கு நைவேத்யத்திற்கானது. அத்தகைய மந்திரங்களாலே கீழே, எல்லாம் செய்யவேண்டுமென்றாராயு மிடத்திலேயே, குறித்ததாம். இப்படி இஜ்யாகாலம் முடிந்தது.

இனி ஸ்வாத்யாய காலம். மந்த்ர ஜபம், பாராயணம், ப்ரவசனம் எல்லாம் இந்த ஸ்வாத்யாய காலத்திற் குறியவை. அவையாவும் அறிவின் வளர்சிக்காக. ஸாத்விகமான ஆஹாரத்தை உட்கொண்ட பிறகு ப்ரா ணேந்த்ரியங்களுக்கும் பெலம் பெற்றவுடன் இவற்றில் தானே பக்தன் இழிய வேண்டும். ஆகவே மேதாஸூக் தம் மேலே யோதப் பட்டது, இங்கே எல்லா மேதை களும் தனக்கு வரவேண்டுமென்று பல தேவதைகளை ப்ரார்த்திக்கிறது. அதன் பின், பஞ்ச ப்ரஹ்ம மந்த்ரங்கள். இவற்றால் எம்பெருமான் பிறந்து நம் பிறப்பை போக்கு கிறனென்று அவனது அவதார வரலாறுகளை ஸ்வாத்யாய காலத்தில் அனுஸந்திக்க வேண்டுமென்கிறது இதிஹாஸ புராணங்களின் ப்ரவசனம் சொன்னபடி. மேலே த்ரி ஸூபர்ண ப்ரம்ம ஸூக்தம். இது ப்ரஹ்மஹத்யாதி தோஷங்களையும் போக்கும் மந்த்ரம்.

இனி யோகம். இப்படி மேன்மேல் ஜ்ஞானமும் வைராக்யமும் வளர்ந்துவந்தவர்க்கு, 'என்னுடைய கரணகளேபரங்களும் இவற்றிற்குச் சேர்ந்தவையுமெல் லாம் பரிசுத்தமாக வேண்டும். நான் துஷ்ப்ரவ்ருத்தியும் பாபமும் நீங்கி, எம்பெருமான் விழித்தெழுந்து என்னை அனுக்ரஹிக்கும்படி ஆவேன்' என்று நினைக்கும்படி சில மந்த்ரங்கள் ஓதப் பெற்றன. இவை ஸன்னியாஸ ஹோம மந்த்ரங்கள் என்பர். பக்தியோகமாம் த்யானத்திற்கேற்ப தன் அங்கங்களெல்லாம் சுத்தமாக வேண்டு மென்கிறது இங்கு.

இதற்குமேல் ஸத்யம், தபஸ்ஸு, தமம், சமம், தானம், தர்மம், ப்ரஜநநம், அக்னிகள், அந்நிஹோத்ரம், யஜ்ஞம், மாநஸம், ந்யாஸம் என்னும் பன்னிரண்டு தபஸ்ஸுக்களை யெடுத்து ஒவ்வொன்றையும் நன்கு புகழ்ந்து அவற்றில் ந்யாஸமே மிகவும் சிறந்ததென்று விவரித்து அதற்கு மந்த்ரத்தை யோதி, 'இது மிகவும்

இரஹஸ்யமானது; தேவதைகள் மறைத்து வைத்திருக்கும் விரகும் இது, என்றும் தெரிவித்தது. இந்த ந்யாஸமாவது பரந்யாஸம், ப்ரபத்தி என்றறிக. இது யோகமாகவும் ஒருவாறு சொல்லப்படுவதாம். பரப்ரம்மத்தினிடத்தில் க்ஷேத்ரஜ்ஞன் என்னும் ஜீவாத்மாவை ந்யாஸம் செய்வதை யோக மென்றனரே ரிஷிகள்.

இப்படி ந்யாஸத்தைச் சொல்லும் ஸந்தர்ப்பத்திலே, ந்யாஸமே ப்ரம்மா, ஸம்வத்ஸரம், ஆதித்யன் என்றெல்லால் புகழ்ந்து ஆதித்யன் என்னும் சூரியன் தன் கிரணங்களாலே மழையைப் பெய்வித்து, மரம், செடிகள், அன்னம், ப்ராணன், பலம், தபஸ்ஸு, ச்ரத்தை, அறிவு, கேட்டறிவது, சிந்திப்பது, அடக்கம், பற்றுதல், நினைவு, த்யானம், ஸாக்ஷாத்காரம் இவற்றை முறையே அளித்து ஆனந்தமய ப்ரம்ம ஸ்ருஷ்டிக்குள் கால சக்ரத்துக்குட்பட்டிருக்கும் எல்லோரும் சூரியனுடைய உதவியை நாடி ஜ்ஞான பக்திகளைப் பெற்று ந்யாஸத்தைக் கொண்டு நாராயணனைப் பெற முயற்சி செய்யவேண்டு மென்றதாம். இப்படி யுபாயத்திலே யிழிந்தவனுக்கு ப்ரம்ம ப்ராப்தி யென்னும் பலனையும் மேலே வர்ணித்தது. இதற்கு முன் தைத்திரீயத்லே பல உபாஸனைகளைச் சொல்லிற்று. முடிவில் ந்யாஸத்தைச் சொல்லிப் பின் வருமாறு விரித்தும் உரைத்தது—

"ந்யாஸமென்றும் ஆதித்யனென்றும் சொல்லப்பட்ட இந்த பரமாத்மா ஐந்து விதமாகிறான் அதாவது—பரம் வ்யூஹம், விபவம், ஹார்த்தன், அர்ச்சை என்ற ஐந்து ரூபங்களைப் பெறுகிறான். ஐந்து வஸ்துக்களுக்கு-ப்ரக்ருதி காலம், நித்யர், முக்தர், பத்தர் என்றவற்றிற்கு ஆத்மாவுமாகிறான். இவனே மூன்று காலத்திலுள்ள எல்லாமாகும்.

ஹார்த்தரூபமுடையவனும், ப்ரக்ருதியில் ஸ்ருஷ்ட்யாதிகளுக்காகவே வ்யூஹரூபனும், பரமபதத்திற்கான

பரவாஸுதேவனும், மனிதன் முதலான தனது விபூதி யென்றே ப்ரமிக்கும்படியும் விச்வாசமுள்ளவருக்கே உண்மையான பரமபுருஷனாகவுமிருக்கும் விபவரூபனும், அர்ச்சைக்கான உருவங்களிலே தனது திவ்யமங்கள விக்ரஹத்தைப் புகுவித்து விளங்கும் அர்ச்சையுமாகிறான் இவன். எல்லாம் ரஜஸ்ஸு தமஸ்ஸுக்களின் கலப்பின்றி யுள்ள சுத்த ஸத்துவமாக விளங்குவதால் ப்ரபத்தி செய்யுமிடமாகையாலே ந்யாஸமாகும் — அதாவது அடைக்கலமாகும். இப்படி ந்யாஸம் செய்தவன் மீண்டும் மரணமடைவதில்லை. அதாவது இந்த தேஹத்தின் முடிவிலாம் மரணத்திற்குமேல் மீண்டும் மரிப்பதற்கு இடமாகாமல் அவனிடம் சென்றுவிடுகிறான். ஆகையால் இந்த தேஹத்தின் முடிவிலேயே மோக்ஷ மளிப்பதால் கீழே மானஸம் என்று சொன்ன பக்தி யோகத்திற்குக்கூட இந்த சக்தி யில்லையாகையால் அதற் கும் மேலான ந்யாஸத்தை எல்லாவற்றிற்கும் மேலாகவே வேதமறிந்தவர் சொல்லுகின்றனர்'' என்றவாறு இதைப் பற்றிய விரிவாம்.

இதன்மேல், 'பகவானே ந்யாஸமென்றால் என்ன? நாம் செய்ய வேண்டுவது ஏதேனுமுண்டா, இல்லையா' என்ற ஐயத்தைப் போக்கவாம் வாக்கியமுமுளது-அதன் பொருளாவது—

''ப்ரம்மமே! நீ சிறந்தவனாய், சிறந்தவரால் அடையத் தகுந்தவனாய், ஜீவனை ப்ராணாதிகளோடு சேர்க்கின்றாய். உலகமெல்லாம் ஸ்ருஷ்டிக்கின்றாய். அக்னிக்கு உஷ்ணத்தையும் சூரியனுக்கு ப்ரபையையும், சந்திரனுக்கு நிலவையும் அளிக்கின்றாய். அடக்கப்பட்ட மனத்தினாலே, உபயாமனான-மண்ணும் மரமும்போல் அறிவும் சக்தியுமற்று அகிஞ்சனன் என்னால் க்ரஹிக்கப் பட்டாய். பரப்ரம்மமாய் தேஜோ ரூபியான உன் பொருட்டே யான் ஆவேன்'' என்று விஜ்ஞாபனம்

செய்து ப்ரணவத்தைக் கொண்டு ஜீவனைப் பரமாத்மா வினிடம் ஸமர்ப்பிக்க வேண்டும். இதுதான் சிறந்த உபநிஷத்துக்களிற் சொன்ன தேவரஹஸ்யம். இதனை யறிந்தவன் ப்ரஹ்மத்தின் பரம ஸாம்யத்தைப் பெறுகிறுன்'' என்றதாம்.

ஆத்மாவை அவனிடம் ஸமர்ப்பணம் செய்தால் போதுமோ? பக்தியோகம் செய்கின்றவன் போல் வைதிகமான யஜ்ஞாதிகளைச் செய்து வரவேண்டாவோ? தேஹத்தின் முடிவுவரையில் உபாயம் நீடித்து அனுஷ் டிக்கப்பட வேண்டாவோ என்பாருக்கு விடையளிப்பது போல் மேலே சில வாக்கியங்கள் உள. அவற்றின் பொருளாவது—

இப்படியறிந்த அனுஷ்டிக்கப்பட்ட ஆத்மஸமர்ப்பண மென்றது ஒரு யாகம். (யாகத்திலே அன்னம் முதலிய ஹவிஸ்ஸு தேவதைக்கு ஸமர்ப்பிக்கப்படுகிறவண்ணம் இங்கே ஆத்மா என்ற ஹவிஸ்ஸு எம்பெருமானிடம் ஸமர்ப்பிக்கப்படுகிறது. அச்சுதனுகிற அக்னியிலே ஆத்மா என்ற ஹவிஸ்ஸுக்கு ஹோமமென்றும், கீழ்ச் சொன்ன மந்த்ரத்தை எடுத்து இந்த வேத பாகத்திற்குப் பொருளை ஸ்ம்ருதி வாக்கியமொன்று விளக்கிற்று) 'இந்த யாகத்திற்கு இவன் யஜமானன், ச்ரத்தை பத்நீ, உடல் யாகஸமித்து, மார்பு மேடை, மயிர்கள் தர்ப்பங்கள் குடுமியே தர்ப்பமுஷ்டி, ஹ்ருதயமே யூபம், காமமே நெய், கோபமே பலிக்கான ப்ராணி, தவமே அக்னி, சாந்தி ஹேதுவான அறிவே தக்ஷிணை, வாக்கு ஹோதா, ப்ராணன் உத்காதா, கண் அத்வர்யு, மனது ப்ரஹ்மா, காது ஆக்நீத்ரன், ப்ராணதாரணவளவே தீக்ஷை, புசிப்பதும் குடிப்பதுமே ஸோமரஸ பானம், போகானு பவமே உபஸத்துக்கள், நடமாடுதல் முதலானவையே ப்ரவர்க்யம், முகமே ஆஹவநீயம், அறிவே ஹோமம், இருவேளை போஜனமே ஹோமஸமித்து. இவனிருக்கும்

மூன்று காலங்களே ஸவனங்கள். பகலும் இரவுமே தர்சபூர்ணமாஸங்கள், பக்ஷங்களும் மாஸங்களுமே சாதுர்மாஸ்யங்கள், ருதுக்களே பசுபந்தமென்ற கர்ம. இவனது பலவகை வருஷங்களே ஸத்ரா ஹீநயாக தின கணங்கள். இதை எல்லாவற்றையும் தக்ஷிணையாக வுடைய ஸத்ரயாகமென்னலாம். இவனது மரணமே அவப்ருதம் இது முடிவுவரையில் செய்யும் அக்னி ஹோத்ரமுமாம்–என்றதாம்.

(சாந்தோக்யோபநிஷத்தில் புருஷ வித்யையென்று ஒரு வித்யை இருக்கிறது. அது ஓர் உபாஸனமுறை. அதற்கு நூற்றுப் பதினாறு ஆண்டுகளாம் தீர்க்கமான ஆயுள் பலனாக அங்கே சொல்லப்பட்டது. இங்குள்ள இந்த ஸந்தர்ப்பம் மேலாகப் பார்க்கப்படும்போது அது போல் தோன்றும். அவ்வாறான வித்யையன்று இது. இதன் கருத்தென்ன வென்றால் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணவன் மேல் ஒரு ரித்விக்கைத் தேட வேண்டா. யாகம் ஹோமம் ஒன்றும் இதற்காகச் செய்ய வேண்டா, அவனுக்கு இன்றியமையாத வஸ்துக்களும் சாஸ்த்ர முறைப்படி தேஹதாரணத்திற்கான செயல்களும் இருக் கின்றனவே, அவற்றிற்கு மேல் ஒன்றும் வேண்டா. பல வகை யஜ்ஞங்கள் செய்தாற்போல் அவனால் செய்யா மலே பலன் பெறப்படுமென்றதே. விரிவு பரிஷ் காரத்தில்).

(கீழ்ச் சொன்ன 'வஸுரண்ய' மந்த்ரத்தைக் கொண்டு ஆத்ம ஸமர்ப்பணம் (ப்ரபத்தி) பண்ணின வனுக்கு வரும் மோக்ஷத்தில் விசேஷம் மேலே குறிக்கப் படுகிறது. வேறு மந்த்ரத்தைக் கொண்டு ப்ரபத்தி செய் தார்க்கு இது அவசியமில்லை.) கீழ்ச் சொன்னபடி ந்யாஸம் பண்ணினவன் உத்தராயணத்திலே மரித்தால் தேவலோகம் சென்று ஸூர்யஸாயுஜ்யத்தைப் பெறுகிறான். தக்ஷிணாயனத்தில் மரித்தால் பித்ருலோகம் சென்று சந்த்ர

ஸாயுஜ்யம் பெறுகிருன். இப்படி ஸாயுஜ்யத்தை முதலில் பெற்று பரப்ரஹ்மத்தைப் பிறகு அடைகிருன். (இதனுல் ப்ரபத்தி எல்லாப் பலனையும் அளிக்கக்கூடியதாகையால் தனி மோக்ஷம் கேட்பாருக்கு அதே பலனென்றும், சில பக்தியோகங்களிற்போல் இடையில் வேறு பலனையும் விரும்புவோர்க்கு அதற்குத்தக்கபடி அனுஷ்டித்துக் கொண்டு ஸமர்ப்பணம் செய்தால் அப் பலனும் கைக்கூடு மென்றும் தெளிவித்ததாம். இந்த ந்யாஸமானது பரந்யாஸம், சரணுகதி, ப்ரபத்தி, த்யாகம் ஸன்னி யாஸம், ஆத்மநிக்ஷேபம் என்றெல்லாம் பெயர் பெறு மென்றும், இதற்கு ஆனுகூல்யஸங்கல்பம் ப்ராதிகூல்ய வர்ஜனம், கார்ப்பண்யம், மஹாவிச்வாஸம், கோப்த்ருத்வ வரணம் என்ற அங்கங்கள் உளவென்றும் பலவேறு ப்ரமாணங்களினின்றும் ஸம்ப்ரதாய க்ரந்தங்களினின்றும் தெளிக.) இது தைத்ரீயோபநிஷத்தில் அடங்கிய நாராயணேபநிஷத்தின் ஸாரம். (பரதத்துவம், பரம ஹிதம், பரமபுருஷார்த்தம் இவற்றைக் கலக்கமறத் தெளிவது தைத்ரீயத்திறலென்க.

இவ்வாறு தைத்ரீயோபநிஷத்தின் ஸாரமாகும்.

---

## 8. ஐதரேயோபநிஷத்து

இது ருக்வேதத்தைச் சேர்ந்தது. ஸம்ஹிதை, பிராம் மணம் என இரண்டாக ஒவ்வொரு வேதமும் பிரிக்கப் படுகின்றதே. இந்த ருக்வேதத்தில் ருக்ஸம்ஹிதை என்பது பத்து மண்டலங்களாகப் பிரிக்கப்படும். அதன் மேலுள்ளது ஐதரேயப்ராஹ்மணம். இது ஐதரேயரென்ற மஹர்ஷி தவம் புரிந்து கண்ட பிராம்மணமானபடியாலே இதற்கு இவ்வாறு பெயராம். இதன் முடிவில் ஐதரே யாரண்யகமென்ற பெயருள்ள ஐந்து ஆரண்யகமென்ற பாகங்கள் இருக்கின்றன. இவற்றில் இரண்டாவது ஆரண்யகத்திற்கும் மூன்ருவது ஆரண்யாகத்திற்கும்

ஐதரேயோபநிஷத்து என்று பெயராம். இங்ஙனமிருப்பினும், சங்கராசார்யர் பாஷ்யம் இயற்றியது இரண்டாவது ஆரண்யகத்தின் முடிவிலுள்ள ஆத்ம ஷட்கமென்ற பாகத்திற்கே. அதற்குப் பின் வித்யாரண்யர் முழு வேதத்திற்கும் பாஷ்யம் செய்தவர். இங்கே முழு உபநிஷத்துக்கும் உரையிட்டிருக்கிறார். மத்வாசார்யரான ஆனந்த தீர்த்தரின் பாஷ்யமும் முழுமைக்கும் உளது. இதில் ஆத்மஷட்கமென்ற பாகமே நிர்குண ப்ரஹ்மத்தைச் சொல்லுமென்றும், மற்ற பாகம் ஸகுண ப்ரஹ்மத்தையும் வேறு உபாஸனங்களையும் சொல்வதென்றும் கருதி அவர் இதற்குமட்டும் உரையிட்டது. இந்த ஆத்மஷட்கமும் நிர்குண ப்ரஹ்மத்தைச் சொல்லாது, ஸகுண ப்ரஹ்மத்தையே நன்கு விளக்கு மென்றதைச் சொன்னால் போதுமென்று விசிஷ்டாத்வைத ஸித்தாந்த பாஷ்ய மியற்றியவரும் இதற்கு மட்டுமே பாஷ்யம் இயற்றினார். ஆகிலும் அநாதியாக இரண்டாவதும் மூன்றாவதுமான இரண்டு ஆரண்யகங்களுக்கும் உபநிஷத்து என்ற பெயரிருப்பதால் இவ்விரண்டுக்கும் உரையிருக்கவேண்டும். ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களிலே ப்ரஹ்மஸூத்திரத்திற்கிணங்க அங்குள்ள வாக்கியங்களை யெடுத்து விசாரம் செய்யப்பட்டுமுளது. அதனால் நாம் வேதாந்த புஷ்பாஞ்ஜலி யென்ற க்ரந்தத்தில் இவ்வுபநிஷத்தை உரைக்கும் போது முழுமைக்குமே சுருக்கமாக ச்லோகங்கள் எழுதியுளோம். இந்த உபநிஷத்ஸாரத்திலும் மற்ற பாகத்தின் விஷயம் மிகச் சுருக்கமாவும் ஆத்மஷ்ட்க மென்ற பாகத்தின் பொருள் சிறிது விரிவாகவும் வரையப் பெறும்.

ஐதரேயோபநிஷத்து எனப்படும் இரண்டு ஆரண்யகங்களில் (அதாவது 5 ஆரண்யகமாகப் பிரிந்த முழு ஆரண்யகத்தில் 2-ஆவது 3 ஆவது ஆரண்யகங்களில்) முதல் ஆரண்யகத்திற்கு அத்யாயங்கள் ஏழாம் 7. முதல் அத்தி

யாயத்தில் கண்டங்கள் 8. இரண்டாவதத்தியாயத்தின் கண்டங்கள் 4. மூன்ருவதில் 7. நான்காவதில் 3. அதன் மேல் 5ஆவது 6ஆவது 7ஆவது அத்தியாயங்களுக்கு கண்டம் ஒவ்வொன்று. இவை மிகச் சிறியவை. இங்கு முடிவிலுள்ள கண்டங்கள் ஆறும் ஆத்மஷட்கமென்ற பெயரால் இப்போது வழங்கப்படுகின்றன. இந்த பாகத்திற்கு மட்டுமே சங்கராசாரியரின் பாஷ்யமுண்டு. அதனுல் இரு பாகமான உபநிஷத்தில் முதல் பாகத்தில் உள்ள இந்த நான்காம் அத்தியாயம் முதலான அம்சமே இப்போது ஐதரேயோபநிஷத்தென்று எல்லோராலும் வழங்கப்படுகிறது. இவ் ஆரண்யகம்போல் உபநிஷத்தான மேலாரண்யத்திற்கு அத்யாயங்கள் இரண்டு. முதல் அத்தியாயத்திற்குக் கண்டங்கள் ஆறு 6. இரண்டா மத்தியாயத்திற்கும் கண்டங்கள் ஆறு 6.

## விஷயச்சுருக்கம்

கவாமயனமென்றதொரு ஸத்ரயாகமுண்டு. அதில் கடைசி நாளின் முதனுளுக்கு மஹாவ்ரதமென்று பெயராம். அதில் நிஷ்கேவல்யமென்ற உக்த்தசஸ்த்ரம்-ஸாமகானமற்ற ஒருவிட மந்த்ர பாடம்-இருக்கிறது. அதில் பல த்ருஷ்டி விதிகள் பலவிதமான பலன்களுக்காக இங்கே தெறிவிக்கப்படுகின்றன த்ருஷ்டியாவது ஒன்றை மற்ரென்ருக பாவிக்கை-சிறிய வஸ்துவை மேன்மைவாய்ந்ததொரு வஸ்துவாக சாஸ்த்ரம் சொன்ன வகையிலே ஏறிட்டுக் கொள்கை. இத் தொடர்ச்சியிலே மோக்ஷத்திற்கான உபாஸனமும் சொல்லப்படும்.

2. 1. 1. வேதத்திலோதப்படும் கர்ம ப்ரஹ்மரூபமான மார்க்கமே உண்மையானது. இந்த மார்க்கத்தை மீறினவர்கள், பக்ஷி, தாவரம், ஊர்ந்து செல்லும் ப்ராணி இவையாகப் பிறப்பார்கள்.

2. 1. 2. இங்கு, உக்த்த சஸ்த்திரத்திலே தேவதை களாகவும், சரீரத்திலுள்ள சில பாகங்களாகவும் பாவனை செய்வதும், அக்னி முதலான தேவதைகளுக்கு ஆராதன மாகின்றமையும் சொல்லப்படும்.

2. 1. 3. மனிதவுடலை உக்த்தமென்று சொல்லி, ப்ர ஜைகளுக்கெல்லாம் பதியான மஹான் நானே உக்த்த மென்று அவனவன் நினைக்கவேண்டுமென்று கீழே கூறிற்று. ப்ரஜைகளின் பதியானவன் செய்த ஸ்ருஷ்டி யிலே மனிதவுடலே மிக ஸாரம், ப்ரம்மலோகம் இது. இது அன்னமயமாய் ஹிரண்மயமுமாய்—மிக நேர்த்தி யான தென்றது இங்கு.

2. 1. 4. இவ்வுடலில் ப்ரஹ்மமானது கால்நுனியி னின்று தலைவரையில் பரவிற்று. முதலில் இவ்வுடலில் பாதத்தின் முனையிலே ப்ரஹ்மம் புகுந்தமையால் மனித னின் கால்நுனிக்கு ப்ரபதமெனப் பெயராம். சிறிது சிறி தாக சிரஸ்ஸில் சேர்ந்தது. சிரஸ்ஸை ஆச்ரயித்தாலே ச்ரீ என்று சொல்லப்படும் ஸம்பத்துக்கள் சேர்ந்தன: அவையாவன—கண், காது, மனம், வாக்கு, ப்ராணன் என்பவை. அவைகள் தம்மில் யார் பெரியாரென வறியா மல் கலஹம் செய்து முடிவில், பிராணன் உடலை விட் டால் உடல் அழிகிறது. அது இருந்தால் எல்லாக் கார்யங் களையும் நடத்துகிறதெனக் கண்டு தெளிந்தன. ஆகை யால் அவற்றில் ப்ராணனே சிறந்ததென்றது.

2. 1. 5. ப்ராணனுக்கு வாக்கு முதலானவை பவ் யப்பட்டவை. இதற்கு உடலில் இவற்றோடும், தன் தேவ தையின் அதீனமாகி அவற்றின் தேவதைகளோடும் ஸம்பந்த முண்டு. இச் சேர்க்கை ஸத்யம். ஸத்தியம் என் பதை ஸத், தி, யம் எனப் பிரித்தால் அம் மூன்று சொற் களுக்கும் ப்ராணம் அன்னம் ஆதித்யன் என்று பொருள்.

ளாக, இம் மூன்றின் சேர்க்கையாம் இது என்று ஒரு வகை த்ருஷ்டி. (சாந்தோக்யோபநிஷத்தில் உஷஸ்தியின் உபாக்யானத்திலே அன்னம் ப்ராணன் ஆதித்யன் என்ற மூன்றுக்கு ஸாமகானத்தின் பாகங்களில் த்ருஷ்டி சொல்லப்பட்டதை இங்கே நினைக்க.)

2. 1. 6. வாக்கு என்பது ஒரு புணைக்கயிறு, அதிலுள்ள பூட்டுக்களே வாக்கினுலாம் பெயர்கள். அவற்றல் உலகில் எல்லாம் கட்டப்பட்டிருக்கும். பெயரில்லாத வஸ்து உலகிலில்லையே. இவ்வாக்கில் அடங்கிய சந்தஸ்ஸுக்களில் ஒவ்வொரு சந்தஸ்ஸு ஒவ்வோர் அங்கமாயிருக்க ப்ருஹதீ என்கிற சந்தஸ்ஸானது ப்ராணனுகிறது. ஆக எல்லா ப்ராணிகளும் ப்ருஹதியாம் ப்ராணனுலே தரிக்கப்படுகின்றன.

2. 1. 7. கீழ்க்கூறப்பட்ட வாக்கு முதலான ஐந்து ச்ரீ (ஸம்பத்து)க்களும் தங்களை ஏவ ஏற்பட்ட தம் தம் தேவதைகளுக்கு அடக்கமான உலகங்களின் பலன்களை புருஷனுக்கு அளிக்கும்.

2. 1. 8. 'ஆபோமய: ப்ராண:' என்றபடி தண்ணீரால் ப்ராணனுக்குப் புஷ்டியாம். வாக்கு, ப்ராணன், கண், மனம், காதென்ற இக்த ஸம்பத்துக்களுக்கு ப்ரஹ்மகிரி என்று பெயராம். இவற்றின் மூலமே ப்ரஹ்மத்தை அடையவேண்டும். இதை யறிந்தவன் பகைவனை வெல்லுகிருன். (இந்த ஐந்து ஸம்பத்துக்களையும் பெரும்பாலும் எல்லா உபநிஷத்துக்களும் கண்டோக்தமாகவோ; கருத்தில் கொண்டோ கொண்டாடும். அதற்குக் காரணம் ப்ரஹ்மோபாஸனத்திற்கு இவை முக்கியமான கருவிகளானமையே. இதனை இந்த ஐதரேயோபநிஷத்தே ஒருவகையில் விளங்கச் சொல்லுகிறது. இதனுலேயே இந்த பாகத்தின் ஸாரத்தையும் நாம்

இங்கே வரைகிறதென வறிக. இந்த ஐந்தை ப்ருஹதா ரண்யக உபநிஷத்தின் உபோத்காதத்திலே விரிவாகச் சொல்லியிருக்கிறோம்.) இவற்றில் பிராணன் அழியாத தேவதை (எது போனாலும் இது உடலுக்கு முக்கிய மாகும்.)

2. 2. 1. 'ப்ராணன் என்பது புருஷவடிவத்தில் இங்கும், மேலே ஆதித்யனையும் பற்றிற்று' என்று கூறி, ப்ராணனுக்கும் ஆதித்யனுக்கும் ஐக்யம் சொல்லுகின்ற தாய் இந்த கண்டமானது—சதார்ச்சி, மாத்யம, க்ருத் ஸமத, விச்வாமித்ர என்றவாறு பல ரிஷிகளின் பெயர் களை எடுத்து அப்பெயரிலுள்ள அக்ஷரங்களைப் பிரித்துப் பொருள் கூறி எல்லாம் ப்ராணனே என்று புகழ்கின்றது.

2. 2. 2. இதிலும் முன் தொடங்கின விஷயத்தின் தொடர்ச்சியே—பல ரிஷிகளின் பெயர்களை ப்ராணனிடம் பொருந்தச் செய்வதேயாம்.

2. 2. 3. உக்த்தமென்ற சஸ்த்ரத்தில் ப்ருஹதி என்ற சந்தஸ்ஸு ஆயிரமிருப்பதாகக் கொள்க. இவற்றை விச்வாமித்ரர் விளங்கச் சொல்லும்போது இந்த்ரன் அணுகிக் கேட்டான். அதனால் இந்திரனுக்கு ப்ரியமான இதை இவர் பெற்றிருப்பதால் அவன் மீண்டும் ஒருதரம் அவரிடம் இதைக் கேட்டுக் களித்து மூன்றுந்தர மும் சொல்லச் சொல்லி வரன் அளிப்பவனானான். விச்வாமித்ரரும், உன்னையே நான் அறியவேண்டு மென்று வேண்டினார். இந்திரன், 'நான் ப்ராணன், எல்லா பூதங்களும் ப்ராணனே. ஆதித்யன் ப்ராணனே. அவ்வகையில் நான் எங்கும் புகுந்திருக்கிறேன். எனக்கு அன்னம் இது, வைச்வாமித்ரம் என்று பேர்பெறும்' என்றான். (கௌஷீதகியிலுள்ள ப்ரதர்தநவித்யை—இந்த்ரப்ராணவித்யை இங்கு நினைக்கவுரியது.)

2. 2. 4. உக்த்தத்தி லடங்கிய ஆயிரம் ப்ரஹதி களில் எது உடல், எது ஆத்மா, எது ப்ராணன் என்று தெளிவித்து, இதனை யறிந்தே வஸிஷ்டர் வஸிஷ்டரானு ரென்றெல்லாம் புகழ்ந்து—ப்ருஹதி என்ற சந்தஸ்ஸுக்கு மொத்தம் எழுத்துக்கள் 36 ஆகும். உக்த்தத்தில் 36000 அக்ஷரங்கள் இருப்பதால் இதில் ப்ருஹதீஸஹஸ்ரம் உள தென்று கூறி, ஒரு புருஷாயுஸ்ஸான நூறு வருஷத்திற்கு நாட்கள் 36000 ஆம்; இவ்வாறு இதனை யறிந்தவன் பிறகு ப்ரஜ்ஞாமயனுய் தேவதமயனுய் ப்ரஹ்மமயனுய் அம்ருதமயனுய் தேவதைகளை யடைகிருன். (ஆதித்ய னுகிர ப்ராணனை மனதிற்கொண்டு) 'அவனே நான்,' 'நானே அவன் என்று இரண்டிடங்களிலுமுள்ள பரமாத்மா ஒன்று என்று ஐக்யோபாஸனம் செய்ய வேண்டுமென்றது. (இந்து ஐக்யத்தை ப்ரம்ம ஸூத்திரத் திலும் 'ஆத்மேதி து—என்ற ஸூத்ரத்திலே விசாரிப்பர்.

2. 3. 1. தன்னை ப்ருதிவி, வாயு, ஆகாயம், தண்ணீர், தேஜஸ் என்று ஐந்து விதமான உக்த்தமாக நினைக்கவேண்டுமென்றதும், இதிலே எது அன்னம், எது அன்னத்தை உண்பது என்ற பிரிவும் சொல்லப் பட்டதாம்.

2. 3. 2. மரம் செடி முதலானவற்றில் ஆத்மா சிறிது விரிந்திருக்கும்; அவற்றில் (வசிர்ச்சிக்குக் காரணமான) ப்ராண சக்தியுளதே. ப்ராணிகளிடத்தில் விரிவு அதிகம்; மனதின் வியாபாரமுமிருப்பதாதலின் மனிதவுடலில் ஆத்மாவுக்கு மிகவும் அதிகமான தோற்றமாம். அறிவு நிறைந்தவனுய்—எப்பொழுதோ அறிந்ததைப் பற்றிப் பேசுகிருன்; அதைக் காண்கிருன்; நாளைக்கு நடக்கப் போவதை யறிகிருன்; காணக்கூடியது கூடாததுபோன் றன எல்லாம் அறிகிருன்; அறிவுறும் உடலிலிருந்தே அழிவற்றதைப் பெறப் பிரயாசைப்படுகிருன். இப்படி

நிறைந்தவன் இவன் மற்ற ப்ராணிகளுக்கு பசி தாகம் இவற்றைப் பற்றிய அறிவேயாகும் என்றது.

2. 3. 3. இந்த மனித வுடலிலே பஞ்சபூதங்களின் அம்சங்கள் இருக்கின்றன. அவற்றில் வாயுவானது ப்ராணன், அபானன் என்றவாறு ஐந்து விதமாம், ப்ராணுபானங்களுக்கு அடங்கினவை கண், காது, மனம், வாக்கு என்பவை. வாக்கினாலான யஜ்ஞமும் ஐந்துவிதம். இவற்றிற் சேர்ந்தது ஸோமயாகம். அதுவும் ஐந்துவிதம்—ஸோமரஸத்தைப் பிழிந்து யாகம் செய்யும் காலம் ஸவனமென்பது; அதற்கு முன்னும், மூன்று ஸவனகாலங்களும், அவற்றிற்குப் பின்னுமென ஐந்து பிரிவுகளாமென்றது.

2. 3. 4. உக்த்தமென்பதைப் பலவகையில் ஐந்து விதமாக்கி அதில் ப்ருஹதி, ஆயிரம், ஸ்தோபாக்ஷரம் (பொருளில்லாத சொல்) ஆயிரமென்றும், அவற்றில் சில த்ருஷ்டி (பாவனை)களையும் சொல்லும்.

2. 3. 5. உலகத்தில் வேறு சந்தஸுக்களை கொண்டு த்ருஷ்டுப் ஆயிரம், ஜகதி ஆயிரம், அநுஷ்டுப் ஆயிரம் என்று சிற்சிலர் நினைப்பார்கள். அது தவறு. ப்ருஹதி ஆயிரமென்பதே சரி. ப்ருஹதி என்பது ப்ரதானமாய் நடுவுடல் போன்றது. மற்ற சந்தஸ்ஸுக்கள் அந்த அங்கத்தைச் சார்ந்த அங்கங்கள் போன்றவையாமென்றது.

2. 3. 6. உக்த்தமென்பதே எல்லாச் சொற்களுமாம். சொற்களை-வாங்மயங்களை ஐந்தாகப் பிரிக்கலாம்—: விருத்தத்திலமைக்கப்பட்டது, கத்யமாயிருப்பது, கீதி, மெய், பொய் என்றவாறு. ஸத்யமென்பது பூவும், பழமுமாம். பொய் என்பது வேர். வேரை வெளிப்படுத்தலாகாது. வேர் வெளிவந்தால் மரம் போயிடுமே. மெய்

பொய் இரண்டும் வேண்டும். எப்போது யார் கேட்டாலும் சரி என்று இசைவதும் தவறு. எப்போதும் இசையாம விருப்பதும் தவறு. உரிய காலத்கில் கொடுக்க வேண்டும்; மற்ற காலத்தில் கொடாமலிருக்கவேண்டும். இப்படி மெய்யும் பொய்யும் சேர்ந்து மிதுனமாம். இதனின்று வளர்கிருன். இதனை யறிந்தவனே சரியாக அறிந்தவன்.

இந்த வாக்குகளெல்லாம் அகாரமொன்றேயாம். இதே மேன்மேல் பல வுரு எடுக்கிறது என்றது.

2. 3. 7. இந்த ஆயிரம் ப்ருஹதியை ஸர்வப்ராணிகளுக்கும் பதியான இந்திரனாக பாவிக்கவேண்டும். அதனால் இந்த்ரனாகி லோகங்களில் விளங்குவான். மீண்டும் பிறப்பு உண்டு. சுக்லசோணிதங்களென்றவை புருஷனுடையவும் ஸ்திரீயினுடையவும் அம்சங்கள். அவற்றைக் கண்டு வெறுப்பு-அருவருப்புக் கொள்ளலாகாது. ஆதித்யனுடையவும் அக்னியினுடையவும் அம்சங்களாம் அவை. இரண்டு உருக்கள் ஒன்று சேர்வதால் ஆத்மா இவ்வுலகினை யடைகின்றதும், வேறு உலகம் புகுகின்றதுமாகிறது-இந்த ஆத்மாவை ஸ்திரீ என்பவனும், நபும்ஸகமென்பவனும், புருஷன் என்பவனும் ஆத்மாவையறிந்து சொன்னவனாகான். (ஆத்மஸ்வரூபத்தில் ஆண், பெண், பேடியென்ற வகை யொன்றுமில்லை) அ என்ற சொல்லானது பரப்ரம்மத்தைச் சொல்லும். (இதனால் அகரத்தின் பொருளாக லோக வேத ப்ரஸித்தனான நாராயணனே ப்ரஹ்மம் என்றதாகிறது) நான் என்பது அதைச் சார்ந்ததாம். புருஷனுடைய ஆயுள் நூறு வயதாம். அதாவது முப்பதாயிரம் நாள். ப்ருஹதீ என்ற சந்தஸ்ஸு ஆயிரமென்றோமே. அவற்றின் எண்ணிக்கையும் அவ்வளவே. இவ்வாயுளில் தேவரதம் ஏறிச் செல்லவேண்டும், இந்த தேவரதம் காமிகளாய் வேறுபலன் விரும்பித் திரிகின்றவர்களுக்கு

ஆகாதது. இந்த ரதம்—வண்டியானது ஐந்து உருக்களாகும். வாக்கு என்பது ஏர்க்கால்; காதுகள் சக்ரங்கள்; கண்கள் கட்டிய குதிரைகள்; மனம் கடிவாளம் (அல்லது தேர்ப் பாகன்); ப்ராணன் முதலாளி, (இப்படி கீழ் ப்ரஹ்மகிரி என்று சொன்ன ஐந்து கருவிகளையும் தேவனை பரமாத்மாவை அடைய ஒரு ரதமாக இங்கே ரூபித்தது).

---

இதுவரையில் இப்போது ப்ரஸித்தமாய் எல்லோரும் படிக்கும் ஐதரேயோபநிஷத்தின் முன்பாகமாயிற்று. இனி அந்த ப்ரஸித்தமான பாகம் ஆத்மஷட்கமென்ற-4,5,6,7, அத்யாயங்கள். எல்லோரும் பாஷ்யம் செய்திருப்பதான நடுபாகம் இது—

## ஆத்மஷட்கத்தில் கண்டம் (1)

2. 4. 1. இவ்வுலகு ஸ்ருஷ்டிக்குமுன்பு ஆத்மா ஒன்றுகவே இருந்தது; வேறு வ்யாபரிப்பதொன்றுமில்லை. அவ்வாத்மாவானது, 'உலகங்களை ஸ்ருஷ்டிக்கக்கடவனே' என்று பார்த்தது. அம்பஸ்ஸு, மரீசி, மரம், அப்பு என்ற உலகங்களை ஸ்ருஷ்டித்தது. (இச் சொற்களுக்குப் பொருள் அறியப்படாமலிருப்பதாலே உபநிஷத்தே பொருளையுமுறைத்தது) அம்பஸ்ஸாவது ஸ்வர்க்கலோகம் தொடக்கமாய் மேலுள்ள வுலகம். மரீசி யென்பது அந்தரிக்ஷலோகம். மரமாவது பூலோகம். இதன் கீழுள்ளவுலகம் (பாதாளம்) அப்பு.

இப்படி உலகங்களை ஸ்ருஷ்டித்த பிறகு லோகபாலர்களை ஸ்ருஷ்டிக்க நினைத்தது. ஜலத்தினின்று ஒரு புருஷ வடிவத்தை யெடுத்து உருவாக்கினது.

அப்போது அவ்வுருவில் அண்டம் போல் வாய் ஏற்பட்டது. வாயினின்று வாக்கு என்ற இந்திரியமும்,

அவ்வாக்கினின்று அதன் தேவதையான அக்னியும் வெளிக்கிளம்பின. இப்படியே மூக்கும், அதிலிருந்து ப்ராணனும், அதிலிருந்து வாயுதேவதையும். இம்முறையிலேயே கண்மலரும் கண் என்ற இந்திரியமும் ஆதித்ய (ஸூர்ய)னும், காது என்ற உருவும் அங்குள்ள இந்திரியமும் திக்தேவதையும், சருமமும் மயிர்களும் ஒஷதிவநஸ்பதி என்ற தேவதையும், ஹ்ரதயமும் மனதும் சந்த்ரனும், நாபியும் அபானமும், ம்ருத்யு தேவதையும், ஆண்குறியும் வீர்யேந்திரியமும் அப்(ஜல)தேவதையும், இப்படி ஒவ்வோர் அவயவமும், அதனின்று ஓர் இந்திரியமும் அதனின்று அதன் தேவதையும் தோன்றின.

## (2)

2. 4. 2. இப்படி ஸ்ருஷ்டிக்கப்பெற்ற தேவதைகள் இப்பெருங்கடலிலே மூழ்கினர். அவ்வாத்மாவானது அப்புருஷவுருவைப் பசிதாகங்களுக்கு இலக்காக்கினது. அத்தேவதைகள், நாங்கள் எங்கு இருந்துகொண்டு அன்னத்தைப் புசிக்கக்கடவோமோ, அவ்வித இடம் ஒன்று நினைத் (ஸங்கல்ப்பித்) தருளவேணுமெனக் கேட்டுக்கொண்டனர். அவர்களுக்கு கோ(மாடு)வைக் கொடுக்க, அவர்கள் 'இந்த இடம் எங்களுக்குப் போதுமானதல்ல என, பிறகு குதிரையைக் கிட்டவைக்க, அதையும் போதாதென, புருஷவுருவை இயற்றிக் கொடுக்க, அவர்களும், நன்றென, மகிழ்ந்து நிற்க, அவ்வுருவிலே அவர்களைப் புகவைத்தது அவ்வாத்மா.

அக்னி தேவதையானது வாக்கு என்ற இந்திரியத்தை ஆள்வதற்கு வாயில் புகுந்தது. இப்படி முன் சொன்ன தேவதைகள் தங்களுக்கான இந்திரியங்களை நியமிக்கத் தம் தம் இடங்களிலே புகுந்து நின்றனர். பிறகு பசி, தாகம் என்ற இரண்டும், 'நாங்கள் புகுமிடமெது?' என் வினவின. இத் தேவதைகளுக்குள்ளவற்

றிலே உங்களுக்கும் பங்கு ஏற்படுத்துகிறேன்' என்றது அவ்வாத்மா. ஆகவே எந்த தேவதைக்கு ஹவிஸ்ஸை அர்பணம் செய்தாலும் பசி தாகம் என்ற இரண்டும் அதில் பாகம் பெருகின்றன. (எல்லோரும் பசி தாகங்கள் ஏற்பட அவற்றிற்காகவே உண்கின்றராதலின் உண்பதில் அவைகளுக்கும் பாகமுண்டென்றதாம்.) இதனுல் தேவதை முதலாக எல்லாம் பசி தாகத்திற்குட்பட்டனவே யென்றதாயிற்று.

"ஆப்ரஹ்ம ஸ்தம்ப பர்யந்தா: ஜகதந்தர் வ்யவஸ்தீதா;
ப்ராணிந: கர்மஜநித ஸம்ஸார வச வர்த்திந: ॥"

பிரமன் முதல் பூடு வரையில் உலகிலுள்ள ப்ராணிகள் யாவும் தங்கள் வினைகளா லாக்கப்பட்ட ஸம்ஸாரத்திற்கு வசப்பட்டவர்களே என்றதாயிற்று).

## (3)

2. 4. 3. 'இனி இவர்களுக்கு அன்னத்தை ஸ்ருஷ்டிக்க வேண்டும்' என்று நினைத்து ஜலத்திலிருந்து அன்னமாகும் உருவை ஸ்ருஷ்டித்தது. அவ் அன்னமானது, 'தன்னை இவர்கள் புசித்துவிடுவார்களே' என்றஞ்சி அப்பால் விலகப் பார்த்தது. (எலி முதலியன பூனை முதலானவற்றைக் கண்டு அஞ்சி ஓடிவிடுகின்றனவல்லவா.) அப்போது விரைவில் அந்த உணவை வாக்கு, கண், மூக்கு முதலிய இந்திரியங்களால் எடுத்துண்ண முயன்று அம் முயற்சி வீணுனமையைக் கண்டது. வாக்கு என்ற இந்திரியத்தாலே 'அன்னம்' என்றவாறு வ்யாஹாரம் செய்யலாமே யன்றி உண்ண வியலுமோ? இப்படி அந்தந்த இந்திரியத்தாலே அததன் வ்யாபாரத்தைச் செய்ய முடியுமே யல்லது உண்ண வொண்ணுது. பிறகு முகத்தினின்று கீழ்நோக்கிச் செல்லும் அபானம் என்ற வாயுவினுலே உணவை உண்ணத் தெரிந்து கொண்டது. பிறகு அவ் ஆத்மா 'இவ்விந்திரியங்களே, தம் தம்

தொழிலைச் செய்ய இயன்றனவாகில், 'நாம் யார்? நமக்கென்?' எனச் சிந்திக்கலாயிற்று. பிறகு (அத் தேவதைகளுக்கும் இந்திரியங்களுக்குமுள்ள இடங்களுக்கு மேலுள்ள) ஸீமாவை, அதாவது சிரஸ்ஸிலுள்ள இடத்தைப்பிளந்து கொண்டு புகுந்தது. இந்த வழிக்கு வித்ருதி எனப் பெயராம். இது ஆநந்தத்தைத் தரும் வழி. இவ்வுடலிலுள்ள ஆத்மாவுக்கு ஜாகரம், ஸ்வப்நம், ஸுஷுப்தி, (அதாவது விழிப்பு; சொப்பனம், தூக்கம்) என மூன்று ஸ்தானங்கள் உண்டு. எல்லாம் நீடிக்காமல் அழியக் கூடியனவாகையால் ஸ்வப்னம் போலாகின்றது பற்றி மூன்றும் ஸ்வப்னமென்றே சொல்லத்தகும். ('த்ரய: ஸ்வப்நா:' என்ற வாக்கியத்தின் பொருளை நமது பரமார்த்த பூஷணத்தில் காண்க.)

இப்படி உடலில் உட்புகுந்து நாம ரூப வ்யாகரணம் செய்து இவ்வாத்மாவானது, இப்படியுள்ள தன்னிலையைக் காண்பது கூடவேண்டுமே. உலகு தனக்குடலாக இருந்தும் அப்படி தன் உடலாய்த் தோன்றாது வேறு வகையாகவே தோன்றிவிடுமோ' என நினைத்தது. பிறகு, 'இதனைக் கண்டேன். எங்கும் ப்ரம்மம் வ்யாபித்துள்ளது. உலகு உடலாகவேதோன்றல் கூடும்' என்ற தோற்றம் பிறந்ததால் ஆச்சர்யமேற்பட்டது. இப்படி அதன் உண்மைநிலை கண்டதைக் கொண்டு, 'இதனைக் கண்டவன்' என்ற பொருளிலே 'இதந்த்ர:' என்ற பெயர் ப்ரஹ்மத்திற்கு ஏற்பட்டிருக்க அப்பெயரை மறைத்து, 'இந்த்ர:' என்கிற பெயர் வைத்து தேவதைகள் பரமாத்மாவை வழங்குகின்றனர். மறைப்பதே எப்போதும் தேவதைகளுக்கு ப்ரியமல்லவா?'

## (4)

2. 5. ஸம்ஸரித்துக் கிடக்கும் ஜீவாத்மா முதலில் புருஷனிடத்தில் வீர்யமாக நிற்கிறான். புருஷன் தன்னு

டைய எல்லா அவயவங்களினின்றும் வீர்யத்தை ஒன்று சேர்த்துத் தன்னுள்ளே தரித்துப் பிறகு ஸ்த்ரீயினிடத்தில் சேர்ப்பதே இஜ்ஜீவாத்மாவுக்கு முதல் பிறப்பாம். அந்த வீர்யமானது ஸ்த்ரீயின் உடலில் மற்ற அவயவங்களைப் போல் ஓர் அவயவமாய் நின்றுவிடவே அதனால் பாதை யின்றி, அதையும் பாதிக்காமல் அருமையாய் அதை அவள் போஷித்து வருகின்றனள்; இப்படி பர்த்தாவின் உருவமே உட்புகுந்திருப்பதை நினைத்து, கருத்துடன் அக் கருதரித்துவருமவளை பர்த்தாவும் பந்துக்களும் நன்கு போஷித்து வரவேண்டும். இப்படியுள்ள கர்ப்பம் குமாரனாக பிறப்பதற்கு முன்னும் பின்னும் எப்போதும் சாஸ்த்ரம் சொல்லும் முறையிலே பல ஸம்ஸ்காரங்களைப் புருஷன் செய்து வருவதாம். (தானே குமாரனாகிறபடி யால்) இப்படி குமாரனுக்கு இவன் செய்வதெல்லாம் தனக்குச் செய்வதேயாம். இம் முறையிலே உலகில் ஸந்ததி விருத்தி ஏற்படுகிறது. இவ்வகையில் இரண்டா வது பிறப்பும் சொல்லியாயிற்று.

இப்படி பிறந்த குமாரன் புண்யகர்மங்களுக்காகப் பிதாவுக்கு பிரதிநிதி (பதில்) ஆகிறான். இங்ஙனம் தனக்கு பதிலாய் தன் மற்றோர் உருவாய் புத்ரன் நின்ற தாலே பிதாவும் செய்யவேண்டுவன செய்தவனாகிறான். பிறகு ஆயுள் முடிந்தவாறு மரித்து மறுபடி பிறக்கிறான். இது ஜீவாத்மாவுக்கு மூன்றாம் ஜன்மமாம்.

இவ்வண்ணம் ஜீவன் மாறிமாறிப் பல பிறப்பு பிறந்து வருவதை வாமதேவரென்னும் ஓர் இருஷியானவர் தாம் தாயின் கர்ப்பத்திலே கிடந்திருக்கும்போதே கண்டு கொண்டதை அவர் தாமே வியந்து மொழிந்துள்ளார். அது பின் வருமாறு—'நான் கர்ப்பத்திலே இருக்கும் போதே இந்த தேவதைகளின் எல்லாப் பிறவிகளையுமறிந் தேன். இரும்பினாலான நூற்றுக்கணக்கான பட்டணங்

கள் (திடமான உடல்கள்) கர்மபந்தத்திலிருந்து விடுபடாதபடி என்னைக் காத்தன. நான் எனது சக்தியாலே அம்ருதத்தை அபஹரிக்கும் கெருடனைப்போலே கீழ் நோக்கிக் கிளம்பி வெளிவந்தேன்.'

இப்படி அறிந்த வாமதேவர் உடல் விழுந்ததும் மேற்கிளம்பி அவ்வுலகமாகிய ஸுவர்க்கம் (பரமபதம்) சென்று எல்லாக் கல்யாணகுணங்களையும் அனுபவித்துக் கொண்டு முக்தி யென்னும் பெறும் பேறு பெற்றார்.

## *(5)*

2-6. நாம் ஆத்மாவென்று எதனை உபாஸிக்கின்றோம், அவ்வாத்மா எவ்வித குணமுள்ளதென ஆராய வேண்டும்.

பார்க்கவும், கேட்கவும், முகரவும், பேசவும், உருசி காணவும், மற்றுமிவ்வண்ணமான உணர்ச்சிகளுக்குக் கருவிகளாயுள்ளனவும், அவற்றிற்கு வேர்க்கிழங்கு போன்ற ஹ்ருதயமும், மனதும், பொதுவறிவு, பகுத்தறிவு, நுண்ணறிவு, விரிவறிவு, மறவாத அறிவு, காணல், நிச்சயித்தல், ஊஹித்தல், மனதைச் செலுத்துதல், தேறுதல், நினைத்தல், ஸங்கல்பித்தல், செய்தல், ஆசைப்படுதல், அடக்குதல் என்றெல்லாமுள்ள தர்மபூதஜ்ஞானத்தின் உட்பிரிவுகளும், ப்ராணன் முதலானவையுமெல்லாம் ப்ரஜ்ஞானம் எனப்படும்; ப்ராஜ்ஞனை பரமாத்மாவிற்கு நாமதேயங்களாம்; அதாவது— அவன் பெயர்கள் போல் அவனுக்கென்றே ஏற்பட்டனவாம். ஆக அவனே ஸர்வசேஷி; ஸர்வாத்மா.

இவைமாத்திரமல்ல. இவற்றிற்கெல்லாம் தேவதைகளான (கீழ் கூறப்பெற்ற) ப்ரஹ்மாவும் இந்த்ரனும் ப்ரஜாபதியும் மற்றுமுள்ள தேவதைகளும், ப்ருதிவீ, வாயு

ஆகாயம், நீர், நெருப்பு என்ற பஞ்ச பூதங்களும் அவனுக்கு சேஷங்களே. தன்னைப் போலவும் தனக்கு சேஷங்களான தேவர்களைப் போலவுமிருக்கத் தகுதி இயற்கையிலே இருந்தும், கர்மவசத்தாலே அது மறைந்து க்ஷுத்ரங்களாய் அற்ப சக்திகள் போலுள்ள பல ஜீவாத் மாக்கள் சேர்ந்துள்ள பலவித வுடல்களின் விதைகளும், யோநிஜங்கள், அயோநிஜங்கள் முட்டையிற் பிறந்தன, கர்ப்பப்பையிற் பிறந்தன, புழுக்கத்திற் பிறந்தன, பூமியைப் பிளந்து பிறந்தன வென்றெல்லாமுள்ள சரீரங் களும், இப்படி குதிரை, மாடு, மனிதர், யானை என்றாற் போலுள்ள நடக்கும் அல்லது பறக்கும் ப்ராணிகளும் நிற்பனவும் எல்லாம் பரமாத்மாவின் ஆஜ்ஞா சக்ரத்திற் குட்பட்டு அவனிடம் நிலைபெற்றனவாம். இப்படியுள்ள ப்ரஜ்ஞானமே ப்ரஹ்மம்.

இந்தப் ப்ராஜ்ஞனான பரமாத்மாவினாலே ஜீவன் இவ் வுலகினின்று விடுபட்டு அவ்வுலகாகிய சுவர்க்கம் சென்று ஸர்வகாமங்களையும் அவனுடன் பெற்று முக்தனாகிறான்.

## (6)

## (சாந்திபாடம்)

2-7. வாக்கு மனதில் நிலையுற்றது. மனது வாக்கில் நிலையுற்றது. எனக்கு மேன்மேல் தோன்றி விளங்குக. வேதத்தை எனக்குக் கொண்டு சேருங்கள் (வாக்கே! மனதே!), எனக்குள்ள படிப்பை அழிக்க வேண்டா. ஓதிக்கொண்டே இராப்பகல்களைக் கழிப்பேனாக. மெய்யே சொல்வேன். உண்மையைச் சொல்வேன், அது என்னைக் காக்கவேணும். அது எனக்குக் கற்பிப்பவரைக் காக்கவேணும். எல்லா தோஷங்களும் நீங்கி எங்கும் சாந்தியே நிற்க.

(சாந்தி: சாந்தி: சாந்தி: என ஒரு தரத்திற்கு மூன்று தரமாகச் சொல்வது மிக்க ஆதரத்தினாலேயாம். மநோவாக் காயங்கள் மூன்றும், மூவுலகும், முக்காலங் களும், சேதநாசேதநேச்வரதத்துவங்கள் மூன்றும் இவ்வாறுள்ள எல்லா மூன்றும் சாந்தி பெற்று விளங்குக என்றதுமாம். ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதி தைவிகம் என்ற மூன்று தாபங்களும் நீங்கவேண்டு மென்றதுமாம்.

இது ஐதரேயோபநிஷத்திலுள்ள ஆத்மஷட்கமென் னும் ஆறுகண்டங்களின் அர்த்தச்சுருக்கு.

---

முக்கியமான நடுப்பாகத்தின் ஸாரம் கூறியாயிற்று. இனிமேற்பாகத்தின் சுருக்கம்—அதாவது இரண்டு அத்தியாயங்கள் கொண்ட 3-வது ஆரண்யகமென்ற மேற்பாகம் முழுமையும்—

## 3.—1.

இது ஸம்ஹிதோபநிஷத்தாம். தைத்திரீயத்திலும் இவ்விசாரமுண்டு.

3. 1. 1. பூர்வரூபம், உத்தரரூபம், ஸம்ஹிதை என்ற வற்றில் பல த்ருஷ்டிகள்.

3. 2. 1. பூர்வரூபம், உத்தரரூபம், ஸந்தி, ஸந்தாதா என்றவற்றில் த்ருஷ்டிகள்.

3. 1. 3. நிர்புஜம், ப்ரத்ருணம், அநுபயம், என்ற வற்றில் த்ருஷ்டிகள். நிர்புஜமாவது ஸம்ஹிதை; ப்ரத் ருணமாவது-பதம்; அநுபயமாவது க்ரமமென்பர்.

3. 1. 4. ப்ராணன் வீட்டிலுள்ள நடு மூங்கில் போன்றதென்கிறது.

3.1.5. ஸம்ஹிதையாவதென்ன என்பதில் மத பேதம்—முன்பின் அக்ஷரங்களுக்கு இடையிலுள்ளது ஸம்ஹிதையென்றும், ஸ்வரம் முதலிய விசேஷத் தோற் றம் முன் பின் வர்ணங்களின் சேர்க்கையிலாவது ஸம் ஹிதையென்றும், முன்பின் வர்ணங்களின் நெருக்கம் (ஸந்நிகர்ஷம்) ஸம்ஹிதை யென்றும் பலபடி ரிஷிகள் கூறுவர்.

3.1.6. ஸம்ஹிதை விஷயத்தில் தைத்ரீயத்தில் சொன்னவையும் சொல்லாதவையுமான பல த்ருஷ்டிகள்.

---

3. 2. 1. மனிதவுடலில் எலும்புகள் 360, அவற்றி லுள்ள கொழுப்பு 360 ஆக 720. ஒரு வருஷத்தில் பகல் 360, இரவு 360 ஆக 720. ஆகையால் உடலில் வீட்டில் எல்லா மூங்கில்களுக்கும் ஆதாரமான நடு மூங்கில்போல கண் காது மனம் முதலானவற்றிற்கு ஆதாரமான ப்ரா ணனை நாளுக்கு ஸமமாகப் பார்த்து பாவனை செய்தால் ஆயுள் முதலிய பலன் உண்டென்றது.

3.2.2. அக்ஷரங்களில் 360, 360 ஆக இரண்டு பாகம் செய்து அவற்றின் சேர்க்கையையும் 360 ஆக்கி, வருஷத்தில் பகல் 360 இரவு 360. ஸந்தி 360 என்று கூறி ஒவ்வொன்றும் 1080 ஆமென்றும், ஒரு நாளில் ப்ருஹதி 1080ஆகிறபடி, எலும்புகளையும் கொழுப்பையும் 540, 540 ஆகப் பிரித்துக் கூட்ட 1080 ஆமென்றும் சொல்லி அக்ஷ ரத்திற்கும், அஹஸ்ஸுக்கும் ஸமமாக பாவனை செய்யப் பலனைக் கூறிற்று.

3.2.3, புருஷனென்பது சரீரம், சந்தஸ், வேதம், மஹாபுருஷனென நான்கு விதமாம். சரீர புருஷனுக்கு ரஸம் ப்ரஜ்ஞாத்மா. சந்தப்புருஷ னென்ற அக்ஷர

ஸமாம்நாயத்திற்கு ரஸம் அகாரம். வேதபுருஷனாகிய மூன்று வேதங்களுக்கு ரஸம் பிரமன். மஹாபுருஷனாவது ஸம்வத்ஸரம். அதன் ரஸம் ஆதித்யன். சரீர ரஸமான ப்ரஜ்ஞாத்மாவையும் மஹாபுருஷ ரஸமான ஆதித்யனை யும் ஒன்றாக பாவிக்க வேண்டும். எல்லா வேத வித்துக் களும் விசாரிக்கிறது இதனையே. எங்குமுள்ள ப்ரஹ்மம் இதுவே என்றெல்லாம் ஸம்வத்ஸரத்தோடு சமமான பாவனையைச் சொல்லிற்று.

3 2.4 ஸூர்யமண்டலத்திலுள்ள ஆத்மாவுடன் இங்குள்ள ஆத்மாவை ஒன்றாக த்யானம் செய்யாதவன் தனக்கு மரணகாலம் நெருங்கிவிட்டதாகச் சில துஸ் ஸ்வப்பனங்களாலும் மற்ற நிமித்தங்களாலும் கண்டால் ஜபம், ஹோமம், ப்ராஹ்மண போஜனம் எல்லாம் நடத்தி, ஒருவரும் அறியவாகாததும் எல்லாம் அறிந்ததுமான பரமாத்மா தன் ஆத்மாவின் அந்தராத்மா என்று தெளிய வேண்டுமென்று கூறி மந்த்ரதையும் ஓதிற்று.

3.2 5. அக்ஷரங்களைப் பிரித்து சிலவற்றைச் சில லோகங்களாகவும் தேவதைகளாகவும் இந்திரியங்களாக வும் த்யானம் செய்கிற முறையைச் சொல்லி சரீரமே வீணையென்றும், மரத்தினாலாம் வீணைக்கும் இதற்கும் ஒத்துமை உள்ளதென்றும் விளக்கிற்று. வீணைக்குத் தலை, வயிறு, நாக்கு, விரல்கள், ஸ்வரங்கள் அக்ஷரங்கள் எல் லாம் இருக்கின்றனவே. உடல் வீணையைப் பார்த்து இவ் வீணை அமைக்கப் பெற்றது உடல் மயிர் நிறைந்த தோலால் மூடப்படுமற வண்ணம் வீணையும் மூடப்படு கிறது. இந்த உடலால் தெய்வ வீணையை யறிந்தவன், எல்லாம் கேட்டுப் பேசும் திறமையுடையனாய் பார் அடங் கப பரவும் புகழுடையனாய், எங்குமுள்ள ஆரியர்களும் இவனை யறிந்திருக்கும்படி விளங்குவான். (ஸ்ரீ தேசிகன் தயாசதகத்தில்)

''வேதாந்த தேசிகபதே விநிவேச்ய பாலம்
தேவோ தயா சதகமேதத் அவாதயந் மாம்.
வைஹாரிகேண விதிநா ஸமயே க்ருஹீதம்
வீணா விசேஷமிவ வேங்கடசைல நாத:''

என்று வீணா விசேஷத்தோடு தம்மை ஒப்பிட்டருளினது இங்கு ஓதினதைக் கருதியாம்.)

3. 2. ௬. ஸம்ஹிதையிலே ணகாரம் பலம், ஷகாரம் ப்ராணன் என்கிறது. முடிவாக—இவ்வுபநிஷத்தின் பொருள் அறிந்தவர்கள் ப்ராணனும் பரமாத்மாகவே எல்லா வாக்கியங்களுக்கும் பொருளென்றும் அவனைப் பற்றிய வியவஹாரமே செய்ய வேண்டுமென்றும் தெளிந்து, அத்யயனம், யாகம் என்றவை போன்ற செயல்கள் எல்லாம் செய்கின்றார்களாகிலும், எதையும் வேறு பலனுக்காகச் செய்யோமென்று நிஷ்காமர்களாய் நன்கு விளங்குவார்களென்றது.

இப்படி மூழு

ஐதரேயோபநிஷத்தின் ஸாரம் முற்றிற்று.

## 9. சாந்தோக்யோபநிஷத்து

அடைவாகச் சாந்தோக்யோபநிஷத்தில் ஓதப் பட்டுள்ளவற்றைச் சுருக்கி வரைகின்றோம். ப்ரஸித்தங் களான பத்து உபநிஷத்துக்களில் இரண்டாவதான கேநோபநிஷத்தைப் போலே ஒன்பதாவதான சாந்தோக் யோபநிஷத்தும் ஸாமவேதத்திற் சேர்ந்தது. நான்கு வேதங்களுக்குள் ஸாம வேதத்திற்கே சாகைகள் அதிகம். 'ஸஹஸ்ரம்ஸாம சாகா:' என ப்ரஸித்தியன்றோ. ஒவ் வொரு சாகைக்கும் கடைசியில் உபநிஷத்துண்டாம். கேநோபநிஷத்து என்பது தலவகார ப்ராம்மணத்தைச் சேர்ந்ததெனக் கூறப்பட்டுள்ளது. இச் சாந்தோக்யோப நிஷத்தானது தாண்டிசாகையின் கடைசிப் பாகமான உபநிஷத்தாம். வேதவ்யாஸரென்னும் பாதராயண மாமுனிவர் பிரம்மஸூத்திரத்திற் கையாண்ட உபநிஷத்துக் களிலே இதுவே முதலிலிருந்து கடை வரைக்கும் அதிக மாக எடுத்தாளப்பெற்ற உபநிஷத்து என இதற்கொரு பெருமையை ஸம்ஸ்க்ருத—உபோத்காத்தில் குறித் துளோம்.

எம்பெருமானைப் பெறப் பல துறைகள் இதில் ஓதப் பெற்றுள்ளன. பக்தி மார்க்கங்களான உபாஸநா முறை களை மிகவாக விதிக்கப் புறப்பட்ட இவ் வுபநிஷத்தானது முதன்முதல் தான் ஸாமவேதத்திற் சேர்ந்த தாகையாலே ஸாமகானத்தின் ஓர் அம்சமான உத்கீதமென்பதை முதலில் எடுத்தது. அதிலும் ஏனைய வுபநிஷத்துக்கள் போலவே தானும் ப்ரணவத்தை ப்ரதானமாக ஆதரித்து, ஸாமத்தின் சேர்க்கைக்குத் தக்கவாறு உத்கீதத்திற் குட் பட்டுள்ள ப்ரணவத்தை முன்னமெடுத்து அதில் பலவாறு உபாஸநங்களை ஓதிற்று. பிறகு உத்கீதபதம், ஸாம பதம், ஸாமப் பொது, அதன் அம்சங்கள், அதன் உட்பிரிவுகள் இவைகளை யெடுத்துக்கொண்டு ஆங்காங்கு உபாஸந

வகைகள் சில வருமவற்றைக் காண்பித்தது. இப்படி ஐஹிகம், ஆமுஷ்மிகம் என்று பல பலன்களுக்கான உபாஸநங்களை முடித்து மோக்ஷத்திற்காக வாம பக்தி யோகங்களை மேலே ஓதுகின்றது.

இவ் வுபநிஷத்து எட்டு ப்ரபாடகங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. ப்ரபாடகமாவது அத்யாயம். அத்யாய மென்றே சிலர் பிரித்தனர். ஒவ்வொரு அத்யாயத்திற்கும் அநேகம் கண்டங்கள் உள.

முதலிரண்டு ப்ரபாடங்களில் ஸாமவிஷயமாகப் பல த்ருஷ்டி யுபாஸநங்கள் விதிக்கப்படுகின்றன. த்ருஷ்டி யாவது ஒன்றை மற்றொன்ருகப் பார்ப்பது. உலகில் உயர்ந்ததைத் தாழ்ந்ததாகவும், தாழ்ந்ததை உயர்ந்த தாகவும் பார்ப்பதுண்டு. ஒரு வஸ்து நமக்கு வேண்டா மெனத் தோன்றினுல் அதை ஒரு உபயோகமற்ற வஸ்து வாக, அதாவது—தாழ்ந்ததாகப் பார்ப்பதும், எந்த வஸ்து வைக் கொண்டு நாம் ஒரு பலனைப் பெற விரும்பு கிருேமோ, எதில் நமக்குச் சிறிதாவது ஆதாரம் இருக் கிறதோ, அதில் நமக்குக் கௌரவ புத்தியும், அதை நாம் அபேக்ஷிக்கும் பலனுக்குத் தக்கபடி உயர்ந்ததாகப் பார்ப் பதும் அனுபவத்திலுள்ளவையாம். ஓர் அரசனைக் கொண்டு ஏதேனும் த்ரவ்யம் கிடைக்குமென்று நினைக்கிற போது, அவன் குபேரனென நமக்குத் தோன்றுகிறது. அவனைக் கொண்டு நமக்கு விரோதிகளாயிருப்பாரை நலிய நினைக்கிறபோது அவன் காலாந்தகன் என்கிருேம். காமிநிகளான ஸ்திரீகள் அவனையே மன்மதனென்பர். தர்ம ஸ்தாபனையிலீடுபட்டிருந்தால் பெரியோர் அவனை ஸாக்ஷாத்ராமனென்பர். இப்படியுள்ள பழக்கவழக்கங்களை யநுஸரித்தே சிற்சில இடங்களில் சிற்சில த்ருஷ்டிகளையும் அவ்வித பார்வையோடு உபாஸநம் செய்தால் அதனுல் தகுந்தாற் போல் பலன்கள் ஸித்திக்கிற வகையையும்

உபநிஷத்துக்களும் கூறும். அவ்வண்ணமே இவ்வுப நிஷத்தும் ஸாமவேதத்தைச் சேர்ந்ததானபடியாலே ஸாம கான விஷயமாகப் பல த்ருஷ்டிகளை யுபதேசித்துத் தக்க பலனையும் கூறுகின்றது.

ஸாம என்னப்படும் வேதகானமானது ருக்குகளில் கானம் பண்ணப்படும். ஒவ்வொரு ருக்கிலும் கானம் பண்ணப்படும்போது அந்த கானத்தை ஐந்து பாகங் களாகப் பிரிப்பார்கள். தொடக்கத்தில் ஹிங்காரம்; பிறகு ப்ரஸ்தாவம், பிறகு முக்யமாயுள்ள உத்கீதம். பிறகு ப்ரதி ஹாரம், முடிவில் நிதநமெனவாம். ஏழு பிரிவுகளைக் கொள்வதுமுண்டு. அப்போது ஹிங்காரம், ப்ரஸ்தாவம், ஆதி, உத்கீதம், ப்ரதிஹாரம், உபத்ரவம், நிதனமெனச் சொல்வர். உத்கீதத்தினுள் முதன் முதலிலுள்ள ப்ரண வத்தை ஆதி யென்றும், நிதனத்தையே முன் பாகம் பின் பாகமாகப பிரித்து உபத்ரவம், நிதனம் சொல்வதாகக் கொள்க

இப் பிரிவுகளில் ஏதேனுமொன்றை யெடுத்து அதனைப் பலனுக்குத் தகுந்ததொரு வகையிலே ஓர் உயர்ந்த வஸ்துவாகப் பார்ப்பதை முதல் ப்ரபாடகம் ஓது கிறது ஒன்றை ஒன்றாக நம் இஷ்டப்படி நினைத்தாலே பலன் கிடைத்துவிடாது. அப்படி யுண்டாகில் அதற்கு வேதத்தில் விதிகளும் வேண்டா ஆகையால் வேதம் ஓதின வகையிலேயே அதுவும் ஆகவேண்டும். இவற் றிற்கு மோக்ஷம் பலனன்று. அதற்காம் முக்யமான பக்தி மார்க்கங்கள் மூன்றும் ப்ரபாடகத்தினின்றே பெரும்பாலும் அறிவிக்கப்படும்.

## ப்ரபாடகம் 1.

1. 1. முதற் ப்ரபாடகம் முதற்கண்டம் உக்கீத பாகமான ப்ரணவத்தை யொருவிதம் உபாஸிக்கச் சொல்லுகிறது. அதற்காக உத்கீதம்தான் உலகில் ஸாரமானதென்கிறது. சராசரங்களான ப்ராணிகள் எல்லாம் ஜீவிக்கத் தங்குமிடமாகையாலே பூமியை ஸாரமென்பர். அதற்கும், அதனுல் விளையும் பலன்களுக்கும் மூலமாயிருப்பதாலே அதிலும் ஸாரமாம் ஜலம். அதனுலுண்டான ஒஷதிகள் அதற்கு மேல் ஸாரம். அவற்றைப் புசித்துண்டு பண்ணப் பெறும் மானிடவுருவம் அவற்றிலும் ஸாரம். இவ்வுருவத்தில் வாக்கு ஸாரம். வாக்குகளில் ருக்கு என்பது ஸாரம். அதற்குமேல் சிறப்பாயிருப்பது ஸாமகாநம். அதிற் சிறந்தது உத்கீத மென்கிறது. இதனுல் பூமியிற் பிறவி யென்ருல் மனிதப் பிறவியே சிறந்ததென்றும், அதில் கற்க வேண்டியவற்றில் உத்தீகத்தைக் கற்பதே யுயர்ந்த தென்றும் குறித்தபடியாம். இப்படி உத்கீதம் உத்க்ருஷ்டமான பதவியைப் பெற்றிருப்பதென்றது. அது, வாக்கு ப்ராணன் என்றதொரு மிதுனத்தின் சேர்க்கையானபடியாலே காம பூர்த்தி யளிப்பதென்றது. ப்ரணவமானபடியாலே, ப்ரணவம் ஸம்மதியைக் குறிக்கும் எழுத்தானதாலே, உலகில் ஸம்ருத்தியுள்ளவரே ஏதேனும் அபேக்ஷித்தால் ஸம்மதியளிப்பவராகையாலே, ஸம்ருத்தி யென்ற குணமும் இங்கே பாவிக்கப்படவேண்டுமென்றும் சொல்லிற்று.

உபாஸனமிராமல் விதிக்கப்பட்ட செயல்களைச் செய்தால் அவையும் பயனளிப்பவையானுலும் உபாஸனத்தோடு செய்தபோதுள்ள வீர்யம் அப்போது கிடையாது. ஆக உபாஸநமென்பது, கர்மங்களால் வரும் பலன்களுக்கு ஏதேனுமொரு காரணத்தால் இடையூறுண்டாகு

மாகில் அதை விலக்கி, விரைவில் அப்பலன்களைப் பெறும் படி செய்கிறதென உபாஸனத்திற்குள்ள பெருமையைப் பொதுவிலே கூறிற்று. இங்ஙன் முதல் ப்ரபாடகத்திலுள்ள முதற் கண்டத்தின் சுருக்கமாகும்.

1. 2. இவ் வுத்கீதத்தை வேறு இந்திரயங்களைப் போலப் பார்க்காமல் அவற்றிற்கு மேலான முக்ய ப்ராண வாயுவாகப் பார்த்து உபாஸிப்போர்க்கு விரோதிகள் அழிவது பலன். இதற்காக ஓர் உபாக்யானம்—(கச்யப) ப்ரஜாபதிக்கு (மூத்தாள் இளையாள்களான திதி அதிதி என்ற மனைவிகளின்) புதல்வர்களான தேவர்களும் அசுரர்களும் சண்டையிடும்போது தேவர்கள் உத்தீகத்தைக் கொண்டு அசுரர்களை ஜெயிக்கவேண்டுமென்று முடிவு செய்தனர். முதலில் மூக்கிலுள்ள இந்திரியமாக உத்கீதத்திலுட்பட்ட ப்ரணவத்தை உபாஸித்தார்கள். அசுரர்கள் அதை கெடுத்தனர். அதனால் அது, துர்நாற்றத்தையும் உட்கொள்வதாயிற்று. பிறகு வாக்கு, கண், காது, மனம் என்பவற்றிலொன்றாக முறையே உபாஸித்தனர். அப்போதும் அசுரர்கள் அநாயாஸமாக பாதித்தனர். அதனால் வாக்குப் பொய் பேசவும், கண் காணக்கூடாததைக் காணவும், காது கேட்கக் கூடாததைக் கேட்கவும், மனது தகாததை ஸங்கல்பம் செய்யவும் ஆயின. பிறகு எல்லாவற்றினும் மேம்பட்டதும் முகத்திலிருப்பதுமான ப்ராணவாயுவாக உத்கீத ப்ரணவத்தை உபாஸிப்பதென்று முடிவு செய்து நடத்தினர். அப்போதும் அசுரர்கள் பாவங்களை அதன்மேலெறிந்தனர். எல்லாம் பாறையின் மீதெறிந்த மண்கட்டி போல் துகளாயின. இதனால் முக்கிய ப்ராணனாக உபாஸிப்பவனை எதிர்ப்பவன் பாறையில் எறியப்பட்ட மண்கட்டிபோல் மடிவான் என்றது தேறும். மூக்கு முதலானவை துர்க்கந்தம் முதலானவற்றை யுட்கொண்டு கெடுப்பது போலன்றி

ப்ராணவாயுவானது உண்பது குடிப்பது என்பன செய்து மற்ற இந்திரியங்களையும் காக்கும். இதுவே முக்கியமா மென்றது.

இதன்மேல் இந்த உபாஸனம் செய்த சில ரிஷிக ளின் பெயரையும் ப்ராணனாக பாவிக்கப்பட்ட உத்கீதத் திற்கு ஒரு படிபிணைத்துப் புகழ்ந்து உத்காதா இவ்வாறு உபாஸித்து யஜமானனின் இஷ்டத்தை ஸம்பாதிப்பா னென்றது.

1.3. இதனையே சூர்யனாகவும் ப்ராணனாகவும் பாவிப் பதையும், வ்யாநவாயுவாகப் பார்ப்பதையும் சொல்லி, உத்–கீ–த–என்ற அக்ஷரங்களைப் பிரித்து அவற்றில் சில த்ருஷ்டிகளையும் பலனையும் கூறி, எந்த ஸாமகானம் செய் கிருனோ, அந்த ஸாமம், அதன் ருக்கு, ருஷி தேவதை சந்தஸ்ஸு முதலானவற்றையும், ஆத்மாவையும் த்யானம் செய்துகொண்டு ஸ்தோத்ரம் (ருக்கிலேகானம்) செய்தால் சீக்கிரம் சிறந்த பலன் உண்டு என்றது.

1. 4. உத்கீத ப்ரணவத்தை அம்ருதம் அபய மென்னப்படும் ப்ரம்மமாக வுபாஸிக்கச் சொல்லுகிறது நான்காம் கண்டம். தேவதைகள் ம்ருத்யுவினிடமிருந்து பயப்பட்டு வேத வித்யையினுட் புகுந்து வைதிக மந்த்ரங் களாலே தங்களை மறைத்துக் கொண்டார்கள். அப்போ தும் ம்ருத்யுவானவன் நீரில் மீன்களைக் காணுமா போலே வேதத்தில் மறைந்ததேவர்களை எளிதிற் கண்டுவிட்டான். பிறகு அவர்கள் அங்கு நின்று அம்ருதமும், அபயமு மான ப்ரணவத்திலே புகுந்து நின்று ம்ருத்யுவினிட மிருந்து தங்களைக் காத்துக் கொண்டனர். ஆகவே இதை இங்ஙனம் உபாஸிப்பவனுக்கு ம்ருத்யுவுமில்லை, பயமு மில்லை யென்கிறது. ப்ரணவம் வேதம் விளக்கும் தேவர் களை அடக்கி, அம்ருதமும் அபயமுமான ப்ரஹ்மத்தைச்

சொல்வதால் இதைப் பற்றினுர்க்கு ப்ரஹ்மம் புகலாகிற தெனத் தெளிக.

1. ௭. உத்கீதமும் ப்ரணவமு மொன்றென நினைத்து அதைப் பல கிரணங்கள் நிறைந்த சூர்யனுகவும் பல ப்ராணன்களுக்கு (இந்திரியங்களுக்கு) ஆதாரமான ப்ராணவாயுவாகவும் திருஷ்டி செய்பவனுக்குப் பிள்ளைகள் பலர் பிறப்பர் என்று சொல்லிற்று. உத்கீத ப்ரணவங்களை ஒன்ருக நினைத்தற்கு உரியதொரு விசேஷத்தையும் குறித்தது. உத்காத பாடும் உத்கீத ப்ரணவமும் ஹோதா சொல்லும் ப்ரணவமும் ஒன்றென அறிந்தால் உத்காதா வின் உபாஸனத்தில் குறையிருந்தாலும் ஹோதாவின் உபாஸனம் அதைப் போக்குமென்றதாம் அது.

1. 6-1 அங்கங்களான உபாஸனங்கள் பலவற்றைக் கூறி, —ஆதித்ய மண்டலத்தினுள்ளிருக்கின்ருன் ஹிரண்மய திவ்ய மங்கள விக்ரஹனுத புண்டரீகாக்ஷன். அந்த புருஷனுகவும், நம் கண்ணையும் தனக்கிருப்பிட மாகவுள்ள அந்த எம்பெருமானுகவும் உத்கீதத்தை உபா ஸிக்கலாம். அவனே கானம் பண்ணப்படும் எல்லாவற் றிற்கும் அந்தர்யாமியாகையால் ருக்குகளும் ஸாமங்களு மாகிற எல்லா வைதீக கானங்களுக்கும், உலகில் வீணுதி களைக் கொண்டு செய்யுமெல்லா கானங்களுக்கும் விஷய மாகின்றவன். பாபங்களுக்கெல்லாம் புறம்பேயுள்ளவ னுகையால் உத் என்ற பெயருடையவனுகிருன். உத்கீ தத்தை இப்படிப்பட்டவனும், சூர்ய மண்டலத்தில் விளங்கி அதன் மேலுள்ள உலகுகளையும் தேவபோகங் களையும் ஆள்கின்றவனுமான எம்பெருமானுக உபாஸிப்ப வனுக்கு அவ்வுலக போகங்கள் பெறப்படும். கண்ணி லுள்ளவனுய் கீழ்க்கூறியபடியாகின்றவனும் கீழுள்ள வுலகுகளும் மனுஷ்ய போகங்களும் ஆள்கின்றவனுமான பிராணுக உத்கீதத்தை உபாஸித்தால் இவ்வுலகபோகங்

கள் பெறப்படுமென்றது. இவ்வுபாஸனமானது கீழ்ச் சொன்னபடி யெல்லாமுள்ள பெருமானுக உத்கீதத்தை நினைத்துச் செய்யும் த்ருஷ்டியுபாஸனமாம்.

இங்கே இவன் திருமேனியை வர்ணிக்கும்போது—பொன்மயமான புருஷன்; குழலும், தாடி முதலாக உடல் மயிருமெல்லாம் பொன்மயம்; நகத்தின் நுனிவரையிலாக முழுமையும் பொன்னேயாவான்; ஆனல் கண்கள் மட்டும் செந்தாமறைப் பூப் போன்றவை—என்று ஓதிற்று. பொன் மயமென்பதற்கு அழகாயும் ஒளியுள்ளதாயுமிருக்கும் உரு என்பதிலே நோக்கு. கண்களை வாணிக்கும், 'தஸ்ய யயாகப்யாஸம் புண்டரீகம் ஏவம் அக்ஷிணி' என்கிற வாக்கியம் இங்கேயுள்ளது. கப்யாஸ என்ற சொல்லுக்குப் பொருள் கூறுவதில் பெருஞ் சர்ச்சை யுண்டு. சங்கர பாஷ்யத்திலே, குரங்கின் ஆஸனவாய் போன்ற தாமரைப்பூ எவ்வாறிருக்குமோ, அவ்வாறு கண்கள் என்று உரை செய்யப்பட்டது. ஆனல் வேகத்தில் நபும்ஸகமாயிருக்க, கப்யாஸ: என்று புல்லிங்கமாக்கினர். இது நிற்க. எம்பெருமான் கண்ணைச்சொல்லும்போது ஈனமான உவமை தகுமா என்ற கேள்விக்கு அங்கே ஸமாதானமுளது—குரங்கின் ஆஸனவாய் கண்ணுக்கு நேராகி உவமையன்றே. தாமரையே நேருவமை. அதற்கே உவமை அது என்றவாறு. யாதவப்ரகாசரும் இவ்வாரே பொருள் உரைக்கும்போது பகவதராமானுஜர் கண்ணீர் விட்டு விட்டு தாம் கீழ்க்கண்டவாறு உரைத்தனர். அதாவது—மிகப் புராதனமான த்ரமிடாசார்ய பாஷ்யத்திலேயே கப்யாஸ என்ற சொல்லுக்கு ஆறு பொருள்கள் உரைக்கப் பெற்றன. அவையாவன—குரங்கின் ஆஸனவாய்போன்றது, சிறிது மலர்ந்தது ஸூர்ய மண்டலம், ஜலத்திலிருப்பது, தண்டோடு இருப்பது, ஸூர்ய கிரணத்தால் மலர்ந்தது என்பன. இங்கு முதல் பொருளில் ஈன உவமையாம் தாமரைப்

பூவிற்கே இது உவமை யென்னிலும் அதாம். உவமைக்கு உவமை வேண்டுவதுமில்லை. புண்டரீக மென்பதற்கு வெண்தாமரை என்ற பொருள் கொள்ளாமைக்காம் இது என்னில், புண்டரீக பதம் செந்தாமரையிலே வேத ப்ரஸித்தமாகையால் இது வீணும். இரண்டாம் பொருள் சொல்லினின்று எளிதில் கிடைக்காது. ப்யாஸகம் என்றிருந்தால் கூடலாம். மூன்றும் பொருளில் ஸூர்ய மண்டலமும் ஹ்ருதய புண்டரீகமும் எப்படி பகவானுக்கு இருப்பிடமோ, அப்படி கண்களும் இருப்பிடமென்று வாக்கியத்திற்கு உரையாகிறது. இது திருமேனி வர்ணன ஸந்தர்ப்பத்திற்கு சேராது. ஆகையால் த்ரமிடபாஷ்யம் தோன்றும் மூன்று அர்த்தங்களை முதலில் காட்டி விட்டு விட்டு, மேல் மூன்றையே தழுவினது. கப்யாஸம்=க— ஜலத்தில், ப்யாஸம்—இருப்பது; கபி-ஜலத்தை உட்கொள்ளும் தண்டில், ஆஸம்-இருப்பது; கபி-ஸூர்யனால், ஆஸம்—மலர்விக்கப்படுகிறது என்றவாறு. அம்மூன்றும் பொருந்தும் அவற்றைச் சேர்த்தபோது ஆழமான ஜலத்தில் தண்டோடு ஸூர்ய கிரணம் பட்டு மலர்ந்த செந்தாமரை போன்றன அவன் திருக்கண்களென்று கிடைக்குமென்றவாறு. கபிசப்தம் ஜலத்தினின்று காக்கிறவனென்ற பொருள்படுமென்றார் ஸஹஸ்ரநாமசங்கரபாஷ்யத்தில் (வ்ருஷாகபி). அப்படியே, ஜலத்தை உட்கொள்ளுகிறானென்றே கபி என்று சொல்லப்படுகிறவன் ஸூர்யனாவான் என்றவாறு.

இப்படி கப்யாஸ புண்டரீகாக்ஷத்ருஷ்டியை உத்கீதத்திலே சொல்லிற்று.

1 8.9. இந்த உத்கீதத்திலேயே ஆகாச த்ருஷ்டியைச் சொல்லுகிறதிங்கு. சிலகன், தாய்ப்யன், ப்ரவாஹணன் என உத்கீதத்திலே தேற்ச்சி பெற்ற மூவரும் சேர்ந்து வாதம்செய்யத் தொடங்கினர். அவர்களில் ப்ரவாஹணன் என்ற அரசன் மற்ற இருவருடைய வாதங்களை முதலிற்

கேட்க விரும்பினான். அப்போது ஸாமத்திற்கு எது ஆதாரமென்று சிலகன் வினவ, தால்ப்யன் ஸ்வரம்... ப்ராணன், அன்னம், ஸ்வர்க்கம் என்றவற்றை மேன் மேல் ஆதாரமாகக் கூறி, ஸ்வர்க்கத்திற்கு ஆதாரமென்ன என்றபோது ஸ்வர்க்கத்திற்கு ஆதாரமில்லை யென்றான். அதற்கும் ஆதாரம் பூலோகம் என்று சிலகன் சொன் னான். இதைக் கேட்ட ப்ரவாஹணன், 'இவ்வளவோடு நின்றால் இவ் ஆதாரங்கள் எல்லாம் அழிவுறுவன வாகையாலே, ஸாமம் அழிவுறும். ஆகையாலே அழிவற்றதாய் ஸர்வபூதங்களின் பிறப்புக்கும் அறி வுக்குமிடமாய் உயர்ந்ததான ஆகாசமே (பரமாத் மாவே) முடிவாக ஆதாரம்' எனக் கூறினான். இவ் ஆகாசமாக உத்கீதத்தைப் பார்ப்பவனுக்கு உயர்ந்த ஜீவனமும் உயர்ந்த உலகங்களுமுண்டென்று அதி தன்வா என்ற சௌனகர் உதர சாண்டில்யருக்குச் சொன் னாரென்றும் கூறினான்.

1, 10, 11, கல்மழையினலடிப்பட்ட குருதேசத்திலே துர்பிக்ஷகாலத்திலே யானையேறிகள் இருந்தவொரு க்ரா மத்திலே உஷஸ்தி என்ற முனிவர் தம்மோடு கூடவே திரிந்துவரும் தம் சிறு பிராய மனைவியோடு ஆஹாரமற்று வருந்தி வந்து தங்கினார். அவர் குல்மாஷம் என்ற தானி யத்தை உண்டுகொண்டிருந்த ஒரு யானையேறியை அண்டி ஆஹாரம் கேட்டார். அவனும் நான் உண்ப தற்கு வைத்து உண்டுவருமிதல்லது வேறில்லையே யென்றான். அவரும் அதிலே கேட்க, அவனும் அதை யும் அத்துடன் அருந்தும் தண்ணீரையும் கொடுத்தான். அவர் தண்ணீரை, 'எச்சில் இது; வேண்டாம்' என்றார். இந்த குல்மாஷமும் எச்சில்தானே என்றானவன். 'இதை யுண்ணாவிடில் எனக்கு இப்போது ப்ராணன் நிற்காது; பிழைத்த பிறகுத் தண்ணீர் அருந்துவது காமகா(சா)ரமா கையாலே சாஸ்த்ரத்தை மீறினதாம்' என அவனுக்கு

மறுமொழி கூறினார் உஷஸ்தி. பெற்ற குல்மாஷத்தில் சிறிது உண்டு சிறிது மனைவிக்கும் கொடுத்தார். அவள் ஏற்கனவே உண்டிருந்தபடியாலே அதை வாங்கி வைத்திருந்தாள். இரவில் நித்திரை செய்து விடியற்காலத்தில் எழுந்து அவ் உஷஸ்தி முனிவர், 'ஏதேனும் சிறிது ஆஹாரமிருந்தால் பார்த்துக்கொண்டு பணத்திற்கு வழி தேடலாம். அருகில் அரசன் ஒருவன் யாகம் செய்யப் போகிறான். அவன் அங்கே செய்யும் எல்லாத் தொழில்களுக்கும் நம்மை முக்கியமாக வரிப்பான்' என்று மனைவியிடம் சொன்னார். அவளும் முதனாள் வைத்திருந்த குல்மாஷத்தைக் கொடுக்க, அவர் அதை உண்டு யாகத்திற்குச் சென்றார்.

அங்கு யாகம் செய்யுமிடத்திலே ப்ரஸ்தாவம், உத்கீதம், ப்ரதிஹாரம் என்ற ஸாமாம்சங்களுக்காக ஏற்பட்டுள்ள ரித்விக்குகளிடம் சென்று அதற்குள்ள தேவதையை யறிந்தே கானம் செய்ய வேண்டுமென்று வற்புறுத்தினார். அவர்கள் அறியாமல் நின்றனர். பிறகு அரசன் இவரை இன்னாரென்று தெரிந்துகொண்டு, இவரை விசேஷமாக ஸத்கரித்து இவரையே அவர்களின் ஸ்தானத்தில் நிறுத்தி நடத்த நினைத்தான். இவர் அவர்களை விடாமல் அவர்களுக்கே தத்துவோபதேசம் செய்து யாகத்தை நடத்தி வைத்தார். இவர் உபதேசித்த முறையாவது—''ப்ரஸ்தாவம் என்ற ஸாமகானத்திலே ஸர்வ பூதங்களுக்கும் பிறவி யழிவுகளுக்குக் காரணமாயுள்ள ப்ராண (பரமாத்ம) தேவதையையும், உத்கீதத்திலே, உயரத்திலிருப்பவனும் புகழப்படுபவனுமான ஆதித்யனையும், ப்ரதிஹாரத்தில் அன்னத்தையும் பாவிக்கவேண்டும்' என்றபடியாம். ப்ராணாபத்தாம் காலத்தில் இவ்வாறும் ஆஹாரம் கொள்ளலாமென்றும் இங்கு உபாஸிக்கப்படும் ப்ராணதேவதை பரமாத்மா என்றும் ப்ரம்மஸூத்ரத்திலே முடிவு செய்யப்பெற்றது.

1. 12. அன்னத்திற்கு அலைந்த உஷஸ்தியின் உபதேசம் முடிந்தவுடன் அன்னத்தைப் பெறச் செய்யக் கூடும் சௌவோத்கீத மென ஓர் உத்கீதத்தைச் சொல்லுகிறது. ச்வா = நாய். பகரென்ற ரிஷிக்கு இத்த உத்கீதத்தை யுணர்த்துவதற்காகப் பலர் நாய்களாக உருவெடுத்து இதைக் கானம் செய்து காண்பித்தனர் என இங்கே விளங்கும். அதனால் இதற்கு சௌவமென்று பெயராம்.

1. 13. ருக்குகளில் ஸாமகானம் செய்யும்போது சிற்சில இடங்களில் சிற்சில புதிய அக்ஷரங்கள் இசையின் பொருத்தத்திற்காகப் புகுத்தப்படும். அவை ஸ்தோபாக்ஷரங்களெனப்படும் "ஹாஉ, ஹாஇ" முதலானவை. இவைகள் பதின்மூன்றைச் சொல்லி இவற்றை ப்ருதிவி முதலிய சிலவாகப் பாவித்தற்குப் பலன் வாக்கும் அன்னமும் என்றது.

## ப்ரபாடகம் 2.

2. 1.6. இப்படித் தனித் தனியே உத்கீதம் முதலிய ஸாமபக்தி (பிரிவு)களில் உபாசனங்கள் சொல்லப்பெற்றன. இனி இரண்டாம் ப்ரபாடகத்திலே மொத்தமாக எல்லாப் பிரிவுகளுடன் எடுத்துச் சில உபாஸனங்கள் போதிக்கப்படுகின்றன. ஸாமமே ஸாதுவானது என வோர் உபாஸனத்தை முன்பு சொல்லிற்று. பிறகு ஸாமத்தின் பக்திகளாகக் கீழே குறிக்கப் பெற்ற ஹிங்காராதிகள் என்ற ஐந்து பக்திகளிற் பல உபாஸனங்கள்-உலகுகள், மழை, நீர், வஸந்தாதி ருது, ஆடு முதலிய பசு என்றவற்றைக் கொண்டு சொல்லப் பெற்றன. கீழ் உலகம் மேல் உலகம் எனப் பல வுலகங்கள் ஒன்றுக்கொன்று உபகாரமாயிருக்கும்படி அமைக்கப்பட்டிருப்பதாலே மழை பெய்து எங்கும் நீர் நிறம்பி வஸந்தம் முதலிய ருதுக்கள் அவ்வவ காலத்திற் பலித்துப் பசு முதலிய

ப்ராணிகள் ஸுகித்து இருக்க, இங்ஙனம் எல்லா ஸௌகரியங்களும் பெற்ற முமுக்ஷுவானவன் உபாஸித்துச் சிறந்த பலன்களைப் பெறுகிறானென்பது இப்பாகத்தின் உட்கருத்தாம்.

2. 7. முமுக்ஷுக்களுக்கு முக்கியமாக வேண்டும் கருவிகள் ஐந்து என்று உபநிஷத்தின் கருத்தாக நாம் கீழே குறிப்பிட்டுக் காட்டின—ப்ராணன், வாக்கு, கண், காது, மனம் என்ற ஐந்தாக ஸாமப்பிரிவுகள் ஐந்தை உபாஸிப்பவனுக்கு மிகச் சிறந்த வாழ்க்கை யிருக்குமென்றது.

2. 8. இனி ஸாமத்தின் ஏழு பிரிவுகளைப் பற்றிய உபாஸனங்கள், முதலில் அப்பிரிவுகளை அவற்றின் பெயர்களிலுள்ள முதலெழுத்துக்களாக உபாஸிப்பவனுக்கு வாக்கின் பலன் எல்லாம் ஸித்திக்குமென்றது.

2. 9. சூர்யோதயத்திற்கு முன்னால் கால்நடைகள் ஹிம் என்று கத்திக்கொண்டு புறப்படும் காலம், மனிதர்கள் பேசிக்கொண்டு நடமாடும் உதயகாலம் அதற்கு மேலாய் பறவைகள் எங்கும் பறக்கும் ஸங்கவகாலம், தேவதைகள் ஆதரித்த உச்சிக் காலம், அதற்குமேல் அபராண்ணத்திற்குட்பட்டதாய் கர்ப்பங்கள் வயிற்றில் உள்ளடக்கமாயிருக்கும் காலம், அஸ்தமனத்திற்கு முன்னாய் காட்டுக் கால்நடைகள் மனிதரைக் கண்டு மறைந்தோடும் காலம், பித்ருக்களுக்கு இஷ்டமான அஸ்தமன காலம் என்ற ஏழு பிரிவுகளைக் கொண்ட சூரியனாக ஏழு பிரிவுகள் கொண்ட ஸாமத்தை உபாஸிப்பது உபதேசிக்கப்பட்டது.

2. 10. **அதிம்ருத்யூபாஸனம் விதிக்கப்படுகிறது.** கீழ்க்கூறிய ஸாமபக்திகளின் பெயர்களிலுள்ள எழுத்துக்

களை எண்ணினால் 22 ஆகும். சூரியனை 21 ஆவதாக எண்ணுவது வேதத்திலுள்ளது. மாதங்கள் 12, ருதுக்கள் 5 (ஹேமந்தம் சிசிரம் இரண்டையும் ஒன்றாக்குவதால்), உலகங்கள் 3, இவ் இருபதுக்குமேல் சூரியன் என்று எண்ணும்போது 21 ஆவான் அவன். ஸாமபக்திப் பெயர்களின் இருபத்தியொன்றோடொத்துப் பார்த்து சூரியோபாஸனம் செய்வதோடு அவ் அக்ஷரங்கள் 22 ஆகையாலே, அஹோராத்ரங்களைச் செய்து உலகுக்கு மரணகாலத்தைக் குறிப்பதால் ம்ருத்யு எனப்படும் சூரியனுக்கு மேலாகவும் ஸாமத்தை யுபாஸித்தால் ஆதித்ய ஸாயுஜ்யத்தோடு நிற்காமல், ம்ருத்யுஜயம் பெற்று மோக்ஷத்திற்குரிய நிலை பெருவான் என்றது.

2. 11–20. பிறகு தனித்தனியே காயத்ரம் ரதந்த்ரம் வாமதேவ்யம் என்றாற் போன்ற சில ஸாமங்களை எடுத்து ஆயுள், ஆரோக்யம், ப்ரஜை, பசு யசஸ்ஸு இவைகளுக்காக ஏதோனுமொரு ஸாமத்தில் ஐந்து உட்பிரிவுகளில் சிற்சில த்ருஷ்டி யுபாஸனைகளை விதித்தது.

2. 21-22. இங்ஙனம் ஸாமத்தின் உட் பிரிவுகளிலே சொன்ன உபாஸனங்களுக்கெல்லாம் மேம்பட்டதாய் மூவுலகும், அவற்றின் தேவதைகளும், அவர்களிடம் வெளியான வேதங்களும், மற்றும் எல்லாம் இது என்றதொரு த்ருஷ்டியைச் செய்யும் வண்ணமுரைத்து, இதை யுபாஸிப்பவனை உலகெல்லாம் ஆராதிக்கும் என்றது. பிறகு ஸாமஸ்வரங்களில் எவை ஏற்கக் கூடியவை, வர்ணங்களை எங்ஙனம் உச்சரிப்பது, அவற்றின் தேவதைகள் யாவரென்பதை விளக்கிற்று.

2. 23, 24. இனி ப்ரணவத்தின் பெருமையைப் பேசப் புகுந்து எல்லா ஆச்ரமங்களையும், எந்த ஆச்ரமத்திலும்

பரப்ரம்ம த்யானம் செய்தார்க்கு மோக்ஷமுண்டென்பதை யும் சொல்லி, மூவுலகையும் படைத்து அவற்றினின்று பிறந்த வேதங்களிலிருந்து வந்த வ்யாஹ்ருதிகள் மூன்றி னின்று ப்ரணவம் வந்ததாகையாலே இலைகளின் நரம்பு கள் போல எல்லா வாக்குகளிலும் ப்ரணவம் பரவியிருக் கிறதென்றது. பிறகு யாகம் செய்பவனுக்கு மூவுலகும் கிடைப்பது ஸோமயாகத்திலுள்ள மூன்று ஸவனங்களுக் கும் அதிபதிகளான வஸு ருத்ர ஆதித்யர்களைப் பற்றின ஸாமங்களைச் சொல்லி அவர்களைப் புரஸ்கரிப்பதாலே யென்றது இங்ஙனம் இரண்டு ப்ரபாடங்கள்—அத்யா யங்கள் போயின.

3

3. 1-11. மூன்றும் அத்யாயம் முதலாக, மோக்ஷத் திற்காக நேராகவிருக்கும் வித்யைகள் பல ஓதப்படுகின் றன. முதன் முதல் மதுவித்யை சூர்யமண்டலத்தைத் தேவதைகள் உட்கொள்ளும் தேனாகவும், மரத்தில் தேனடை யிருக்குமாபோலே மேலுலகில் அந்தரிக்ஷ மெனப்படும் தேனடை யிருப்பதாகவும், வண்டுகள் புஷ்பங்களிலிருந்து தேனை யெடுத்துச் சேர்க்குமா போலே அந்தந்த வேத மந்த்ரங்கள் தங்களைச் சொல்லிச் செய்யப்படும் யாகம் முதலியவற்றிலிருந்து யசஸ்ஸு, தேஜஸ்ஸு, இந்திரியம், வீரியம் போன்ற பலன்களை யெடுத்து ஸூர்ய மண்டலத்தில் ஒவ்வொரு பக்ஷத்திலும் ஒருவாறு சேர்த்து வைத்திருப்பதாகவும், வஸு-ருத்ர- ஆதித்ய-மருத்-ஸாத்ய கணங்கள் என்ற ஐந்து கணங் களும் நான்கு திக்குகளிலும் மேற்புறத்திலும் நின்று அதனைக் கண்டு உவந்து வருகிறார்களென்றவாறும் தெளிந்து இத்தகைய தேனாக ஸூர்யனை த்யானம்

செய்வதோடு அவனுக்கு அந்தர்யாமியான பரப்ரம்மத்தையும் உபாஸனம் செய்பவருக்கு முதலில் வஸுருத்ராதி போகமும் பிறகு மோக்ஷமும் அடைவாக ஸித்திக்குமென இதிலே ஓதிற்று.

3. 12, 13. காயத்ரீ ப்ரஹ்ம வித்யை—நான்கும் ஆறும் கொண்ட காயத்ரியைப் போல யுள்ளதாக ப்ரம்மத்தைப் பாவிக்க வேண்டும். காயத்ரீ சந்தஸ்ஸுக்கு மூன்று பாதங்களும் 24 அக்ஷரங்களும் பெரும்பான்மை இருக்கும். 24 அக்ஷரங்களையும் அவ்வாறு அக்ஷரங்களாகப் பிரித்து நான்கு பாதங்களாகவும் சில காயத்ரிகளுக்கு அமைப்பதுண்டு. அதனுல் காயத்ரியை நான்கும் ஆறும் கொண்டதென்கிறது. ப்ரம்மத்திற்கு நான்கு பாதங்களாவன—பூதம், ப்ருதிவி, சரீரம், ஹ்ருதயம் என்பவை யென்றதிங்கே. வாக்கானது ஸர்வ பூதங்களையும் குறிப்பதும் காப்பதுமாயிருப்பதாலே ஸர்வ பூதமயமான ப்ரம்மத்திற்கும் வாக்கினுல் குறிக்கப்படுவதும் காக்கப்படுவதுமான இரு குணங்கள் உண்டாம். ப்ருதிவியைப் பாதமாகவுடையவிதற்கு ஸர்வ பூதங்களும் ஆதாரமாயிருக்கை, அவைகளால் மீள முடியாமை யென்பன உண்டு. சரீரமாயும் ஹ்ருதயமாயுமுள்ள இந்த ப்ரம்மத்திற்கு ப்ராணன்களுக்கு ஆதாரமாயிருத்தலும் அவைகளால் மீளமுடியாமையுமுண்டு. ஆக ஆறு குணங்களும் நான்கு பாதங்களுமிங்ஙனம் ப்ரம்மத்திற்குச் சொல்லப் பெற்றன. புருஷ ஸூக்தத்திற் சொன்னபடி ப்ரக்ருதியில் கால்பாகமும், வைகுண்டத்தில் முக்கால் பாகமுமாகச் சேதநா சேதநங்களை உடையதாகி உபய விபூதிகளிலும் பரவி மிகப் பெரிதாயுள்ள இதற்கு இத்தகைய பாதங்களை வைத்து உபாஸநம் செய்தால் அழிவறக் குறைவற விருக்கும் (மோக்ஷ) பலன் கிடைக்குமென்கிறது. இதற்கு அங்கமாக, நம் ஹ்ருதயத்தில் நான்கு பக்கங்களிலும் மேலுமாக ஐந்து குழிகள் இருப்ப

தாகவும் அங்கு ப்ராணன்கள் ஸஞ்சரிப்பதாகவும் அவ் ஐந்து குழிகளிலும் ஐந்து த்வாரபாலகர்கள் ஆதித்யன் சந்திரன், அக்னி, பர்ஜந்யன் ஆகாசம் எனப்பட்ட தேவதைகள் இருப்பதாகவும் பாவிக்கச் சொல்லிற்று.

**கௌக்ஷயஜ்யோதிர்வித்யை.** எல்லா வுலகுக்கும் மேலான உத்தம லோகத்திலே இருக்கும் பரப்ரம்மமே உடலில் உண்பதை ஜரிப்பிக்கவிருக்கும் வைச்வானரனென்னும் அக்னிக்கு அந்தர்யாமியாமெனக் கூறி அதனைப் பார்த்ததாகவும் கேட்டதாகவுமுபாஸிப்பவன், எல்லோரும் பார்க்கும்படியும் கேட்கும்படியும் அழகும் கீர்த்தியும் பொருந்தியிருப்பான் என்றது. அதனைப் பார்ப்பதும் கேட்பதும் எங்ஙனே யென்னில்—உடலைத் தொட்டால் உஷ்ணம் தெரிகிறதே, அதே அதைப் பார்த்தபடியாம்; காதுகளைக் கைகளால் மூடிக்கொண்ட போது உண்ட வஸ்துக்களைப் பாகம் செய்கின்ற அக்னியினுடையது போன்றதொரு சத்தம் உள்ளிருந்து கேட்கப்படுகின்றதே, அதே அந்த ப்ரம்மத்தைக் கேட்டபடியாமென்பது.

3. 14. **சாண்டில்யவித்யை.** உலகெல்லாம் பிறப்பதும் பிழைப்பதும் அழிவதும் ப்ரம்மத்தைச் சார்ந்ததாகையால் அந்த ப்ரம்மமே இவ்வுலகெல்லாமாம் என வறிந்து அதனாலே காம க்ரோதங்கள் நீங்கி சாந்தியுடன் இத்தகைய ப்ரம்மத்தை உபாஸிக்க வேண்டும். ஏனெனில் —உபாஸித்துப் பலன் பெற வேண்டியது புருஷனுக் குரியது. எங்ஙனம் இங்கு உபாஸிக்கிறனோ, அங்ஙனம் பிறகு இவன் ஆவான். (இதுவே தத் க்ரது ந்யாம்.) ஆகவே இதை மனோமயன் (சுத்தமான மனத்தினாலேயே அறியப்படுகிறவன்) ப்ராணசரீரன் என்றாற் போலுள்ள மஹா குணங்களையும் கொண்டு, 'யான் அதனைப் பெறுவேன்' என்ற உறுதியுடன் உபாஸிப்பவனுக்குக்

யைகயிலிருப்பது அவ்வித ப்ரம்மத்தைப் பெறுவதாகிய மோக்ஷம் என்றனர் சாண்டில்யர்.

3. **15, கோச விஞ்ஞானம்.** தன் புத்திரன் தீர்க்காயுஸ்ஸாயிருக்க விரும்புவோன் செய்வதோர் உபாஸநம் மேலே கூறப்படுகிறது. இது கோச விஞ்ஞான மெனப் படும். இதில் வாயுவைத் திக்குகளின் மகனாக நினைக்க வேண்டும். சில மந்த்ரங்களும் இதற்குக் கூறப்பெற்றன.

3. 16, 17, **புருஷவித்யை.** நூற்றிப்பதினாறு வருஷ காலம் நீடித்துவாழ விரும்புவோன் தன்னை ஒரு யஜ்ஞமாகப் பாவித்துத் தன் ஆயுட்காலத்தை மூன்றாகப் பிரித்து அவ்வப்போது தன் ப்ராணன்களை அடைவே வஸு ருத்ர ஆதித்யர்களாக நினைத்தும், தன் பசி தாகங்களை தீக்ஷையாகவும், உட்கொள்வதை உபஸத்தாகவும், சிரிப்பு முதலான செயல்களை ஸ்தோத்ர சஸ்த்ரங்களாகவும், சாஸ்த்ரிய செயல்களை தக்ஷிணையாகவும், மரணத்தை அவப்ருதமாகவும் பாவித்தும் முறைப்படி உபாஸனம் நடத்தினால் நோவைத் தடுத்து நீடித்து வாழ்வானென்றோதி, இந்த வித்யையனுஷ்டித்த ஐதரேயமஹிதாஸர் வந்த ரோகங்களை வெளியேறச் செய்து வாழ்ந்தாரென்றும் கூறி, அந்திய காலத்தில் இவன் ஜபிக்க வேண்டிய மந்த்ரங்கள் உண்டென்றும் அதனால் இவன் பிறகு மோக்ஷம் பெறுகிறானென்று மோதிற்று. அந்த மந்த்ரங்கள் ப்ரஹ்மம் அழிவற்றதெனவும், 'எல்லாவற்றிற்கும் காரணம் அது. ஒரே பகலொளியான அதனை நித்யஸூரிகள் அனுபவிக்கிறார்கள். அதனைப் பெற ஸூர்யமண்டலம் வாயிலாகப் போவோம்' என்றும் கூறும். தைத்திரீயம் முடிவிலுள்ளது இப் புருஷ வித்யையன்று ; வேறு.

3. 18; 19 பிறகு மனது ப்ரம்மம், ஆதித்யன் ப்ரம்மமெனத்ருஷ்டி யுபாஸனங்கள் முறையே ஓதப்பெற்றன.

## (4)

4. 1-3. ரைக்வவித்யை. ஜாநச்ருதி யென்பவன் க்ராமம், நகரம், வழி, வனங்கள் முதலான எல்லா விடங்களிலும் எல்லோருக்கும் வீடுகளும் சத்திரங்களும் கட்டி, அன்னபானங்களும் அளிக்க ஏற்பாடுகள் செய்து எல்லா தானங்களையும் ச்ரத்தையோடு நடத்திக்கொண்டு ஜனங்கள் எல்லோரும் கொண்டாடும்படி மஹா தர்மிஷ்டனாயிருந்தான். ஒரு நாள் இரவில் அவன் படுத்திருக்குமிடத்திற்கு மேலே வானத்தில் அன்னங்கள் பல பறந்து கொண்டிருக்க அவற்றின் முன்னே போகும் ஓர் அன்னத்தைப் பின்னே செல்லும் அன்னமொன்று பின் கண்டவாறு கூறிற்று—'ஏனப்பா! உனக்குக் கண் இல்லையா? இவ் இரவையும் பகலாக்கும்படியிருக்கும் ஜாநச்ருதியின் தேசின்மேல் துணிந்து செல்லுகிறாயே. உன்னை அது எரித்துவிடப் போகிறது.'

முன்னே போகும் அன்னம், 'என்ன வண்டியுடனே எப்போதுமிருக்கும் ரைக்வரைப் போல் இவனைப் புகழ்கிறாயே' என மறுமொழி கூறினது.

'யார் அவர் வண்டியோடிருக்கும் ரைக்வர்?' என்று வினவினது முன் அன்னம்.

'சூதாட்டங்களிலே பலவகை யாட்டங்களுண்டே. அவற்றில் க்ருதம் என்கிறதிலே மற்றவை யெல்லாம் அடங்கிறாற் போலே அந்த ரைக்வர் அறிந்ததை ஒருவன் அறிந்தானாகில் அவனிடம் உலகத்திலுள்ளார் செய்யும் நற்செயல்களெல்லாம் அடங்கிவிடும். (அதை யறியாத இந்த ஜாநச்ருதிக்கு ரைக்வரைப் போன்ற பெருமை கூடுவதுண்டோ) அப்படியான (அறிவும் செயலு முடிய)

மஹான் அந்த ரைக்வரெனத் தெளிக.' என்றது பின் செல்லும் அன்னம்.

இங்ஙனம் அன்னங்களின் பேச்சைக் கீழே அருகிலே படுத்திருந்து கேட்ட ஜாநச்ருதியானவன் விடியற்காலம் படுக்கையிலிருந்து எழுந்தவுடனே தன் அந்தப்புரக்காவற் காரனை யழைத்து அன்னங்கள் சொன்னதைச் சொல்லி ரைக்வரைத் தேடி வா என்றனுப்பினான். அவனும் பல இடங்கள் திரிந்தலைந்து 'எங்கும் காணவில்லேன்' என்று வந்து விண்ணப்பித்தான். 'பிராம்மணர்கள் இருக்குமிடம் போய்ப் பார்த்து வா' என்று அவன் மீண்டும் ஆஜ்ஞா பிக்க, அதன்மேல் வெளிச் சென்று ஓரிடத்தில் வண்டியின் கீழே சிறங்கு சொறிந்துகொண்டிருக்கும் ஒருவரைக் கண்டு அவரருகிற் போய் உட்கார்ந்து, 'தாங்கள் ரைக் வரோ' என்று அவ் அரச புருஷன் வினவ, 'ஆமப்பா, நான் தான்' என்று அவர் மறுமொழி கூற, ஜாநச்ருதி யிடம் வந்து, 'அறிந்து வந்தேன்' என்றான். உடனே ஜாநச்ருதியும் ஆறுநூறு பசுக்களும் காறையும் குதிரை வண்டியும் உபஹாரமாகக் கொண்டு ஸமர்பித்துத் தனக்கு தேவதா ஜ்ஞானம் பிறப்பிக்கப் பிரார்த்தித்தான். அந்த ரைக்வ முனிவர், ஓ சூத்ரனே! உனக்கே இவை யெல்லா மிருக்கட்டும் என்று மறுத்து விட்டார். ஜாநச்ருதி, 'ஏன் இங்ஙனம் கூறினார்' என வாராய்ந்து தெளிந்து, மறுபடி ஆயிரம் பசுக்கள் முதலானவைகளோடு தன் பெண்ணை யும் அவருக்கு மனைவியாகக் கொடுக்க அழைத்துக் கொண்டு சென்று ஸமர்பித்து அவர் இருக்கும் கிராமத்தை யும், அவருக்கு அளித்து மீண்டும் வேண்டினான். (பணி விடைக்குப் பத்னியே இல்லாதிருக்கப் பணமும் பசுக் களும் கொள்வது எதற்கென்று மனத்திற்கொண்டு முதலில் மறுத்த) அம்முனிவர் பிறகு, அவன் குணத்தைக் கண்டு களிக்க, 'கொண்டுவா' என்று ஸ்வீகரித்து அப்பொழுதே

உபதேசித்தருளினர். அந்த ரைக்வ வித்யையே ஸம்வர்கவித்யையாம். அதனை உபதேசிக்கின்றாராய்—

அக்னி ஸூர்ய சந்த்ர லயஸ்தானமாயிருப்பது வாயுவென்றும், உடலில் வாக்கு, கண், காது, மனது என்றவைகளுக்கு லயஸ்தானமா யிருப்பது ப்ராணன் என்றும், ஆகவே இவை இரண்டும் ஸம்வர்க்கங்கள் என்று முரைத்தார். இங்குரைக்கப்பட்ட தேவதை யாதென்பதை உணர்த்த இதன்மேல் ஓர் உபாக்யானமும் ஓதப்பட்டது காபேயன், அபிப்ரதாரி என்ற இருவர் போஜனத்திற்கு வீற்றிருக்கும் தருணத்திலே ஒரு பிரம்மச்சாரி பிக்ஷை கேட்க, யாரும் பிக்ஷை கொடாமலிருக்க, அவன் அங்கே, 'உலகத்தைக் காக்கும் தேவனொருவன் நான்கு மஹாத்மாக்களை விழுங்கி விளங்குகிறான். பல உருவாக வஸித்து வரும் அத் தேவதையை, காபேயரே! மனிதர்கள் அறிகிறார்களல்லர். இவ் அன்னம் எவனுக்காகவோ, அவனுக்கு இதை அளிக்கவில்லையே' என்று சொன்னான். இதற்குக் காபேயன் எழுந்து ப்ரம்மசாரியின் அருகில் வந்து நின்று, 'தேவதைகளுக்கு ஆத்மாவும், ப்ரஜைகளை ஸ்ருஷ்டிப்பவனும், அழகிய பற்களுள்ளவனும் அதிகமாகப் புசிப்பவனுமான இந்த ஸர்வஜ்ஞனுடைய மஹிமையை மிகப் பெரிதாகச் சொல்வர். இவன் ஒருவராலும் தான் புசிக்கப்படாமலிருந்து போசனமாகாததையும் புசிக்கிறவன். இப்படி நாங்கள் உபாஸிக்கிறோம், (நீ சொன்னவாறன்று உபாஸிப்பது) என்றவாறு மறுமொழி கூறி பிக்ஷை அளிக்க ஆஜ்ஞாபித்தான் என்றதாம் அவ்வுபாக்யானம். இப்படிச் சொன்ன ஸம்வர்க்கங்களைத் தெரிந்துகொண்டு ஐந்தும் ஐந்துமாகக் கீழே கூறப்பெற்ற இரண்டு ஸம்வர்க்க வஸ்துக்களான பத்தையும் ஒரு க்ருதமென்றும், அன்னமென்றும், விராட் என்றும் உபாஸிப்பவன் ஸர்வஜ்ஞனாய் அன்னத்தைப் புசிப்பான் (அதாவது ஸர்வ போக்யமான அன்னமாகப் பல விடங்களிலே யோதப்

பெற்ற பரப்ரமத்தை யனுபவிப்பான்.); இது இதன் பலனு மென்றது முடிவில்.

4-9. ஷோடச கல ப்ரஹ்ம வித்யை, ஸத்யகாம னென்பவன் ஜபாலை என்னும் தன் அன்னையிடம், நான் வெளியிலே ப்ரம்மசர்யத்திற்காகப் போகப் போகிறேன்; கோத்ரம் தெரியவேண்டும்' என்றான். 'நான் பெரியோர் களுக்குப் பரிசர்யை செய்து வெகுவாக உழைத்த வண்ணமே யிருந்து யௌவனத்திலே உன்னைப் பெற்றேன். இந்த நிலையிலே கோத்ர மறியாமலே இருந்து விட்டேனாகையாலே நான் என்ன செய்வது? நான் ஜபாலை; நீ ஸத்ய காமன் இவ்வளவுதான் எனக்குத் தெரிந்தது. நீ ஆசார்யனிடத்திலும் இதையே சொல்' என்றனள் அன்னை. ஸத்யகாமனும் கௌதம-ஹாரித்രும தரிடம் சென்று இதனை விண்ணப்பிக்க 'இப்படி யுண்மை யுரைத்துக்கொண்டு வந்ததாலே நீ ப்ராம்மணனே' என்று அவர் புகழ்ந்து அவனை அனுக்ரஹித்துத் தன்னிடமிருந்த பசுத்திரளிலே வலிவற்று இளைத்திருந்த நானூறு பசுக்களை பிரித்துச் சேர்த்து இவைகளை வளர்த்து வா என்று ஆஜ்ஞையிட்டார். ஸத்யகாமனும் ஸந்தோஷத்துடன், இவை ஆயிரமாக ஆவதற்குமுன் திரும்புவதில்லை யென்று விண்ணப்பித்து அவற்றை ஓட்டிச் சென்றான். இப்படி அவன் வெகு வர்ஷங்கள் வெளியிலே மேய்த்திருக்க அவைகளும் ஆயிரம் ஆக, அவற்றிலே ஒரு காளை யானது அவனைப் பார்த்து, 'ஸத்யகாமனே! நாங்கள் ஆயிரமாய்விட்டோம். ஆசார்யரது இல்லத்திலே எங்களைச் சேர்த்துவிடு. உனக்கிங்கே ப்ரம்மத்தின் பாத மொன்றைச் சொல்லுகிறேன்' என்றது. அவனும் இசைய, ப்ரகாசவா னென்ற ஒரு பாதத்தை யுபதேசித்து அதற்கு நான்கு அவயவங்களையும் கூறி, இனி அக்னி உனக்கு மற்றொரு பாதம் சொல்லுமென்றது. மறுநாள் யோட்டிக் கொண்டே போய் வழிநடுவில் மாலையிலே மடக்கிவிட்டு

ஸமிதாதானம் செய்திருந்த தருணத்திலே அக்னி அனந்த வாந் என்னுமொரு பாதத்தையும் அதன் நான்கு பாகங் களையு முபதேசித்து, 'ஹம்ஸத்தினிடமிருந்து மூன்றும் பாதமறிவாயாக' என்றது. முன்போலவே மறுநாள் மாலை யில் அன்னத்திடம் ஜ்யோதிஷ்மாந் என்ற பாதத்தை அதன் நாலு அவயவங்களோடு அறிந்தான். அது சொன்னபடியே அதற்கு மறுநாள் மாலையில் மத்கு என் னும் நீர்ப் பறவையினிடமிருந்து ஆயதநவாந் என்ற பாதத்தை அவயவங்களோடு கற்றறிந்து ஆசார்யரகம் புகுந்தான். பார்த்தமாததிரத்திலே ஆசார்யரும், ஸத்ய காமா! நீ ப்ரம்மத்தை யறிந்தவனாகவே காண்கிறாய். யார் உபதேசம் செய்தனரோ என வினவினார். உபதேசித் தவர் மனிதரல்ல ரென்று உள்ளபடி விண்ணபித்து, ஆசார்ய மூலமாக அறியப்பெற்றால் தான் வித்யையால் பெறும் பலனுண்டு, ஆகவே ஸ்வாமியே உபதேசிக்க வேணும்' என்றும் வேண்டிக்கொண்டான். இந்த வேண்டு தற்கிணங்கி ஆசார்யரும் அதனை அங்ஙனமே முழுமை யும் ஒரு முகமாக உபதேசித்தார். அவைகள் உபதேசித்த தும் அவர் உபதேசித்தும் எல்லாமொன்றே. சிறிதும் குறை பாடெங்குமில்லை.

4. 10-15. மேற் சொன்ன ஸத்யகாமனிடத்தில் ப்ரம்ம சர்யம் பெற்றிருந்தவனாவான் உபகோஸலன். பன்னி ரண்டு வருஷ காலம் இவன் அவருடைய வைதிகாக்நி களைப் பரிசர்யை செய்து வந்தான். அணுகிய சீடர்களை யெல்லோரையும் உபதேசத்தை முடித்து அனுப்பிவந்தவர் இவனுக்கு மாத்திரம் பூர்த்தி செய்யாமலே இருந்தார். ஆசார்யரின் மனைவியானவள், 'பாவம்! ப்ரம்மசாரி மிகவும் கிலேசப்பட்டு அக்னி சுச்ரூஷை செய்தானே. உபதேசியா விடில் தங்களை அக்னிகள் என்ன நினைக்கும்படியாமோ. உபதேசிக்கலாமே' என்று புருஷகாரமாகவும் நின்றாள். ஆகிலும் அவர் உபதேசியாமலே வெளியூர் சென்று விட்

டார். ப்ரம்மசாரி மனோவ்யாதியால் நொந்து கிடந்தான். ஆசார்யரின் மனைவி அவனை ஆஹாரம் உட்கொள்ளும் படி வேண்டியும் அவன் மறுத்துவிட்டான். 'எத்தனையோ விஷயங்கள் பாதித்துவரக் கூடியவைகள் இருப்பதால் வெகு விதமான வ்யாதிகளாலே வயிறு நிரம்பியிருக்கிறது உண்ணகில்லேன்' என்றான். அக்னிகளுக்கு அவனிடம் தயை முதிர்ந்து விட்டது. அவனுக்கு, ப்ராணன் பிரமம்; கம் ப்ரம்மம், க்கம் (வம்) ப்ரம்மம்' என உபதேசம் செய்தன. கம என்று நமது ஸுகத்தையுய், வம் என்று இந்த்ரியம் அல்லது ஆகாசம் என்றாற் போன்றதையும் கொள்வதா, அல்லது கம் க்கம் என்று சேர்த்து (ப்ரஹ்மம்) பேரானந்தம் மென்கிறதா என்று ஐயப்பட்டு, அதற்கு அளவில்லா வானந்த ரூபமென்றே பொருளென்று உணர்ந்தான். பிறகு ஐஹிகமாகவே ஆமுஷ்மிகமாகவோ ஒரு குறையுமில்லாமலிருக்க அவ்வக்னிகள் அக்னி வித்யை யென்பதையு முபதேசித்தன. 'இதற்கு மேலுள்ள வற்றை ஆசார்யர் உபதேசிப்பர்' எனவும் கூறின.

வெளியூரிலிருந்து ஆசார்யர் வந்து அவனது முகத்தைக் கண்டதும், 'என்ன, உன் முகம் ப்ரம்மஜ் ஞானியினுடைய முகம் போல் ஒரு வெளிச்சிறப்பு கொண்டிருக்கிறதே. யார் உபதேசித்தனர்?' என்று கேட் டார். உண்மையில் அவன் பூர்ண ப்ரம்மஜ்ஞானம் பெரு மலிருந்ததால், சிறிது பெற்று மிருந்ததால், ப்ரம்மஜ்ஞா னம் பெறவில்லை யென்றோ, பெற்றேன் என்றோ சொல்ல முடியாத வண்ணமாய்த் திகைத்து 'இவ்வக்னிகள் இப் போது காணும் வண்ண மிராமே வேற்றுருவங் கொண்டு உபதேசித்தனர்' என்று விண்ணப்பித்து, நியமனப்படி, அறிந்ததையும் இன்னதென்றறிவித்தான். 'ஏதோ அற்ப பலன்களை உனக்கு உபதேசம் செய்து நின்றன அவை. நான் உனக்கு நற்கதி காண வைக்கிறேன். நான் சொல்

வதை யறிந்தாயாகில் தாமரையிலையில் தண்ணீர் தட்டா தது போல் பாபம் ஆத்மாவில் ஒட்டா தொழியும், ஆத்மா வென்பது கண்ணுள்ளே'காணக் கூடியது. இதற்கு அழிவு கிடையாது; அச்சத்திற்கிடமேயில்லை; இதுதான் ப்ரம்மம், கண்ணிலே நெய்யை அல்லது நீரை வார்த்தால் அதில் அது தட்டாமே போய்விடுகிறதன்றோ? ப்ரம்மம் உள்ள இடத்திற்கே இம்மஹிமை யென்றால் ப்ரம்மத்தின் மஹிமை யைச் சொல்ல வியலுமோ' என்றெல்லாம் சொல்லி அனே கம் கல்யாண குணங்களையு முபதேசித்து, 'இவ்வாறு உபாஸனம் செய்தவன் முமுக்ஷுவாகையாலே மரணம் நேர்ந்த பிறகு இவனுக்குச் செய்யவேண்டும் சடங்குகள் நடந்தேறவிட்டாலும் தான் உடனே (அர்ச்சிராதி மார்க்க மென்கிற தேவயாந மார்க்கத்தாலே) அக்னி, பகல் சுக்ல பக்ஷம், உத்தராயணம், ஸம்வத்ஸரம், சூரி யன், சந்திரன், மின்னல்—அதைச் சார்ந்த அமாநவன் எனவுள்ள வழி நடத்தும் மஹான்களாலே அங்கங்கு நடத் தப்பட்டு அவ் அமாநவனாலே ப்ரம்மத்தினிடம் சேர்க்கப் படுகிறான். பின்பு ஒரு காலும் இவ்வுலக க்லேசத்திற்குட் படுவதில்லை' என்று உபதேசித்தார் ஆசார்யர். இது உப கோஸலவித்யை நடுவில் அந்நிகள் உபதேசித்தது இதைச் சார்ந்த அக்னிவித்யையாம்.

4. 16, 17. யஜ்ஞத்தைப் புகழ்ந்து, அதில் நான்கு ருத்விக்குகளும் மனஸ்ஸு வாக்கு என்னும் இரு சக்கிரங் களைக் கொண்டு அந்த வண்டியை யோட்டிவைக்கிறார்க ளென்றும், ஒரு சக்கிரம் கெட்டாலும் வண்டி விழுந்துவிடு மாகையாலே எல்லாம் சரியானபடி இருக்கவேண்டும்— ஏதேனும் செய்யும் அங்கங்களிலே ஏற்றத்தாழ்வு ஏற்படு மாகில் ப்ராயச்சித்த ஹோமம் செய்ய வேண்டு மென்றும், அதற்கு மூன்று வ்யாஹ்ருதிகள் முக்கியமென்றும், அவை மூன்று வேதங்களினின்று தோன்றினவை என்றும்,

இதை யறிந்த ப்ரஹ்மாவைக் கொண்டுதான் ருத்விக்கு ளையும் யஜமாநனையும் யாகத்தையும் காக்கவேண்டும் என்றும் சொல்லிற்று.

## (5)

5. 1—2 இனி ப்ராணவித்யை-ஜ்யேஸ்டமும் ச்ரேஷ்டமுமாம் ப்ராணன் என்றுபாஸிக்க வேண்டு மென்றது.

கர்ப்பம் தரிக்கப்பட்டது முதலே அதன் வளர்ச்சிக்கு ப்ராணன் காரணமாகிறது. கருவிகளான இந்திரியங் களோ, கண், காது முதலான உருவங்கள் உண்டான பிறகே இடம் பெறுகின்றன. ஆகவே ப்ராணன் மூத்த தாய் ஜேஷ்ட மெனப்படுகிறது. ச்ரேஷ்டமுமானது அது; ஏனெனில்—இதை உபாக்யானத்தைக்கொண்டு விளக்கு வோம்—ப்ராணனும் இந்திரியங்களும் யார் உயர்ந்தவ ரென்று கலஹம் செய்து கொண்டு ஸ்ருஷ்டித்த ப்ரஜாபதி யினிடம் போய் தங்கள் வ்யவஹாரத்தைத் தீர்க்க வேண்டிக் கொண்டன. அப்போது அவர் சொன்னதா வது—'உங்களுக்குள் யார் சரீரத்தைவிட்டு வெளிப்பட் டால் சரீரம் நிலைகுலைந்தழியுமோ, அவரே ச்ரேஷ்ட ரென்றதாம். வாக்கு ஒரு வருஷகாலம் வெளியில் இருந்து பார்த்தது. ஊமை போலவே இருந்த சரீரம் ஜீவித்து வாரா நின்றது. இப்படி குருடனும், செவிடனும் தெளிந்த மன மற்றவனும் ஜீவித்திருக்குமா போலே பிழைத் திருப்பதை கண் முதலான மற்ற இந்திரியங்களும் கிளப்பிக் கண்டன. ப்ராணன் வெளிக் கிளம்பப் பார்த்தது: கட்டியிருக்கும் கொழுத்த குதிரை கட்டுத்தறியில் முளைகளை யெல்லாம் பிடிங்கிக் கொண்டு புறப்படுமா

போலே அது புறப்பட, வாக்கு முதலான புலன்கள் சரீரம் போலே வதைக்கப் பட்டு, 'வேண்டா வேண்டா' என்று தடுத்து, 'எங்களுக்குள்ள பெருமைகள் யாவும் உன்னுடையனவே' என ப்ராணனைத் துதித்தன. வாக்கு விசேஷமாகப் பணம் பெறுவிப்பதும், கண் எவ்வுலகிலும் ப்ரதானமாய் மேடு பள்ளம் தெரிவித்து நிலைக்கச் செய்வதும், காது ஐஹிகமும் ஆமுஷ்மிகமுமான எல்லாப் பலன்களையும் மனது ஆத்மாவிற்கு எல்லாக் குணங்களையு முண்டாக்குவது மெல்லாம் ப்ராணனுடைய மஹிமையையென்று தம் பெருமைகளை யெல்லாம் ப்ராணனுக்கே அர்பணம் செய்தன. அதன்மேல் ப்ராணன் ப்ரபுவாகி, எனக்கு ஆடை அன்னம் எல்லாம் அளித்துப் பூஜிக்க வேண்டுமென்றது. 'உலகம் புசிக்கு மன்னமெல்லாம் ப்ராணனுக்கே யென்றும், புசிப்பதற்கு முன்னும் பின்னும் அருந்தும் ஆசமந தீர்த்தம் அதற்கு உடை யென்றும் சொல்லி, ஊணும் உடையும் அவை யளித்தன. ஆக ப்ராரணனை இங்ஙனம் உபாஸிப்பதென உணர்த்தினபடி.

பிறகு பெருமையை பெற விரும்புவோன் ப்ராண விஷயமாகச் சில ஹோமம் முதலானவற்றைச் செய்யும் வகையான மந்த்தகர்ம என்றதொரு க்ரியையை யுபதேசித்து—'இங்ஙனம் ஹோமம் செய்தவனோ, இதைப்போல் ஏதேனும் ஒரு காம்ய கர்மத்தைச் செய்பவனோ ஸ்வப்நத்திலே சுந்தரியான ஸ்திரீயைக் கண்டானாகில் தனக்குப் பலன் கைக் கூடிற்றெனத் தெளியலாம்' என்றது.

**5, 3—10.** பஞ்சாக்நி வித்யை. அருண மஹிர்ஷியின் பேரனான ச்வேதகேது என்பவன் பஞ்சால தேசத்திலே ஸதஸ்ஸுக்குச் சென்றான். ப்ரவாணனென்ற ராஜரிஷியும், 'ரிஷி குமாரரே! தகப்பனார் உபதேசங்களைச் செய்தருளினாரா?' என்று கேட்டான். இவனும் 'ஆம்'

என, ப்ரவாஹணன் மேல்வருமாறு வினவினன். அங்கு அவர்களின் ஸம்பாஷணை பின்வருமாறு—

1. 'ப்ரஜைகள் மரண மடைந்த பிறகு போகுமிட மெது' தெரியுமா?'

பூஜ்யரே! எனக்குத் தெரியாது'

2. திரும்பிவரும் போதுள்ள வழிதெரியுமா?

'தெரியது'

3. 'தேவயாந மார்க்கம், பித்ருயாண மார்க்கம் என்றவைகளின் வேறுபாடு தெரியுமா?

'தெரியாது!

4. மேலுலகம் போய்ச் சேர்ந்த ப்ராணிகள் யார்;

'தெரியுமா?

'தெரியாது.'

5. ஐந்தாவது ஆஹுதியில் மனிதனுகப் பிறப்ப தென்பது தெரியுமா?
'ஒன்றும் தெரியாது.'

ஆகில் நீர் உபதேசம் பெற்றதென்? இவைகளை யறிய வில்லையாகில் உபதேசம் பெற்றதாக எங்ஙனம் கூறுவது?' என்றுன் அரசன்.

இங்ஙனம் கேட்டதும் ச்வேதகேது மிக்க ஆயாஸ முற்று, தகப்பனுர் இருக்குமிடம் ஓடிவந்து, தனக்கு நேர்ந்த மானபங்கத்தைச் சொல்லி வருத்தப்பட, தகப்ப ஞரான கௌதம உத்தாலகரும், 'பிள்ளாய்! உனக்குத்

தெரிந்திருந்தால் சொல்லாமலிருப் பேனோ' என்று சொல்லி தாமே அதை அரசனிடம் அறிந்துவரப் புறப் பட்டு, பிள்ளையையும் கூட அழைக்க, அவன் அதை மறுத்து நிற்க, தாம் மட்டும் வந்து சேர்ந்தார். ப்ரவாஹண னும் அவருக்கு மரியாதைகளைச் செய்து வேண்டியதைக் கேட்கலா மென்ன, அவர் அதனையே கேட்டார் அரசன் வரன் அளித்திருந்தும் வேறு ஏதாவது கொடுத்தனுப்பி விட முயன்றான். அவர் வித்யையை விரும்பி ஐஹிகம் ஆமுஷ்மிகமெல்லாவற்றையும் வேண்டா என்ன, அரசன் அவ்வித்யையின் அருமையைச் சொல்லி, ராஜகுலத்தில் மாத்திரம் இருந்த அவ்வித்யையை அவருக்கு உபதேசித் தான். அது பஞ்சாக்நி வித்யை.

ஐந்து அக்னிகளான :—ஸ்வர்க்கம், மேகம், ப்ருதிவி, புருஷன், ஸ்திரீ என்றவை. இவற்றை அக்னியாகக் கல்பனை செய்தது. ச்ரத்தையோடு புண்ய கர்மம் செய்த வன் மரணமடைந்ததும் உடலினின்று அவனும் ப்ராணே ந்திரியங்களும் சேர்ந்து கிளம்பிய பூதஸௌக்ஷ்மம் முதலில் ஸ்வர்க்கம் என்கிற அக்னியில் ஹோமம் செய்யப்படுகிறது. அங்கு வெகு போக்யமான சரீரம் எடுத்து அவன் போகம் அனுபவித்திருந்த பிறகு அவனது அத்தகைய பூத ஸௌக்ஷ்மம் மேகத்திலே சேர்க்கப்படுகிறது. பிறகு மழை யில் பூமியிலே விழுந்து பல தானியம் முதலான ஆஹாரத் தினுட்புகுந்து நிற்கிறது பிறகு புருஷனின் உடலிற சேர்ந்து ஸ்திரீ யென்னப்படும் ஐந்தாவது அக்னியிலே ஹோமம் செய்யப் பெற்று புருஷ வடிவம் கொள்கிறது. அங்கே பத்து அல்லது அதற்கு ஏறக்குறைய சில மாதங் கள் தங்கிப் பிறந்து ஆயுள் முடிவு வரைக்குமிருந்து மறு படி மரித்து முன்போல் போய் வருகிறது.

இங்ஙனம் ஸம்ஸரிக்கும் ஆத்மாவின் உள் நிலையை (ஆத்மாவை உடல் புலன்களெல்லாவற்றினும் வேறான

தென்ற வாருக) அறிந்து உபாஸிப்பவரும்,மற்றும் அரண்யத்தில் (அந்தணராய் கைவல்யபலனை விட்டு (ச்ரத்தையுடன் ப்ரம்மத்தையே யுபாஸிப்பவரும் அர்ச்சிராதி மார்க்கத்தாலே ப்ரம்மத்தைப் பெறுகிருர்கள். இந்த மார்க்கம் தேவயாந மார்க்கம். அர்ச்சிராதி மார்க்கத்தைச் சிறிது விரிவாகவே இங்குச் சொல்லிற்று—அக்னி, பகல், சுக்ல பக்ஷம், வருஷம், ஸுர்யன், சந்திரன், மின்னற் 'புருஷன் என்று குறித்து அந்த அமாவன் ப்ரம்மத்தை அடைவிக்கிருன்' என்றது.

இதுவின்றி ஊரில் ஒன்று சேர்ந்து பலவித யஜ்ஞங்களையும், குளம் வெட்டுவது, ஆலயம் கட்டுவது முதலானவற்றையும், தான தர்மங்களையும் பலன்களைக் கோலிச் செய்பவர் பித்ருயாண மார்க்கம் வாயிலாக ஸ்வர்க்கம் சென்று அங்குள்ளாருக்குப் போக்யமாகச் சந்திரனைப் போன்ற சரீரம் பெறுவர். அம்மார்க்கமாவது—புகை, இரவு, க்ருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயனம், பித்ருலோகம். ஆகாசம், சந்திரன் என்ற முறையிலமைந்ததாம். அங்கிருந்து திரும்பின பிறகு ஜீவன் வரும் மார்க்கமாவது:—ஆகாசம், வாயு, புகை; மேகம், மழை, ஔஷதிகள் எனவாம். ஔஷதிகளிலிருந்து சரியானபடி புருஷனிடம் போய்ச் சேருவது வெகுவாகத் தாமதிக்கும், பிறகு அவனவனது முன் கர்மத்திற்குத் தகுந்தபடி சேர, மேலும் கீழுமான ஜன்மங்கள் ஏற்படுகின்றன.

(ஐச்வர்யகாமன் கிராமவாஸி; ஆத்மோபாஸகன் நகரவாஸி; ப்ரம்மோபாஸகன் வநவாஸி.) கீழ்ச்சொன்ன மார்க்கங்களிலே ஸம்பந்தம் பெருமே அடிக்கடி பிறப்பதும் மரிப்பதுமாய், கொசு, புழு, பூச்சிகளைப் போலாம ப்ராணிகளுமுண்டு. மேலுலகத்திற்குச் செல்வதென்பது இவற்றிற்கு இல்லை.

பஞ்சமஹாபாதகிகளாவார், பொன் வெள்ளி திருடு கிறவனும்; கள் குடிப்பவனும்; குருதார கமனம் செய்பவ னும், ப்ரம்மஹத்யை செய்பவனும்; இந் நால்வரில் ஒரு வரோடு ஸஹவாஸம் செய்பவனும்; பஞ்சாக்நிவித்யையில் இழிந்தவனுக்கு மஹா பாதகிகளோடு சேர்ந்ததாலேற் படும் பாவம் கிடையாது (இது இவ் வித்யைக்குள்ள தொரு சிறப்பு.) என்றது.

5. 11-24. வைச்வாநரவித்யை. ப்ராசீநசாலர், ஸத்யயஜ்ஞர், இந்த்ரத்யும்நர், ஜநர், புடிலர் என்னப் பட்டவரும், அத்யயநமும் அநுஷ்டானமும் நிரம்பினவரு மான மஹர்ஷிகள், 'நம் ஆத்மா யாது, ப்ரம்மமெது?'' எனச் சேர்ந்து ஆராயலாயினர். கடைசியாக, 'அருண ரின் புதல்வரான உத்தாலகர் இது விஷயத்திலே நல்லறி வுள்ளவர். அவரிடம் சென்று தெளிவோம்' என்று அவரை யணுகினர். அவரும், 'இவர்களின் கேள்வி களுக்கு யான் மறுமொழி கூற வியலேன். ஆக வேறொரு வரையே காட்டவேண்டும்' என்று முடிவுசெய்து, 'இது விஷயத்திலே நன்கு தெரிந்தவர் கேகயதேசத்தரசர் அச்வபதி யென்பவராவர். அவரிடம் செல்வோம்' என்றார். அறுவரும் அங்கே சென்றனர். அவ்வாசனும் இவர்களைத் தனித் தனியே செவ்வனே ஸத்கரித்து, காலை யில் எழுந்தவுடன் இவர்களிடம் சென்று (இவர்களுக்கு விசேஷமாக ஐச்வர்யம் அளிக்க நினைக்க, இவர்களும் அதற்கு இசையாமலிருக்க, என்னவோ என்றஞ்சி) 'எனது தேசத்திலே திருடன், க்ருபணன் (லோபி), குடி யன், ஆஹிதாக்நியல்லாதவன், பர ஸ்திரீயினிடம் செல்ப வன். பரபுருஷஸம்பந்தமுள்ள ஸ்திரீ என்னப்படுவர் கிடையார். ஆக இங்குள்ள பணம் சுத்தமானது. இப்போது யாகம் செய்யப் போகிறேன். அதிலே ருத் விக்குகளுக்கு அளிப்பது போல் தங்களுக்கும் த்ரவ்யம் அளிக்கிறேன். இருக்க வேண்டும்' என்று வேண்டினான்.

இவர்களும், 'எவர்களுக்கு எது வேண்டுமோ; அதுதான் அவர்களுக்கு தனமாம். நாங்கள் வைச்வாநராத்மாவைக் கற்க வந்தவர்கள். எங்களுக்கு அந்த தனத்தையளிக்க வேண்டும்' என்றனர். ஆகில் நாளைத் தினம் காலையில் அங்ஙனம் ஆகக்கடவதென்றான் ராஜர்ஷி. அவர்கள் ப்ராம்மணரான படியாலே அவர்களிடமிருந்து சுச்ருஷையை யபேக்ஷயாமலே உபதேசிக்கத் தொடங்கினன். அவர்களுக்கு ஏற்கனவே இவ்வித்யை சிறிது அறியப்பட்டிருந்ததால் விவாதம் இருப்பதைத் தெரிந்து, அவரவர் உபாஸிக்கும் வண்ணமறிந்து தத்துவத்தைப் பிறகு உபதேசிப்பது நலமென நினைத்து தனித்தனியே ஒவ்வொருவரையும், அவரவர் வைச்வாநராத்மோபாஸனம் எவ்வண்ணம் செய்கின்றனர் என்பதைத் தெரிவிக்கச் சொன்னன்.

கீழ்க் குறித்த ஆறுபேரும் முறையே, த்யுலோகம், ஆதித்யன், வாயு, ஆகாசம், ஜலம், ப்ருதிவி என்பவற்றில் ஒவ்வொன்றை வைச்வாநராத்மாவாக உபாஸிப்பதாகச் சொன்னர்கள். அரசனும், 'இவையெல்லாம் வைச்வாநராத்மாவின் அவயவங்கள், இவை அடைவாக, தலை, கண், ப்ராணன், உடல், நீர்ப்பை, பாதங்கள் என்ற அவயவங்களாம். உண்மையில் இவை வைச்வாநராம்சங்களாக இருப்பதாலே உபாஸிப்பவருக்குப் பலவிதமான இம்மைப் பலன்கள் காண்கின்றன' என்று கூறி அவரவர்க்கு இருக்கும் இம்மைப்பலனையுமெடுத்துக் காட்டி, மேலே, 'நீடித்து இதனையே உண்மையாகப் பற்றினல் உபாஸிப்பவனின் தலை முதலிய அங்கங்கள் அழியும்படியாம். இவற்றையெல்லாம் கீழ்ச்சொன்ன அங்கங்களாக அததன் பெயருடன் அறிந்து எல்லாம் ஒன்று சேர்ந்து விச்வரூப வைச்வாநரோபாஸனம் செய்ய வேண்டும்' என்று உபதேசித்து, பலன் இவ்வுபாஸனத்திற்கு அந்த பரப்ரம்மமாகிற பரமான்னமேயாம் என்று

சொல்லிப் பிறகு, 'இங்ஙனமுள்ள ப்ரம்மத்தினுடைய அவயவங்களைத் தன் உடலின் அவயவங்களிலேற்றிட்டு அந்த ப்ரம்மத்தை இதிலே வைத்து, தன் உடலிலுள்ள பாகங்களை அக்நிஹோத்திரத்தின் கருவிகளாகக் கருதி வயிற்றிலிருக்கும் வைச்வாநராக்நியிலே (ப்ராணாக்நி ஹோத்ரத்தை) தனக்கு முதன் முதல் கிடைக்கு மன்னத்தைக்கொண்டு ஐந்து ப்ராணாஹுதிகளை அவற்றிற்குள்ள முறைப்படி செய்தால் பஞ்ச ப்ராணன்களும், அவற்றின் வாயிலாக இந்திரியங்களும், அவற்றை நியமிக்கும் தேவர்களும், அவர்களைச் சார்ந்த உலகும் த்ருப்தி பெறும். இங்ஙனம் உபாஸிப்பவனுக்குப் பெருந்தீயில் அகப்பட்ட பஞ்சுபோல் பாபங்களெல்லாம் எரிந்துபோம். பசியுடன் தவிக்கும் பிள்ளைகள் தாயை அண்டியிருக்கிற வகையிலே இவ்வக்நிஹோத்ரத்தை யன்றோ உலகம் ஆச்ரயித்திருக்கிறது' என்றுபதேசித்தான்.

## 6

6. ஸத்வித்யை. அருண மஹர்ஷியின் பேரன் ச்வேதகேது என்பவன் இருந்தான். அவன் தந்தையார் அவனைக் கூப்பிட்டு 'ஓ ச்வேதகேதோ! ப்ரம்மசர்யம் பெற்றுக்கொள். நம் குலத்திலே அத்யயனம் செய்யாமே இங்ஙனம் வ்ராத்ய ப்ராம்மணனா யிருப்பதில்லையே யென்றார். பன்னிரண்டு வயதான ச்வேதகேதுவுக்கு உணர்ச்சி ஏற்பட்டது. வெளியே போய் குருகுலவாஸம் செய்து எல்லா வேதங்களையும் ஸாங்கோபாங்கமாகச் செவ்வனே கற்று, இனிக் கற்கவேண்டிய தொன்றில்லை யென்ற இறுமாப்புடன் இருபத்திநான்காம் வயதானதுமே திரும்பித் தன்னில்லம் வந்து புகுந்தான்.

அவனைப் பார்த்துத் தந்தையானவர், 'என்ன ச்வேத கேதுவே! இனி அறியவேண்டிய தொன்றில்லை யென

நினைத்தவன் போலே காண்கிருய், எதைக் கேட்டுச் சிந்தனை செய்து த்யானித்தால் உலகில் எல்லாம் கேட்டுச் சிந்தித்து த்யானிக்கப் பெற்றதாமோ, ஸர்வத்தையும் நியமிக்கும் அதனை உபதேசிக்கும்படி ஆசார்யனிடம் கேட்டாயோ?' என்று வினவினர். குமாரன் ஆலோசித்தான்—இதென்ன, இப்படியும் ஒரு வஸ்து இருக்கலாகுமோ? ஒன்றை யறிந்தால் உலகமெல்லாம் அறிந்ததா மென்கிருரே. 'இங்ஙன மொன்றுண்டாகிலன்ரோ, நாம் இதனைக் கேட்டுத் தெரிந்து கொள்ளாததொரு குற்றமாம் என்றவாறு. ஆகவே, அங்ஙன மாவதொன்றுண்டோ என்ருன். தந்தையும் அதற்கு என்ன தடை? உலகிற் பார். ஒரு மண் கட்டியைப் பார்த்திருந்தால் அதிலிருந்துண்டாம் குடம், மடக்கு முதலானவை யெல்லாம் பார்த்தவையாய்விடுகின்றன. ஒரு பொன்னுருவைக் கண்டால் அதனுல் செய்தவை யெல்லாம் கண்டவையாகின்றன. ஓர் இரும்பைக் கண்டு விட்டால் அதனுலாய கருவிகளனைத்தும் காணப்பெற்றன வாகின்றன. ஏன்? ஒன்றே பல உருவங்களைப் பெற்று அவ்வுருவங்களுக்குத் தக்க பெயரும் தானே பெறுகின்றதால், ஆக, 'காரணம் வேறு, அதிலிருந்து வரும் காரியங்கள் வேறு' என்ற கொள்கை இங்ஙனம் உண்மை யாகாது. ஆக உலகெல்லாம் ஒரு வஸ்து வினிடமிருந்து பிறந்ததாகில் அதை யறிந்தால் இதெல்லாம் அறிந்ததாகத் தட்டில்லையே யென்ருர். குமாரன் விழித்துக்கொண்டான். நம்மிடத்திலே அளவில்லாக் கருணை பொருந்திய நம் ஆசார்யன் இதனையேன் நமக்கு உபதேசிக்கவே யில்லை? நாம் கேட்காவிட்டாலும் கிருபையினுல் கற்பிப்பவரல்லரோ அவர். இது ஒருக்கால் அவரும் அறியாததொன்று யிருக்கலாமா என ஊஹித்துத் தந்தையாரிடம் விண்ணப்பித்து இவரிடமே இதைக் கற்க விரும்பி ப்ரார்த்தித்தனன். தந்தையுமிசைந்து பின்வருமாறு உபதேசித்தனர்—

பலவகை வஸ்துக்கள் நிறைந்துள்ள இல்வுலகெல்லாம் ஸ்ருஷ்டிக்கு முன்பு ஒரே வஸ்துவாய், ஸ்ருஷ்டி கர்த்தாவாகக் கூட இரண்டாவது வஸ்து இன்றி இருந்தது. இந்த ப்ரபஞ்சமே காரணாகாரமாய் இருந்ததென்ன வேண்டியிருக்க, அங்ஙன இசையாமே, இது ஒருவிதமாகவுமில்லாமலே யிருந்ததென்றும், த்ரவ்யம் முன் இல்லாமலே பின் உண்டாகிறதென்றும் சிலர் சொல்லுவர். இந்தத் தர்க்க வாதம் வெறுக்கத்தக்கதாம். உலகில் ஒன்று ஒன்றாக மாறுவதைப் பார்த்திருக்கிறோமே யல்லது ஒரு விதமாகவு மிராமற் புதியதொரு த்ரவ்யத்தைக் கண்டதில்லை மண்கட்டி முன்னே குடமாக இராமல் மண்ணாக இருந்து, பிறகு குடமாயிற்றென்றால் இசையவியலும். மண்வேறு, குடம் வேறு. மண்ணாகக் கூட முன இராமல் குடமென்ப துண்டாகிறதென்றால் அனுபவத்திற்கும் யுக்திக்கு மிது பொருந்தாது. வீண் கற்பனையதிகமாகும் ஆக ஸ்ருஷ்டிக்கு முன் இருந்த தொன்றே பலவாக ஆயிற்றென்றுகொள்க. ஆகக் கார்யமும் உண்டாவதற்கு முன்னும் ஒருவிதமாக இருந்ததென்றும், அதனால் ஸத்து எனப்படுமென்றும் கொள்க.

இதனை விவரிக்கிறோம். ஸத் என்ற அவ்வஸ்து, நான் வெகுவாக ஆகக் கடவேன் என்று ஸங்கல்ப்பம் செய்து கொண்டு தேஜஸ்ஸை ஸ்ருஷ்டித்தது. தேஜஸ்ஸாயிருந்து ஸங்கல்ப்பம் செய்துகொண்டு ஜலத்தை ஸ்ருஷ்டித்தது. ஜலமாயிருந்து அங்ஙனமே ப்ருதிவியை ஸ்ருஷ்டித்தது. இந்தப் பூதங்களும் உலகில் ப்ராணிகள் என்னும் பூதங்களாயின. அந்த ப்ராணிகள் அண்டஜம், ஜீவஜம், உத்பிஜ்ஜம் என்று மூன்று வகையாம். அவையாவன—முட்டையினின்றுண்டாவது, மாடு மனிதரைப் போல் ப்ராணியினிடமிருந்தே பிறப்பது, பூமியைப் பிளந்து மரம் செடி இவற்றைப்போல்உண்டாவதென்றவை. இம்மூன்றும்

வகுப்பிலே ஸ்வேதஜமும் (வியர்வையிலிருந்துண்டாம் ஜந்துவும்) சேரும். ஆக நான்காகக் கூறுமே மூன்றென்றது. இவையுண்டான வகையானது—'முன் சொல்லப்பட்ட மூன்று மஹா பூதங்களிலும் முன் சொன்ன காரண வஸ்து—ஸத்து ஜீவாத்மாவோடு ப்ரவேசித்து நாமரூபங்களைச் செய்யக்கடவேன் (உருவுண்டாகிப் பெயரும் தனித் தனியே வைக்கக் கடவேன் என்ற ஸங்கல்ப்பித்து, அதற்காக மூன்று மஹா பூதங்களையும் த்ருவிருத்கரணம் செய்து ஸங்கல்ப்பித்தபடியேயாயிற்று. த்ருவிருத்கரணமாவது—ஒவ்வொன்றையும் மூன்றும் கலந்தாக்குகை. ஆகவே இப்போது நமக்குக் காணப்படும் நீர், நிலம் முதலியன சுத்தமான நீர், நிலம் முதலியன வாகா. இப்போதுள்ள நீரில் சுத்த நீர்ப்பாகம் பாதி மற்ற பாதி மற்ற பூதங்களாம். இப்படி நிலத்திலும் தேஜஸ்ஸிலும் காண்க. [இதைப் பஞ்ச பூதங்கள் என்று எடுத்துச் சொல்லும்போது பஞ்சீ கரணமென்று சொல்வதாம்.] இப்படி அந்தந்த பூதம் பாதி மற்றவை பாதியாகச் சேர்த்து வுருவாக்கி அவற்றிலிருந்து (சரீரம்) உடலை ஸ்ருஷ்டித்து ஜீவாத்மாவுடன் உட்புகுந்து ஒவ்வொரு வஸ்துவாகவும் பரப்ரம்மம் நிற்கிறது. இங்ஙனம் ஒன்று வெகு வாயிற்றென்க. ஒவ்வொன்றிலும் அசேதநம், சேதநன், ஈச்வரனென்ற மூன்றும் சேர்ந்திருப்பதையும் அறிக.

த்ருவிருத் கரணம் செய்யப்பெற்ற வஸ்துக்களே நமக்கிங்கே காணப்படுமிவையெல்லாம் என்பதைப் பல உதாரணங்களிலிருந்து காணலாம். தேஜஸ்ஸுக்கு இயற்கை நிறம் சிவப்பு, ஜலத்திற்கு வெண்மை, ப்ருதிவிக்குக் கருமையாம். இங்ஙனமிருக்க நெருப்பு முதலானவற்றில் மூன்று நிறங்களையும் பார்க்கிறோம். இது த்ருவ்ருத்கரணப்படி எல்லாம் சேர்ந்ததால் ஏற்பட்டதென்க. பிறவும் காண்க.

இங்ஙனம் மூன்று மஹா பூதங்களினின்று பிறந்த உடலின் வளர்த்தலுக்கு உபயோகிக்கும் அன்னம் மூன்று பரிணமங்களைப் பெறுகிறது. அஸாரபாகம் மலமாய் விடுகிறது; ஸாராம்சம் மாம்ஸமாம்; மிகவும் ஸாரமான நுண்ணிய பாகம் மனதைப் போஷிக்கும். அருந்தும் ஜலமும் (மூத்ர) நீர் இரத்தம், ப்ராணனைப் போஷிக்குமது என மூன்ருக மாறுகிறது. தேஜோ மயமான ஆஹாரமும் எலும்பு, அதற்கு வேண்டும் ஸ்நேஹம், வாக்கை வளர்க்கும் பாகமென மாறுகிறது. தயிரைக் கடைந்தால் வெண்ணெய் வெளிக்கிளம்புமாபோலே உட்கொள்ளும் ஆஹாரத்திலிருந்து மனது; ப்ராணன், வாக்கு இவைகளுககு வேண்டும் ஸூக்ஷ்மாம்சங்கள் வயிற்றிலுள்ள அக்னியில் பக்வம் செய்யப் பெறப்படும்—என்ருர்.

மேலே, "பிள்ளாய்! நீ பதினைந்து நாள் சாப்பிடாமலிரு நீரை நன்கு அருந்தி வா. ப்ராணனுக்கு அழிவு வாராது" என்ருர். அங்ஙனமே ச்வேதகேது நடந்து கொண்டான். பிறகுத் தந்தையினிடம் வந்து, என்ன சொல்வது என்ருன். நீ ஓதின வேதங்களைச் சொல் என்ருர். ஒன்றுமே மனதில் தோன்றவில்லை யென்ருன். 'எரிந்த தணலில் ஒரு சிறு துளிமாத்திரம் நின்றிருந்தால் அது ஒன்றும் எரிக்கமாட்டாது. அதே உணர்ந்த புல்லும் சிறு சுள்ளிகளும் சேர்த்து ஊதி ஜ்வலிப்பிக்கப்பட்டால் எதையும் எரிக்கக்கூடும். அங்ஙனமே உண்ணுமலிருந்ததால் உனது பதினுறு அம்சங்களில் இப்போது பதினைந்து அம்சங்கள் போயின. இப்போது உண்டு வந்தாயாளுல் எல்லா அம்சங்களும் சேரும். உடனே நீ எதையும் சொல்லக் கூடும்' என்று கூறி உண்ணச் சொன்னுர். அவ்வண்ணமே உண்டான்; பிறகு சொல்லத் திறம் பெற்ருன். இப்படி மனதிற்கு அன்னத்தின் நுண்ணிய அம்சங்களால் புஷ்டி ஏற்படுகிறதென்றது முதலானவற்றை விளக்கினுர்.

இவ்வளவால் உலகுக்கெல்லாம் காரணமாமொரு வஸ்து உள்ளே புகுந்து நியமிக்கும் சக்தியோடு இருப்பது உரைக்கப் பட்டது. அவனும் தெளிந்தான்.

மறுபடியும் பிள்ளைக்கு உபதேசிக்கத் தொடங்கினர். நித்ரையில் ஆத்மாவின் நிலையைச் சொல்லுகிறேன் என வாம்பித்து 'ப்ருதிவி ஜலத்திலும், ஜலம் தேஜஸ்ஸிலும், தேஜஸ்ஸு ஸத்து எனப்படும் பரதேவதையிலும் லயிப் பதை நித்ரை, மரணம் இரண்டையுமெடுத்து ஒரு வித மாக நிருபித்து மேலே சொல்லுகிருர் —

(1) தேனீக்கள் பலவகை மரங்களிலிருந்து ரஸமான தைச் சொற்பம் சொற்பமாக எடுத்து ஒன்று சேர்க்கின்றன அங்ஙனம் சேர்ந்த ரஸம், 'நான் இந்த மரத்தினின்று வந்தேன்; நான் இந்த மரத்தியதாவேன்' எனத் தனித் தனியே தெரிந்து கொள்ள முடியுமா? அவ்வண்ணமே ஸத்து எனப்படும் பரமாத்மாவினிடம். ஒன்றின ஆத்மாக் கள் தங்களைத் தாங்கள் தெரிந்து கொள்ளமாட்டா.

(2) மாரி காலத்தில் கிழக்கும் மேற்குமாகப் பல ஆறுகள் ஓடிக் கடலில் வீழ்கின்றன. இவை கடலி னின்றே மேகங்களாலுட் கொள்ளப்பட்டுப் போய் மறுபடி வந்தவை. ஆகிலும் அவற்றிற்கு அது தெரியாது. அங்ஙனமாகுக.

(3) பெரிய மரத்தை ஒரிடத்திலே கத்தியால் வெட்டி ளுல் பால் பெருகுகிறது. இப்படி ஜீவித்திருக்கும் மரத் திலே ஒரு கிளையை ஜீவன் விட்டால் அது உலர்ந்து விடுகிறது. பிறகு மற்ருென்றை விடுகிறது. அதுவும் காய்ந்து போய்கிறது. இப்படியே மொத்தமும் விடப்பட மொத்தமும் உலர்ந்து போய் விடுகிறது. இதனுல்— தேஹத்தைக் காட்டிலும் ஜீவன் வேறு, அவனுல் விடப்

பட்டால் இது மரித்துவிடும், ஜீவன் மரிப்பதில்லை யென்ற தாம்

(4) 'அருகிலிருக்கும் அந்த ஆலம்பழத்தைக் கொண்டுவா. விண்டு பார்.' 'எத்தனையோ விதை களிருக்கின்றன.' அவற்றி லொன்றை விண்டு பார்.' 'ஒன்றும் தெரியவில்லை.' 'வெகு நுட்பமாயிருக்கிறது. ஆயினும் இந்த நுட்பத்திலிருந்தே இவ்வளவு பெரிய ஆலமரம் கிளம்பி யிருக்கிறது. இவ்வளவையும் உண்டு பண்ணும் சக்திகள் அவ்விதையினுள்ளே பொதிந்து கிடக்கின்றன. இப்படியேயாம் நாம் சொன்ன ஸத்து என்ற பரதேவதையு மென்று கொள்வாயாக.'

(5) நீ படுக்கும்போது, உப்புக் கட்டியொன்றை ஒரு பாத்திரத்தில் நீரில் போட்டுவிடு. காலையில் எழுந்தவுடன் எடுத்து வந்து, அது நீரிலே இருக்கிறதா, பார். 'கையால் தடவிப் பார்த்தாலும் இல்லை.' 'ஆகில் அந்தத் தீர்த்த (ஜல)த்திலே சிறிது உட்கொள். என்ன வறிகிறுய்.' 'உப்பு கரைந்து விட்டது. இருந்தும் தெரியவில்லை.' ஆகக் காரண வஸ்துவும் இங்ஙனம் கரந்தெங்கும் பரந்துள்ளது, தெரியாதெனத் தேறும்.

(6) ஒரு தேசத்தினின்று ஒருவனைக் கண்களைக் கட்டி வெகு தூரம் கொண்டுபோய் ஜனங்களில்லாத விடத்திலே விட்டுவிடுவோம். அவன் கீழ்மேல் திக்குள் தெரியாமே பெருங் கூச்சலிடுவான். ஒருவன் இவனது கட்டை அவிழ்த்து, இது உனது தேசம்போம் வழியென்று காண் பித்தால் க்ராமத்தின்மேல் க்ராமமாக நடந்தறிந்து தன் இடம் வந்து சேருவான். அதுபோல் ஆசார்யன் மூல மாகவே தன் தன்மையறிய முடியும். அறிந்தவன், 'இந்த ஸம்ஸாரபந்தம் விட்டால் போதும்; உடனே நான் எனது இடம் சேர்வேன்' என்று கதறிக் கொண்டிருப்பான்.

(7) ஒருவன் மரணமடையும் தருவாயிலிருந்தால் சேர்ந்தவர்கள் அண்டையில் வந்துட்கார்ந்து, நான் யார் தெரிகிறதா, என்று கேட்கிருர்கள். சில சமயம் அவன் அறிவதில்லே. ஏன்? அவனது வாக்கு மனதினும், மனது ப்ராணனிலும், அது தேஜஸ்ஸு எனப்படும் சரீர பூதஸூக்ஷ்மத்திலும், அது காரணவஸ்துவான பரதேவதையிலும் லயித்துவிட்டதால்.

(8) திருடினனென்றொருவனைக் கையும் பிடியுமாகப் பிடித்துவந்து, 'இவன் திருடினன். தீயிற் காய்ப்புண்ட கோடாரியை இவன் கையில் வைத்துப் பரீக்ஷியுங்கோள்' என்பர். அவன் உண்மையில் திருடியிருந்தால் அதனல் அவன் உடல் எரிக்கப்படும். இல்லேயேல் அவனுக்கு ஒரு தீங்குமில்லே. விடு பெறுகிருன்.

இவ்வுதாரணங்கள் பல கூறினேம். இவை எல்லாவற்றையு முணர்ந்து, உலகெல்லாம் அந்தக் காரணவஸ்துவே என்றும், அது அழிவற்றது, தோஷமற்றதென்றும், அது இதற் கெல்லாம் ஆத்மாவென்றும் உனக்குள்ளும் அந்த ஆத்மவஸ்து இருக்கிறதென்றும் தெளிந்துகொள் என்று ஒருதரமன்றி பலதரமாக உபதேசித்தார். ச்வேதகேதுவும் (தகப்பனர் உலகிலுள்ள உதாரணங்களேக் காட்டி இவ்வளவு அழகாக எடுத்துக்கூற) எளிதில் செவ்வனே தத்துவ ஜ்ஞானம் பெற்ருன்.

இந்த ஸத்வித்யையில் கண்டங்கள் பதினுறு. இவற்றில் சொல்லப்பட்ட விஷயங்களாவன-1. ஸத்து என்கிறது உலகத்துக்கெல்லாம் காரணமுமாம். 2. முதலில் ஸமஷ்டிஸ்ருஷ்டி செய்கிறது. 3. பூதங்களே ஒன்ருேடொன்று சேர்த்து வ்யஷ்டிஸ்ருஷ்டி செய்யும். 4. த்ரிவிருத்கரணமென்ற பூதங்களின் சேர்க்கை பல உதாரணங்களில் காணக்கூடியதே. 5. தேஜஸ்ஸு, ஜலம்,

ப்ருதிவி என்றவற்றால் உடல் வளர்க்கப்படும். 6. அவ்வுணவின் நுண்ணிய பாகம் வாக் ப்ராண மனங்களுக்கு ஆகும். 7. அது இல்லையாகில் மனது க்ஷீணமாய்விடும் என்று முதலேழு கண்டங்களில் சொல்லிற்று. பிறகு—8. ஸத்து சேதனங்களுக்கு லயஸ்தானம், 9 லயிக்கும் ஜீவன்கள் அனேகங்களாம். 10. கடலினின்று நதிகள் போல் சேதனர்கள் ஸத்தினின்று வெளியாவர். 11. அந்த சேதனர்களுக்கு அழிவில்லை 12. ஸத்து மிக ஸூக்ஷ்மமானாலும் மிகச் சிறிய ஆலம் விதை பெரிய மரத்தைப் போலே மிகப் பெரிய ப்ரபஞ்சத்தை உண்டு பண்ணும். 13. நீரில் உப்பு போல் இந்த ஸத்து எங்கும் கரந்து பரந்துளது. 14. ஆசாரியன் மூலமாக இதனை யறிவதாம்; கண் கட்டுண்டு வெளியூக்குக் கொண்டு வரப்பட்டவன் ஒருவர் மூலம் வழி தெரிந்து வீடு பெறுவது போலாம் இது. 15. தன்னை வந்தடைந்தவனுக்கு எல்லா அனிஷ்டமும் அது போக்கும். 16. அதனைப் பெற்றபிறகு மீண்டும் ஸம்ஸார பந்தமில்லை என்பனவாம். இப்படி ஒன்றோடொன்று இணையுமாறு இவற்றின் பொருள்களை நாமே சுருக்கிக் கூறினம்.

"எல்லாவற்றிற்கும் ஆத்மாவாய் ஸூக்ஷ்மமாய் அழிவற்றிருக்கும் இது எல்லா உலகைப்போல் நீயாகவும் தோன்றி யிருப்பதால் "தத்த்வமஸீ அது நீயாவாய்" என்று இங்கே உபதேசித்தனர் உத்தாலகர். உத்தாலகர் உபதேசம் உலகில் லௌகிகர் மனதிற் படியும்படி வெகு அழகாய் உபதேசம் அமைந்துள்ளது.

(7)

7. பூமவித்யை. உபதேசித்தருளவேணும் என்றிவ்வளவே ஸநத்குமாரரை நாரதமஹர்ஷி சோகம்தாங்காமே

தெண்டனிட்டு ப்ரார்த்தித்தார். இந்த நாரத மஹர்ஷியோ தெரிந்தவர். அதனால் ஸநத்குமாரர் 'உமக்குத் தெரிந்தவை யாவை, அவற்றைச் சொல்லும்; பிறகு வேண்டியதைத் தெரிந்து கொள்ளலாம்' என்றார். அவர் தமக்குள்ள வித்யைகளை யெல்லாம் அடுக்கடுக்காகக் கூறி, 'எல்லா சப்தங்களையும் கற்றிருக்கிறேன். ஆத்மா இன்னதென்று தெரியாது. அதைத் தெரிந்தால்தான் சோகம் தீருமென்று தங்களைப் போன்றார் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆக ஆத்மோபதேசம் செய்ய வேண்டும்' என்று தம் கருத்திலுள்ளதை விளக்கினார். அது கேட்டு ஸநத்குமாரரும், நீர் ஓதியுள்ள சப்தங்களை ப்ரம்மாக வைத்து உபாஸனம் செய்தால் அந்த சப்தங்கள் விளங்குமிடமெல்லாம் யதேஷ்டமாக ஸஞ்சரித்து ஆனந்திக்கலாமே யென்றார். இதற்குமேல் ஏதேனுமுண்டா என்று மேன்மேல் நாரதர் கேட்க இருவரும் மேன்மேல் ஒவ்வொன்றைக் கூறி அதை ப்ரம்மமாக உபாஸனம் செய்யலாமென்றார். இப்படி இவர் நாமம் (சப்தராசி), வாக்கு, மனது, ஸங்கல்பம், சித்தம், த்யானம், விஜ்ஞானம், பலம், அன்னம், தண்ணீர் தேஜஸ்ஸு, ஆகாயம், நினைவு, ஆசை எனப் பதினான்கை அவர் மேன்மேல் கேட்கக் கேட்க அடைவாகச் சொன்ன பிறகும் அதற்கு மேலானதெதென்று அவர் கேட்க, ப்ராணனை மேலானதாக உபதேசித்தார்.

இங்கே ப்ராணன் எனப்படுவது ஜீவாத்மா என்று அவர் தெரிந்து கொள்ளுமாறு அதை மேலே விவரித்தார். அதாவது—உலகில் கொடுக்கிறவன், வாங்குகிறவன், தந்தை, தாய், உடன்பிறந்தான், உடன்பிறந்தாள், ஆசார்யன் என்றாற் போலுள்ளவரெல்லோரும் ப்ராணனெனப்படுகிறவர். உடலில் இதுள்ள வரையில் யாராவது தன் தகப்பன், தாய் முதலானோரை திக்காரமாகப் பேசினால் கூட இவன் பித்ருஹத்தி பண்ணுகிறவன்,

மாத்ருஹத்தி பண்ணுகிறவன் என்றவாறு உலகம் நிந்திக்கும். சீவன் உடலைவிட்டு நீங்கினால் பிறகு அந்த வுடலை எவ்வளவு புறட்டி நெருப்பில் எரித்தால் கூட ஹத்தியைப் பண்ணுகிறதாகச் சொல்லுகிறதில்லை யென்றார். பிறகு, இந்த ப்ராணனை உபாஸிப்பவன்தன்னை அதிவாதியாக, அதாவது உயர்ந்த புருஷார்த்தமாய் போக்யமான வஸ்துவை உபாஸிப்பவனாகச் சொல்லிக் கொள்வான். அங்ஙனம் சொல்லிக் கொள்ளலாமென்றார்.

இதைக் கேட்ட நாரதமுனிவர் இதே நாம் அறிய வேண்டியது. நமக்கு சோகம் போக்குவதென்று நினைத்து விட்டார் போலும். மேன்மேல் கேட்டுக்கொண்டு வந்தவர் இப்போது வெருமனே நின்றார். ஆயினும் இவர் முதலிற் கேட்ட ஆத்மவஸ்து இதுவன்று என்று பெருங் கருணை யால் அவர் தாமே மேலே உபதேசிக்கலானார்—'ஆனாலும் இந்த ப்ராணனை—ஜீவாத்மாவைக் கொண்டு அதிவாதியா வதை விட ஸத்யம் எனப்படும் ப்ரம்மத்தைக் (பரமாத் மாவைக்) கொண்டு அதிவாதியாவதுதான் தகும். அப்படி அதிவாதியாவதற்கு அதன் உபாஸனம், அதற்காக மனனம், அதில் ச்ரத்தை, அதிலேயே நிலையான பற்றுதல், அதற்குத் தகுந்த செய்கை, இது உண்டாகும் படி அந்த ஸத்யமான வஸ்துவை ஸுகஸ்வரூபமாக அறிதல்,—அதினும் வேறென்று கேட்கவும் கருதவும் வேண்டாதபடி தன்னிலே எல்லாம் அடங்கினதான பெரும் ஸுகமாய் பூமா என்னப்படுவதென வறிதல் எல் லாம் அவசியமாம்' என்றார். இதைக் கேட்ட நாரதருக்கு, இதற்கு மேலும் ஒன்றைச் சொல்லுவாரோ, ஒன்றுண்டோ என ஐயம் கிளர்ந்தது. அப்போது சொன்னார்—இதற்கு மேம்பட்டதொன்று கிடையாது. இதுவே கீழும் மேலும் எல்லாத் திக்குளிமிருப்பது. 'இதே நான்' என்று நினைக்க வேண்டும். ஏனெனில்—இது எதற்கும் ஆத்மா.

இதிலிருந்தே முன் ப்ராணன் வரையிலாகச் சொன்னவை யும் மற்று மெல்லா முண்டாகின்றன. இவ்வாத்மோ பாஸனம் பெற்றவன் கர்மங்களிலிருந்து விடுபட்டு எங்கும் இஷ்டப்படி ஸஞ்சரிக்கும் சக்தி பெறுகிறான். பிறகு இவனுக்கு மரணம், ரோகம், துக்கமென்பவை கிடையா. எல்லாம் இவனுக்குப் போக்யமேயாம். இவன் எதையுமறி வான். ஆயிரக்கணக்கான உருவங்கள் எடுத்து ஆனந்திப் பான். இப்படிப்பட்ட பலனைப் பெறும் உபாஸமானது மனது சுத்தமானால்தானுண்டாம், மனம் சுத்தமாவது சுத்தமான ஆஹாரத்தை உட்கொண்டால் தான்' என்று.

இவ்வாறு நிர்மல மனமுள்ள நாரத மஹர்ஷிக்கு ஸம் ஸாரத்தின் அக்கரையைக் காண வைத்தார் ஸநத்குமாரர். இவரை ஸ்கந்தரென்றும் சொல்வதுண்டு என்றது.

## (8)

8. 1-6. தஹரவித்யை. ப்ரம்மபுர மெனப்படும் இந்த சரீரத்திலிருக்கும் புண்டரீகம் (தாமரைப்பூ) போன்ற சிறிய ஹ்ருதயத்திலே சிறிய ஆகாசமிருக்கிறது. அதனுள் ளிருப்பதை யறிந்து உபாஸிக்கவேண்டும். இவ்வளவு சிறிய ஆகாசத்திற்கு முள்ளே என்ன விருக்குமென்று நினைக்கவேண்டா. வெளியிலுள்ள ஆகாசத்தைப் போலே அந்த ஆகாசமும் பெரிதானதே. கீழ் மேலுலகங்கள், அக்னி, வாயு, ஸூர்ய சந்திராதிகள் எல்லாம் இதிலிருக் கின்றன. உபாஸகனுக்கு இங்கே கிடைப்பதும் கிடைக் காததும் எதுவும் இதனையே ஆதாரமாக வுடையதாம்.

ஆனாலும் எல்லாம் அதிலிருந்தாலும், இந்த உடல் உரு குலைந்தும் அழிந்தும் போனால் ஹ்ருதய புண்டரீகம் போய் விடுமே. அப்போது அதை யாதாரமாக வுடைய

இவ்வாகாசமும் அழிய வேண்டியதாமென்ன வேண்டா. உடலழிவதால் அது அழிவதில்லை. அது நிர்விகார ப்ரம்மம். அதற்கு உடல் புரமென்று கீழே கூறினேன் நன்கு ஆராய்ந்தால் அதற்கு உடல் புரமென்பது தத்துவ மன்று. அதுதான் புரம்; அதிலல்லவோ எல்லாம் குடி கொண்டிருக்கின்றன.

இப்படிபட்ட ஆகாசத்தில் உள்ளே உபாஸிக்க இருப்பது யாது என்னில்—காமங்கள் = கல்யாண குணங் கள், அவை எட்டு. அதனால் அவனை அபஹத பாப்மா, விஜர:, விம்ருத்யு:, விசோக:, விஜிகத்ஸ:, அபிபாஸ:, ஸத்யகாம:, ஸத்ய ஸங்கல்ப: என்கிறது. வினையற் றவன், மூப்பில்லாதவன், மரணத்திற்கிடமாகாதவன், துக்கமற்றவன், பசியில்லாதவன், தாகமில்லாதவன். நிலைநின்ற போக்யங்களையுடையவன், தடையற்ற ஸங்கல்ப சக்தியுடையன் என்றபடி. உலகில் ஓர் அரசனை அண்டிச் சில கார்யங்களைச் செய்து இஷ்டமான பலன் பெறுவது போல் வேதத்தில் ஓதப்பட்ட சில கர்மங் களைச் செய்து புண்ணிய பலன்களைப் பெறுகிறார்கள். இவை யெல்லாம் அழிந்துவிடும். இவ் ஆத்மாவையும் இதன் குணங்களையும் அறியாது இங்ஙனம் செய்வதால் யதேஷ்டமாய் ஜீவித்திருக்க முடியாது. இவ் ஆத்மாவை யும் அதன் குணங்களையும் உபாஸித்தவனுக்கு எல்லாப் பலன்களுமுண்டு. மோக்ஷம் பெற்றானாகில் நினைத்தபடி யிருக்கலாம். தாய், தந்தை, ஸஹோதரன், ஸஹோதரி, தோழர்கள், ஸ்திரீகள் சுகவஸ்துக்கள் எல்லாவற்றுடன் இருக்கவேண்டும் என்று கொண்டால் அங்ஙன் ஸங்கல்ப் பித்து அங்ஙனமே கூடி இருக்கலாம்.

இப் பரமாத்மாவினுடைய கல்யாண குணங்களை நாம் அறியாதது நமக்குள்ள அநாதிபாபத்தாலே, பூமிக்குள்ளே ஓவ்வோரிடத்தில் புதையலிருக்கிறது. அதன் மேலே எப்

போதும் நடமாடி வந்தாலும் ஜனங்களுக்கு அது காண்கிறதில்லை. அது போல் ப்ரம்மமே நமக்குத் தெரியாம லிருக்கிறது. இது இவ்வாத்மா. ஹ்ருதயத்திலிருக்கிறது இது. இங்கு இருப்பதால் ஹ்ருதயமெனப் பெயரைத் தானும் பெறுகிறது, (ஹ்ருதி+அயம்=ஹ்ருதயம் மனதில் இது என்றதாம்,) (ஹ்ருத்+அயம்=ஹ்ருதயத்தை அடைந்தது என்னலுமாம்.) இந்த உபாஸகன் உடலி னின்று பிரிந்த பிறகு பரஞ்சோதியை அடைந்து சுயரூப த்தைப் பெறுகிருனென்கிருர்களே, அந்த பரஞ்சோதி இந்த ஆத்மாதான். இது அழிவும் பயமுமில்லாத ப்ரம்மம். இதற்கு ஸத்யம் எனப் பெயராம். இதை ஸத்-தி-யம் எனப் பிரித்தலாம். சேதனங்கள், அசேதநங்கள் எல்லா வற்றையும் ஆள்கிறதென ஸத்யபத்தின் உட்பொருள். இது எல்லா உலகங்களையும் எல்லா பூதங்களையும் எல்லா வஸ்துக்களையும் ஒன்றோடொன்று கலந்தழியாதபடி ஆங்காங்கு நிறுத்தி ஒரு வஸ்துவின் இயற்கை மற்றென் றுக்குச் சேராதபடி அதத்ன் தன்மையிலே அதனைக் காக் கிறது. ஆகவே ஸேது. இதனிடம் ஒரு தோஷமு மண்டாது. இதை யடைவதால் குருடனும் கண் பெறு கிருன். அடிபட்டவனும் ஸ்வஸ்தப்படுகிருன். தாப முடையவனும் தாபம் நீங்கி குளிர்ச்சி பெறுகிருன். (எவனும் தாபத்ரயமும் நீங்கி ஸுகப்படுவா னென்றபடி.) கிடைத்த பிறகு இதற்கு அழிவு கிடையாது. ஒரு பகலாய் உணர்த்தியே யாம்.

இதைப் பெற ப்ரம்மசர்யம் வேண்டும். ப்ரம்மசர்யத் தாலே ப்ரம்ம லோகத்திலுள்ள, அரமென்றும், புண்யம் என்றும் சொல்லப்படும் இரு சமுத்ரங்களையும், ஐரம்ம தீயம் என்ற தடாகத்தையும், ஸோமஸவந மென்னும் அலச மரத்தையுங் கடந்து, அபராஜிதை யென்னும் ப்ரம்மத்தின் ராஜதானியிலே புகுந்து, ப்ரபுவிமித மென்னும் அவன் எழுந்தருளி யிருக்கும் அழகிய ஸ்தான

த்திலே சென்று ப்ரம்மானுபவம் பெறுகிருன் (பரமபத வர்ணனை இங்குச் செய்திருப்பதை மறவாமற் கொள்க.)

ஹ்ருதயத்தில் எத்தனையோ நாடிகள் இருக்கின்றன. அவற்றிற்கும் ஸூர்ய கிரணங்களுக்கும் ஸம்பந்தமுண்டு. ஹ்ருதயத்திலுள்ள நூற்றொரு நாடிகளில் தலைப்பக்கம் சேர்ந்ததொரு நாடியின் வாயிலாகத் தலையைப் பிளந்து கொண்டு ஸூர்ய கிரணம் வழியாக ஸூர்ய மண்டலம் போய் மனோவேகமாகப் பரமபதம் (வைகுண்டம்) போய்ச் சேர்ந்தால் முன் சொன்ன பலனெல்லாமுண்டு. ஸூர்ய மண்டலம் வழியாகப் போகுமிடம் வைகுண்ட மென்பது ப்ரஸித்தம்).

8. 7-12. இனி இந்தப் பரவித்யைக்கு அங்கமாம் ப்ரஜாபதிவித்யை. ப்ரஜாபதி யென்பவர் தன் பிள்ளைகளான தேவாஸூரர்கள் க்ஷேமப்பட வேண்டு மென ஆவல் கொண்டு கிருபையினால் வாக்ய மொன்றை உலக மெல்லாம் பரவவிட்டார். ஆத்மாவை அதன் எட்டு குணங்களோடு அறிந்தவனுக்கு ஸர்வலோகமும் ஸர்வ ஸூகமும் உண்டு என்பது அவ்வாக்யத்தின் பொருளாகும்.

தேவர்களும் அஸூரர்களும் அதைக் கேட்டு அதன் பொருளை விரிவாக அறிய ஆவல் கொள்ள, அத்தேவா ஸூரர்களில் ப்ரதானரான இந்திரனும் விரோசனனும் ப்ரஜாபதி யினிடமிருந்து அதன் பொருளைக் கற்கச் சென்று 32 வருஷ காலம் ப்ரம்மசர் யத்துடனிருந்தார்கள். ப்ரஜாபதியும் இந்த ஆத்மா கண்ணில் தெரிகிறதென உபதேசித்தார். அப்போது, கண்ணில் நிழல் விழுகிறபடியால் ப்ரதிபிம்பம் தான் ஆத்மா என்று அவர்கள் நினைத்துக் கொண்டு 'கண்ணைவிட கண்ணாடி யிலும் தண்ணீரிலும் நன்றாகத் தெரிகிறதே அது தானே' என்று கேட்டனர். அப்போது, 'மடக்கில் ஜலம் வார்த்து

நன்ருகப் பாருங்கள். நல்ல அலங்காரங்களையும் செய்து கொண்டும் பாருங்கள். ஏதேனும் தெரியாமலிருந்தால் கேளுங்கள்' என்ருர். பார்த்த பிறகு விரோசனன் இது தான் ஆத்மா என்று முடிவு செய்து சென்று அஸுரர் களுக்கு அதனையே உபதேசித்தான். அதனுல் தேஹாத்ம வாதிகளானுர்கள் அஸுரர்கள். இந்திரனுக்கு இதில் திருப்தி பிறக்கவில்லை. ப்ரதிபிம்பம் பிம்பத்தைப் போலா கிறது. பிம்பத்திற்குக் கோலம் செய்யாது குரூபமாக்கினுல் ப்ரதிபிம்பமும் அங்ஙனமாம். இது ஆத்மாவாகுமா' என ஆலோசித்து மறுபடியும் வந்தான். படிப் படியாக ஸ்வப் நாவஸ்த்தையிலுள்ள ஆத்ம ஸ்வரூபம், ஊறக்கத்தி லுள்ள ஆத்ம ஸ்வருபம் இவற்றை உபதேசித்தார், சொப்பனத்தில் பிறரால் கொல்லப்படுவது முண்டாகை யால் கஷ்டமும் உறக்கத்தில் முழு அஜ்ஞானமு மிருப்ப தாலே இந்திரன் திருப்தி யடையவில்லை.

கடைசியாக மொத்தம் 101 வருஷ ப்ரம்மசர்யமான பிறகு, தஹரவித்தையில் எம்பெருமானுக்குச் சொன்ன குணங்களையே எடுத்து, 'இந்த எட்டு குணங்களும் இவ னுக்குண்டு. உடலினின்று கிளம்பி உத்தம புருஷனைச் சேர்ந்து சுயரூபம் பெற்று சுகப்படுகிருன். ஸங்கல்பிக்கிற படி இவனுக்கு எல்லாம் கைகூடும்' என்று ப்ரஜாபதி உபதேசிக்க அதை இந்திரன் பெற்று தேவதைகளுக்கு உபதேசித்தான். இதை அறிந்தவர்கள் இங்ஙனம் பலன் பெறுகிருர்கள்.

(இந்த ப்ரஜாபதிவித்யையினுல் ஜீவாத்ம ஸ்வரூபம் தெளிவாகும். அபஹத பாப்மத்வம் முதலான எட்டு குணங்கள் ஜீவாத்மாவுக்கு இயற்கையாயுள்ளன. இப் படியே ஜ்ஞானனந்த ஸ்வரூபமாயும் பரமாத்மாவுக்கு சேஷமாயிருப்பது இது. ஆக ஆத்மஸ்வரூபத்தை இந்த வித்யையாலே ஜ்ஞான யோக பலத்தாலே உட்

கண்ணுற் கண்டு அதன் பிறகு பக்தி யோகத்திலிருந்து பெறும் பலனே மோக்ஷமாம். அதே இவ்வாத்மாவை அறிந்தவனுக்கு முடிவான பலன் ஆகும்.)

8. 13–14. கீழ்க் கூறினதற்குச சான்ருக மேலே சில மந்த்ரங்களை யோதுகிறது, அவற்றின் பொருளாவது—பக வானைக் கரிய திருமேனி யுடையவனுகவும் சேதநாசேத நாந்தர்யாமியாகவும் இருவகையாக உபாஸிக்கிறேன் (இது ப்ரபத்தி மந்த்ரமுமாம்.) குதிரை மயிரைச் சிலிர்த்து உதறுமா போலே பாபங்களை உதறித் தள்ளி, ராகுவி னின்று விடுபட்ட சந்திரன் போலே சரீரத்தினின்று விடு பட்டு க்ருதார்த்தனுய் அநாதியான ப்ரம்மலோகம் போய்ச் சேருகிறேன். உலகில் நாம ரூபங்களைச் செய்து, தான் அவற்றிற்குட்படாமே ஆகாசமாய்-நிர்மல ப்ரகாசமாய் அழிவற்ற ப்ரம்மமாயிருப்பது ஆத்மா. அந்த ஸர்வ ப்ரஜேச்வரனைப் பெறுகிறேன். இனி ஸத்துவ குணத்தை யழித்து சுக்ல தாதுவை உட்கொள்ளும் யோநியிற் புகு தலைப் பெறேன்; புநர்ஜன்மமில்லை—என்றதாம்.

15. இந்தச் சாந்தோக்யோபநிஷத்திலே ஓதப் பெற்ற வித்யை யெல்லாம் பிரமன் ப்ரஜாபதிக்கும், ப்ரஜாபதி மனுவுக்கும், மனுவானவர் ப்ரஜைகளுக்கு முபதேசிக்க விளங்கி வருமவை. ஆசார்யனது க்ருஹத்திற்குச்சென்று குரு சுச்ரூஷை செய்து வேதத்தை யோதி ஆசார்யனை ஸத்கரித்து ஸமாவர்த்தனம் செய்து இல்லறம் பெற்று பரிசுத்தமான இடத்திலே வஸித்துக் கொண்டு அத்யய நாதிகளை யநுஷ்டிப்பவனுய்த் தன்னைச்சேர்ந்தவர்களையும் தார்மிகராகச் செய்து கொண்டு, ஆத்மாவினிடம் இந்திரி யங்களைச் செலுத்தி வைதிக தர்மங்களை மட்டும் செய்து கொண்டு வேறு ஒரு ப்ராணியையும் ஹிம்ஸிக்காமல் இங் ஙனமே ஆயுள் காலம் வரையில் கீழ்க் கூறிய வித்யை யொன்றிலிருந்து நடத்தி வருகிறவன் ப்ரம்மலோகம்

பெறுகிறான்; திரும்ப இந்த ஸம்ஸாரத்திற் புகுந்து தவிப்பதில்லை யென்றது.

எனது அங்கங்களும் ஆங்காங்குள்ள இந்திரியங்களும் புஷ்டி பெற்று விளங்கட்டும். ப்ரப்மத்தை யறிவது உபநிஷத்துக்களைக் கொண்டு. அந்த ப்ரம்மத்தை நான் நிராகரிக்காமல் ஆதரிக்கக்கடவேன். அதுவு மென்னை நிராகரிக்காமல் ஆதரிக்க வேண்டும். இங்ஙனம் ஆத்ம விஷயத்தில் ஈடுபட்டுள்ள எனக்கு உபநிஷத்திற்சொன்ன தர்மங்களெல்லாம் ஸித்திக்க வேண்டும் என்று சாந்தி பாடமும் ஓதப் பெற்றது.

இப்படிச் சாந்தோக்யோபநிஷத்தின் ஸாரமாம். பாஷ்யத்திலும், பரிஷ்காரத்திலுமுள்ள விசேஷங்களை விரும்புமவர் அங்கே கண்டுகொள்க.

சாந்தோக்ய உபநிஷத்தின் சாரம் முற்றிற்று

---

## 10. ப்ருஹதாரண்யகம்

இது ஒன்பதுக்கு மேலான உபநிஷத்து. வேதத்தில் கடைப்பாகம் ஆரண்யக மெனப்படுவதால் எல்லா வுபநிஷத்துக்களுமே ஆரண்யகங்களாம். அவற்றில் இது சிறந்த பொருள்களைக் கூறுவதால் பெருமை பெற்றிருப்பதுபோல், உருவிலும் பெரிதாயிருப்பதாலே ப்ருஹதாரண்யக மெனப்படுகிறது. இது சுக்ல யஜுர் வேதத்தைச் சார்ந்த சதபத ப்ராம்மணத்தின் கடைப் பாகம். இதில் காண்வம், மாத்தியந்திநம் என இரண்டு கிளைகள் உண்டு. இந்த ப்ராஹ்மணம்—காண்வ சாகையிலும் மாத்யந்திந சாகையிலு முள்ளது. மதத்ரய பாஷ்யங்களும் வடதிசையிற் ப்ரசாரத்திலுள்ள காண்வ பாடத்திற்கேற்பட்டவை. இதில் அத்யாயங்கள் எட்டு. முதலிரண்டு அத்யாயங்கள் ஜ்ஞானத்தைப் பற்றினவையாகாமே

ப்ரவர்க்ய மெனப்படு மொன்றை (ஸோம யாகத்தைச் சேர்ந்ததோர் அங்கத்தை) உரைக்க வந்தவையானது பற்றி அவற்றை விட்டு மேல் ஆறு அத்யாயங்களுக்கே பாஷ்யமியற்றியுள்ளனர். ஒவ்வொரு அத்யாயத்தின் உட்பிரிவுகளுக்கு ப்ராம்மணமெனப் பெயராம். ஒவ்வொன்றிலும் பல ப்ராம்மணங்கள் உள. அவற்றின் பொருள் பின்வருமாறு சுருக்கப்படும்.

கீழ் கர்மகாண்டத்திலே கூறப்பட்ட ஆசரணைகளில் ஆழ்ந்துள்ளவர்களுக்கு அவற்றைச் சிறப்பிக்கவே சில வற்றைக் கூறுவதுபோற் பிறந்து அவர்களை யிழுத்து ப்ரம்ம ஞானத்தில் நிற்கவைப்பதென்பது ஆரண்யகங்கள் கையாண்ட வழியாம். கர்ம காண்டத்தில் கூறப் பெற்ற யாகங்களை ப்ராணிகளைக் கொண்டும் செய்வதுண்டு. அப் பிராணிகளில் மாடும் குதிரையும் சிறந்தன. விரைவு, பெலன், வீர்யம் முதலானவற்றைச் சிறப்பாகப் பெற்றது குதிரையாம். அச்வமேதத்திற்கு முக்கிய தேவதை உலக மெல்லாம் படைக்கும் ப்ரஜாபதியாவர். ஆகவே அவ்வா சரணைகளில் மிகச் சிறந்ததான அச்வமேதமென்னும் யாகத்திற்கும் இங்கே கூறப்படும் ஜ்ஞானத்தோடு சேர்ந் தால்தான் இடையூறின்றி எளிதில் பலனளிக்கும் பெருமை யுண்டெனத் தெளிவிக்கக் கருதி ஒருவகையான ஜ்ஞானத்தை யுபதேசிக்கின்றது முதலில். கொடுக்கும் மன்னனைக் குபேரனாகக் கூறி வர்ணித்தால் கொடை மிகும். அதன்படியே சிறிய வஸ்துவைப் பெரிய வஸ்து வாகச் சிறப்பித்தால் அதற்கு பயன் அதிகமாம் ஆகவே முதல் ப்ராம்மணமானது—

(3.)

3 1.தொடங்கின பிறகு ஒரு வருஷம் கழித்துச்செய்ய வேண்டும் அச்வமேத யாகத்திற்காகவுள்ள அச்வத்தின்,

அதாவது குதிரையின் தலை, கண், பிராணன் முதலான அங்கங்களை விடியற்காலம் ஸூர்யன், வாயு என்றாற் போலுள்ள வஸ்துக்களாகப் பாவிக்க வேண்டுமென்றும், அச்வத்தின் அங்கங்கள் தவிர மற்றும் அதைச் சேர்ந்த சில வஸ்துக்களை, அதாவது அதற்கு முன்னும் பின்னும் வைக்கப்பெற்ற ஸோமரஸ பாத்ரங்கள் (க்ரஹங்கள்) போன்றவைகளையும் ஸம்வத்ஸரத்தில் அடங்கிய அஹோ ராத்ரங்கள் போன்றவைகளாகப் பாவிக்க வேண்டு மென்றும் கூறுகின்றது. யாகம் செய்பவன் இந்தப் பாவனை களையும் தெளிந்து செய்தானாகில் பலன் சிறப்புடன் சீக்கி ரம் பெறலாம். இவ்வகைப் பாவனையை விதிக்கும் வாக் யத்தையே த்ருஷ்டி விதி யென்பர். ஒன்றை மற்றொன் றாகப் பார்ப்பதே த்ருஷ்டியென இங்கே கருதப்பட்டுள்ளது.

3. 2. கீழ்ச் சொன்ன அச்வமென்ற பிராணியைக் கொண்டு நடத்தப்படும் அச்வமேதம் என்ற யாகத்திலும் அதற்கு அங்கமான அக்னியிலும் ஒருவகையான ப்ரம்ம த்ருஷ்டியைக் கூறுவது 2-வது ப்ராம்மணம். இதன் பொருள் பின்வருமாறு—

உண்ண வாசை கொண்டும், உலகத்தை யழித்து அதன் அழிவுக் கிடமான மூலவஸ்துவாகியு மிருக்கும் ம்ருத்யு என்ற பரமாத்ம வஸ்துவானது உருவெடுக்கவும் அதனால் தன்னைத் தானே உலப்பித்துக் கொள்ளவும் நினைத்தது. அப்போது ஜலம் உண்டாயிற்று. இப்படித் தன்னை உவப்பிக்க ஜலத்தை உண்டு பண்ணதாலே அர்க்க மென்ற பெயரைப் பெற்றது. (அர்ச்சனையால் உவப்பைப் பெறுவது. அர்க்கம்—அர்ச்சித்தவனுக்கு கம்—ஸுகமென்க.) இந்த ஜலத்தின் ஸாரமாகப் பிறகு பூமி யுண்டாயிற்று. அதில் தளர்ச்சி யுற்றுத் தவங்கி ஆலோ

சித்திருந்தபோது ஒருவகை அக்னி வெளிக்கிளம்பியது பூமியில் இங்ஙனம் அக்னியாயிருப்பதே ஆகாயத்தில் வாயுவாகவும், மேலுலகில் ஆதித்யனாகவு மிருக்கிறதென அறியவேண்டும். (ஹோமம் செய்வதற்கான வைதிகாக்நிக்கு ஆதாரமாக வேதத்திற் கூறப்பட்டபடியிலே செங்கல்களை யளவிட்டுச் செய்து கருடனுருவைப் போலே யமைக்கப்படுமோர் இடத்தைச் சயனமென்பர் இதுவே 'சித்யாக்நி' அக்னிக்கு ஆதாரமாயிருக்குமிச் சித்யாக்னியின் அங்க பாகங்களை நான்கு திக்குகளாகவும் மூன்று லோகங்களாகவும் பாவித்து இவ்வக்னியைக் கீழ்ச் சொன்ன படியிலே ஜலத்தில் ப்ரதிஷ்டை யுள்ளதாகவும் நினைத்தல் வேண்டும்.

இங்ஙனம் அக்னியென்ற உருவைப் பெற்ற பரமாத்வா ஸம்வத்ஸரமென இரண்டாம் உருவையும் உண்டாக்கியது. (ஸம்வத்ஸரமாவது ஸம்வத்ஸரத்திற்கு அபிமானியாய் பல ஸம்வத்ஸர காலம் உயிருடன் இருக்கப் பிராணிகளைப் பிறப்பிக்கும் பிரமனேயாம்) பிறந்த ஸம்வத்ஸரத்தை யுண்ண வாயைத் திறந்தபோது அது பாண் என வொலித்தது. (அஞ்சி அழுமதனைப் பார்த்து) இதனை யிப்போது உண்போமாகில் நமக்கு அன்னம் போதாதென்று அந்த ஸம்வத்ஸரத்தைக் கொண்டே சொற்களும் பொருள்களுமான (வேத வேதார்த்தங்களான) உலகினைப் படைத்தது. அந்த ஸம்வத்ஸர தேவதையும் தன்னை யருளின பிரானுக்குப் பெரியதோர் ஆராதநம் செய்யக் கருதி என் செய்வதென்ற ஆலோசனையி லாழ்ந்த போது, அதற்குப் பிராணனே வெளிப்போகும்படியும், உடல் ஊதும்படியுமாயிற்று. ஆயினும் அது அவ்வுடலிலேயே நின்ற மனத்துடன் ஊதின. தன் உடலையே யாகத்திற்குத் தக்கவாறு அச்வமென்ற பிராணியாக்கியது.

உடலூதியதெனப் பொருள்படும் அச்வமென்னும் பதம் குதிரைக்கு வழங்கப்படுவது இதனுற் போலும்.

இப்படிப்பட்ட (அச்வத்தைக் கொண்டு ஒரு ஸம்வத்ஸர காலத்திற் செய்யப்படும்) அச்வமேதத்தை உத்தராயண தக்ஷிணாயந கதிகளைப் பெற்று ஸம்வத்ஸர ஸ்வரூபியாய் விளங்கும் சூர்யனாகவும், முன் சொன்னபடியிலே உலகவுருவா யமைந்த அச்சித்யாக்னியை உலகஸ்வரூபியான அர்க்கனென்ற பரமாத்மாவாகவும் பாவித்து, அந்த ஸூர்ய னென்பவனும் அர்க்கனென்பவனும் ம்ருத்யுவென்று மூலகாரணமாய் முதலில் மொழியப் பெற்ற தேவதையே யெனவும் அறியவேண்டும். இங்ஙன முபாஸிப்பவன் ம்ருத்யுவை ஜெயிக்கப் பரமாத்மாவை யறிவான்.

3. 3. ப்ரம்மஜ்ஞானம் பிறப்பதற்குத் தடையாம் பாபங்களைப் போக்க மற்றோர் உபாயம் உபதேசிக்கப்படுகிறது—

'தேவர்களும் அஸுரர்களும் மூவுலகும் ஆளப் போட்டியிட்டனர். யாகத்திலே உத்கீதத்தை (ஸாமகானத்தைச்) செய்துவரும் உத்காதாவைக் கொண்டு உடன்பிறந்த த்வேஷிகளை ஒழிக்கப் பார்த்தனர் தேவர். ஆகவே வாக் என்னும் இந்திரியத்தை உத்காதரவாக இருக்கக் கேட்டுக்கொண்டனர். அதுவும் அங்ஙனமேயிருந்து தன்னுலாகக் கூடுமதைத் தேவர்களுக்குச் செய்து தானும் சுலபமான பேச்சுப் பேசும் திறமையைத் தனக்கு வேண்டிக்கொண்டு கானத்திலிழிந்தது. ஆனால் அஸுரர்கள் அதனைத் தடுத்துவிட்டனர். இவ்வண்ணமே மற்ற இந்திரியங்களும் அசுரர்களால் பரிபவப்படுத்தப் பட்டு உத்காதாவாகக் கூடாதபோது தேவர்கள் ப்ராண வாயுவை ப்ரார்த்தித்தனர். அசுரர்கள் அதையும் பரிபவப்படுத்த முயன்று பாறையி லடிபட்ட மண்கட்டிபோல்

தர்ங்களே பொடிபட்டொழிந்தனர். ப்ராணனும் மற்ற இந்திரியங்களிடம் அசுரர்களிட்ட பாபங்களையும் அப்புறப்படுத்தித் திக்குக்களின் கோடியில் தேசாந்தரங்களிலெறிந்தது. ஆகவே பிற தேசங்களில் பிறப்பதும் இறப்பதும் நேரிடாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். பாபங்கள் விலகினதாலே இந்திரிய தேவதைகளெல்லாம் தங்கள் தொழிலை நன்முறையில் நடத்த வியன்றனர். ப்ராணனும் அசுரரை யழித்துத் தேவர்களுக்கு அனுகூலமானதோடு உத்காதாவாக இருந்து தனக்கும் அன்னம் முதலியன உண்பதைப் பலனாகக் கொண்டது. ப்ராணன் புசிக்கும் உணவிலேயே மற்ற இந்திரியங்களும் பாகம் பெற்றன. ஆகவே பிராணனின் பெருமையை யறிந்து, யாகம் செய்கின்றவர் உத்காதாவை இப்படிப்பட்ட ப்ராணனாகப் பாவித்தால், விரோதிகளான பாபங்கள் விலகிவிட, தம்மைச் சார்ந்தா ரெல்லோரும் தம்மால் பரிக்கப்பட்டு வாழும்படி விளங்குவர்.'

இங்ஙனம் கூறி இந்த ப்ராம்மணம் மேலே, பல ரிஷிகளின் பேர் போன்றவற்றைப் பிராணனுக்குப் பெயராக வைத்து அப்பெயர்களுக்கு வேறு பொருள் உரைத்து, இதுவே எல்லாவுடலிலும் அததற்குத் தக்கபடி ஸமமாயிருப்பதாலே 'ஸாம' என்னப்படுமென்றும், இந்த ஸாம ப்ராணனைச் சிற்சில வகையிலறிந்தார்க்குச் சில பலன்களுளவென்றும் பணித்து, பிறகு ஸாமகாந ப்ரஸ்தாவ காலத்திலே யஜமானன் கானம் செய்கிறவனைப் பார்த்து, 'என்னை அஸத்திலிருந்து ஸத்துக்கு, இருளிலிருந்து ஒளியிடத்திற்கு, ம்ருத்யுவினின்று அழியா நிலைக்கு அனுப்ப வேண்டும்' என்று வேண்டிக்கொள்ள வேண்டுமென்றும் அதனால் மோக்ஷம் பெறுவிக்கு மறிவுக்கு இடையூறுகளவை யெல்லாம் விலக யஜமானன் பலனைப் பெறுவானென்றும் கூறிற்று.

இதற்கு மேல் இவ்வுபநிஷத்தானது பரமாத்மாவையே நேரிட நிரூபிக்கும்.

3. 4. **புருஷாத்மவித்யை.** முதன் முதல் ஆத்மா ஒன்றே புருஷரூபமா யிருந்தது. அப்போது ஜீவஸமஷ்டியான உருவத்தோடிருந்த அது, 'நான் தான் இருக்கிறேன்' என்று பார்த்துக் கொண்டது. ஒவ்வொருவனும் உலகினில் தன்னை சுட்டிக் காட்டும்போது 'நான்' என்று கூறுதல் இங்ஙனமே யென்க. பரமாத்மா அப்போது தன்னை நான் என்றதற்கு, 'நான் நானெனப்படும் ஜீவர்களின் ஸமஷ்டியான பிரமனுனே' னெனக் கருத்தாம். இவ்வாத்மாவுக்குப் புருஷனென்ற பெயர் உளது. இது எல்லாவற்றிற்கும் முன்னமே இருப்பதாலும், எல்லாப் பாபங்களையும் எரித்து விடுவதாலுமாம். அது தானொருவனே தனியே யிருப்பதைக் கண்டு முதலில் அஞ்சிற்று, பிறகு, இரண்டாவதொன்றிருந்தால் தானே அதன் மூலமேதேனும் தீங்குண்டாமென்று பயப்பட நேரிடும். அதில்லாதபோது ஏன் பயமென்றுராய்ந்தது. பயமும் விலகிற்று. ஆனாலும் தனிமையினால் ஸுகம் பெருமல் இரண்டாவதொன்றை விரும்பி ஸ்திரீயும் புருஷனும் சேர்ந்தவோர் உருவமாகி ஸ்திரீ வேறு புருஷன் வேருகப் பிரித்துக் கொண்டது. ஆகவே புருஷனுக்கு ஸ்திரீயை ஒரு பாதியாக உலகம் வழங்குகின்றது. இருவரும் புணரும்போது, 'தானே பிறப்பித்த ஸ்திரீயோடு தானே புணர்வது தகுமோ, என்று அஞ்சி ஸ்திரீயானவள் பசுவாகமாறினாள். இங்ஙனம் ஒவ்வொரு ஸ்திரீப்ராணியாகவும் புருஷப்ராணியாகவும் மாறி எறும்பு வரையிலான எல்லாப்ராணிகளையும் ஸ்ருஷ்டி செய்து, விட்டு, விஸ்ருஷ்டி செய்ய நினைத்து தன் முகத்தினின்றும் உள்ளங்கைகளினின்றும் அக்னியைப் படைத்து (அக்னியைப் படைத்தவிட மாகையாலே முகமு முள்ளங்கையும் மயிரின்றியுள.) அதைப் போன்ற

மற்ற தேவர்களையும் ஸ்ருஷ்டித்து, இப்படி ஸ்ருஷ்டி விஸ்ருஷ்டி என்ற இவைகளுக்கு மேலா (ஸநக ஸநந்த நாதிகளைப் போன்ற விரக்தசிகாமணிகள் ஸ்ருஷ்டியான அதிஸ்ருஷ்டியையும் செய்தது அவ்வாத்மா.

(இனி இந்த ஆத்மாவானது படைக்கப்பட்ட பிரபஞ் சத்தைக் காட்டிலும் வேரு அல்லது ஒன்ரு என எழும் ஐயத்தை யகற்றும்—) இவ் ஆத்மா முதலில் நாமரூபங் களைப் பெருத மூலவஸ்துவாயிருந்து நாமரூபங்களையும் பிறகு பெற்றது. இது உலகில் ஜீவாத்மா நாமரூபங் களைப் பெறுவது போன்றதாகும். கத்தியானது உறை யினுற புகுந்திருப்பது போலும், அக்னியானது அரணிக் கட்டையில் புகுந்திருப்பதுபோலும் இவ்வாத்மா உடலில் நகநுனி வரையிலாக உட்புகுந்திருக்கிறது. இதை யறி யாதவன் அபூர்ணனுவான். இவ்வாத்மாவே இவ்வண் ணம் ப்ராணன் வாக்கு, கண், காது, மனது எனப்படு கிறது. நாமரூபங்களைப் பெற்று இதுவே யன்ரூே அந்தந்த வஸ்துவாகி அந்தந்த வேலையைச் செய்கின்றது.

இப்படி ஒவ்வொன்றிலும் ஆத்மா உட்புகுந்திருக்க இதையறியாது உறை போன்ற வெளி வஸ்துவை மட்டு முணர்ந்திருக்கலாமோ? ஆக எங்கும் உட்புகுந்த ஆன் மாவை நாம் உபாஸிக்க வேண்டும். அடையப்பட வேண்டியதும் இவ்வாத்மாவே. இதனைக் கொண்டே எல்லாவற்றையு மறியவேண்டும். இதுதான், புத்திரன், பணமென்ருற் போலுள்ள எல்லாவற்றிற்கும் மேம்பட ப்ரியமானது. இதனை யுபாஸிக்கும் முறையை இனி யுணர்த்துவோம்—

பரப்ரம்மமானது, நான் ப்ரம்மமெனத் தன்னைப் பாவித்துத் தானே ஸர்வமாகி ஸர்வாநுபவம் செய்து வரு கிறது. தேவதைகளும், ரிஷிகளும், மற்றும் மனிதரும்.

இங்ஙனம் உபாஸித்து இப்பலனைப் பெற்று வருகிறுர்கள். இவ் வுபாஸனத்திலிருந்து வாமதேவரென்பவர் தம்மை மனு முதலிய ஸர்வரூபியாக நினைத்தார். ஆகவே நாமும், (தாமாக நாமரூப மெடுத்ததும் இது ஆத்மா என்ற பரப்பரம்மமே யென்பதை நன்குணர்ந்து) நானும் ப்ரம்ம மாகிறேனென்று உபாஸிப்போமாகில் ஸர்வரூபியான அவ்வாத்மாவைப் பூரணமாக அனுபவிக்கலாம். 'நான் ப்ரம்மம்' என்ற உபாஸநத்தை நல்லறிவுடன் செய்ய வேண்டும். நானென்று தன்னை கிரஹிக்கும்போது பர மாத்மாவையும், சேர்த்து க்ரஹித்தல் வேண்டும். இவ் வாத்மோபாஸநம் செய்பவனுக்கு ப்ரதிகூலம் செய்யத் தேவர்களும் வல்லவரல்லர். அவர்களுக்கும் இதுதானே ஆம்மா.

இவ்வண்ணம், 'நான் ப்ரம்மம்' என்று சேர்த்து உபாஸியாமே தனக்கு ஆத்மாவான ப்ரம்மத்தை ஆத்மா வன்றென நினைப்பவன் ப்ரம்மத்தை யுள்ளபடி யறியாத வனுய், தேவர்களுக்குத் தாஸனுய் அவர்களுக்கு மாடு போல் உழைப்பவனுகிருன். ஒரு மனிதனுக்குப் பல மாடுகள் உழைப்பதை உலகில் கண்டுளோம். தேவர் களுக்கு அடிமையாகிறவன் ஒவ்வொருவனும் ஒவ்வொரு தேவதைக்கும் பல மாடுகள் உழைப்பதுபோல் உழைக்க வேண்டி யிருக்கிறதைத் திண்ண முணர்க, ஒரு மாடு ஒழிந்தால் கூட வருத்தப்படுவதாயிருக்கப் பல மாடுகளுக் குப் பதிலாயிருக்கு மொருவனொழிந்தால் கூட தேவர் களுக்கு உண்டாகும் வருத்தத்தை யளவிட முடியுமோ? ஆகவே மனிதர்க்கு ஆத்மஜ்ஞானம் பிறப்பது அவர் களுக்கு ப்ரியமாகிறதில்லை.

தேவலோகத்திலும் ப்ராம்மணன் க்ஷத்ரியன் வைச் யன் சூத்ரன் என்ற பிரிவுண்டு. இந்திரன், வருணன்,

சந்திரன், ருத்ரன், பர்ஜந்யன், யமன், ம்ருத்யு, ஈசாநன் என்றவரை அங்கே க்ஷத்ரியர்களாக ப்ரம்மம் ஸ்ருஷ்டித்திருக்கிறது. வஸு-ருத்ர—ஆதித்ய-விச்வ தேவ-மருத் கணங்கள் வைச்யராவர். பூஷ தேவதை சூத்ர ஜாதி. பூஷ தேவதையாவது பூமி யென்னப்படுமதே. பிராம்மணனைவிட க்ஷத்ரியனுக்கு ஒரு விதத்தில் மேன்மையுண்டு. ஆகவே ராஜஸூயத்திலே. அபிஷேகம் செய்யப்பெற்ற க்ஷத்ரியனுக்குக் கீழே யுட்கார்ந்து பிராம்மணர் அவனை கௌரவிக்கின்றனர். ஆகிலும் ப்ராம்மணனே க்ஷத்ரியனுக்ருப் பலவிதத்திலும் மேம்பட்டவனுகையால் அரசன் தனக்கு மூலமான ப்ராம்மண வர்ணத்தைத் தானே அழித்தால் நாடு கெடுமாகையாலே மிகவும் பாபியாவான். இப்படிப்பட்ட க்ஷத்ரிய ஜாதிக்கும் க்ஷத்ரமாய் அதற்கு நேரிடும் கேட்டைப் போக்கி அதைக் காக்குமது தர்மமாகும். தர்மத்திற்கு மேம்பட்டதொன்று கிடையாது. துர்பலனும் பலிஷ்டனை ஜெயிப்பது தர்மத்தினுலேயாம். தர்மமாவது ஸத்யம் போன்றதாம். ஆக யாருக்கும் தர்மமென்பது அரிது.

இப்படிப்பட்ட ப்ரம்மமானது அறியப்பட்டாலல்லது நம்மைக் காக்காது. ஓதாதபோது வேதம் எங்ஙனமே உதவும்? அனுஷ்டியாத கர்மத்தின் பலனை யடையக் கூடுமோ? அது போலென்க. ப்ரம்மத்தை அறியாதவன் மாபெரும் தர்மத்தைச் செய்தாலும் அதன் பலன் அழிவுறும். ஆத்மாவை யுபாஸிப்பவனுல் அபேக்ஷிப்பதெதுவும் பெறப்படும். அவனுக்கு ஆத்மாவே மிகவும் யோக்யமான பலனுகிறது.

உதாரணமாக ஜீவாத்மாவைப் பாருங்கள் - நன்னெறியிலுள்ள ஜீவன் யாகஹோமாதிகளை செய்வதாலே தேவர்களுக்கும், வேத மோதுவதாலே ரிஷிகளுக்கும், ச்ராத்த

தர்பணுதிகளாலும் ப்ரஜைகளைப் பெறுவதாலும் பித்ருக்களுக்கும், இருக்க இடமும் உண்ண உணவு மிடுவதாலே மனிதர்களுக்கும், புல்லும் தண்ணீரும் தருவதாலே பசுக்களுக்கும், பலிகளையளிப்பதாலே பக்ஷிகள், நாய், எறும்பு போன்ற பல பிராணிகளுக்கும் எவ்வளவு ப்ரியனுகிருன்? ஸர்வ காரணமாய் ஸர்வ பலனையும் அளிக்கும் பரமாத்மா ஸர்வர்க்கும் மிகவும் ப்ரியனுய் மிகவும் யோக்யனுவதில் இனி ஐயத்திற்கு இடமேது?

அவனை யங்ஙன மனுபவிப்பதற்கு நமக்குச் சில கருவிகள் வேண்டும். ஒருவன் பூர்ணனுவ தென்பது மனைவி, புதல்வன், பணம், நற்செய்கை என்ற நான்கும் பொருந்தினபோதே யுண்டாம். பரமாத்மா கூட ஸ்ருஷ்டியின் துவக்கத்திலே இதையெல்லாம் விரும்பினது. ஆகவே விரக்தனுக்கும் மனைவி முதலான நான்கும் வேண்டும். அவனுக்கு அவை யெவையென்னில்—அவனுடைய மனத்தை அவனுகவே நினையுங்கள். அதற்கு வாக்கு மனைவி; ப்ராணன் புதல்வன்; கண்ணும் காதும் ஐஹிகாமுஷ்மிகமான பணமாம். அவன் உடலே நற்செய்கைகள் விளையும் நிலமாகும். இவைகளோடு இந்த ஜீவன் பூர்ணனுயிருந்து இவற்றைக் கொண்டு அவ்வாத்மாவை உபாஸித்தல் வேண்டும். அதனுல் எல்லாம் பெறப்படும்.

3. 5. அனைவர்க்கும் தந்தையா யிருப்பவன் ஆலோசனை செய்து ஏழுவகையான அன்னங்களை ஏற்படுத்தினுன். அவற்றில் ஒன்றை எல்லோர்க்கும் பொதுவாக்கினுன். தேவர்களுக்கென்று இரண்டை வகுத்து வைத்தான். ஒன்றைப் பசு ஜாதிக்கும் அளித்தான். இது ஜங்கமம் ஸ்தாவர மென்ற எல்லாவற்றிற்கு மாவதொன்று. மூன்றைத் தனக்காக வைத்துக்கொண்டான். இவ்வன்

னங்களெல்லாம் அழியாம லெப்பொழுது மிருக்கின் றனவே, அதற்குக் காரணம் யாதென்பது தெரிந்ததா? அதை யறிந்தவனுக்கு இங்கும் அன்னமுண்டு, தேவதா ஸாயுஜ்யமு முண்டு, பரமான்னமான பரமாத்மாவைப் பெற்றுண்பதும் உண்டாம்.

அவ்வன்னங்களில்—, எல்லோருக்கும் பொதுவான அன்னமாவது நாம் தினந்தோறு முண்பதே இது எல் லார்க்கும் பொதுவானதாலே வானத்தோர். விருந்தினர் போன்ருேர்க்கு முன்னமளித்தே யுண்ண வேண்டும். இல்லையேல் பாபமே பெறுவதாம். தேவதைகளுக்கென ஏற்பட்ட அன்னங்களாவன — வேதத்திலும் ஸ்ம்ருதியி லும் அவர்களுக்காக விதிக்கப்பட்ட தர்சபூர்ணமாஸங் கள் போன்ற கர்மங்களைச் சார்ந்தவை. நித்ய கர்மங் களேயவற்றில் நிபுணர்களால் ஆதரிக்கப்படு மவையாம். பசு ஜாதிக்கும் அமைக்கப்பெற்ற அன்னமாவது பால் சிறு குழந்தையும், கன்றுங்கூட முதன் முதல் பாலையே அருந் தும். (ஸ்தாவரங்களுக்குப் பாலுக்குப் பதிலாக நீரே யுள்ளது. அவற்றிற்கு அதே பாலாம்) இவை யழியா மைக்குக் காரணமானது—இவற்றைப் படைக்கும் பர மாத்மா என்று மழியாத மஹா புருஷனுயிருப்பதேயாம். அவனை—யிங்ஙன முபாஸிப்பார்க்கு முன் சொன்ன பல னுண்டு.

அவன் தனக்காக வைத்துக்கொண்ட மூன்று யாவை யென்னில்—மனம், வாக்கு, ப்ராணன் என்பவையே. எல்லா இந்திரியங்களிலும் மனதே முக்கியமானதும் மனது வேறிடத்திற் சென்றிருந்தால், கண்ணிற்பட்டது கூட காணப்பெருது. செவியிற்பட்டது கூட கேட்கப்பட்டதாகிற தில்லை. விரும்புவது, ஸங்கல்பிப்பது ஐயப்படுவது, நம்பு வது, அவநம்பிக்கை யுறுவது, தைர்யம், அதைர்யம்,

வெட்கம், அறிவு, பயமென்றூற் போலுள்ளவை யெல்லா மாவது மனதே. பின் பக்கத்திலுள்ளதை முன் பக்கத்தி லுள்ள கண்ணூற் பார்க்க முடியுமோ? மனத்திறுலெதையு மறியலாம். இங்ஙனமே வாக்கென்ற இந்திரியமும் ப்ரதான மானது. வைதீகமோ, லௌகீகமோ, எல்லாச் சொற்களும் வாக்கினுலே சொல்லப்படும். ஆக அதின் சக்தி அளவிடக் கூடாததாம். மூன்ருவது ப்ராணன். இது ப்ராண—அபாந—வ்யாந – உதாந – ஸமாநங்களாகப் பல பிரிவாக இருக் கின்றது. இம்மூன்று அன்னங்களாலே ஆத்மா தன்னிலை யைப் பெறுகின்றது. இவற்றை மூன்று லோகங்களாகவும் மூன்று வேதங்களாகவும் மற்றும் மூன்ருயுள்ள பல வுயர்ந்த வஸ்துக்களாகவும் பாவித்தல் வேண்டும். 'இவற் றிற்கு ஆதாரங்கள் எவை, இவற்வை ஏவும் தேவதைகள் யாவை' என்பதையு மறியவேண்டும். இவை அனந்தங் களென உபாஸிப்பார்க்குப் பலனும் அனந்தமாம்.

இவற்றில் ப்ராணனுக்குத் தேவதையாவான் சந்தி ரன். அவனுக்குக் கலைகள் பதினூறு. பதினைந்து கலைகள் பிரதி தினம் ஒவ்வொன்ருக அழிவுறும்; பதினூருவது கலை யழிவற்றது. அமாவாஸ்யை யன்றைத்தினம் அவன் அந்தக் கலையைக் கொண்டு அனைத்து ப்ராணிகளுக்கு முட்புகுந்திருப்பான். ஆகவே அன்றையதினம் ஓணூனைப் போன்ற உபயோகமற்ற ப்ராணியைக் கூட உயிர ழிக்கலாகாது. இந்தச் சந்திரனைப் போலவே ஒவ்வொரு புருஷனும் பதினூறு கலைக்களுக்குள்ளவனுவான். தானே ஒரு கலை. அது அழிவற்றது. அழிவுறும் கலைகளவனுக் குப் பதினைந்து, அதாவது சொத்து. புருஷனெனப்படும் சரீரத்தைச் சக்கரத்தின் நடுவிலுள்ள குடமாக நினையுங் கள். அதில் புகுத்தப்படும் இலைகளும் அவற்றிலே பதிந்த வட்டங்களும் போலவாம் அவனவன் ஸம்பாதிக்கும் சொத்து. அது அழிந்தாலும் உடல் இருக்குமாகையால்

சந்திரனுக்குப் பதினைந்து கலைகள் மீண்டு முண்டாவது போல் சொத்துச் சேர்ந்து புருஷன் பூர்ணனாவான்.

இப்படி யுள்ள புருஷன் பெறவேண்டும் லோகங்கள் மூன்றும். மனுஷ்யலோகம், பிதுருலோகம்; தேவலோகம் என்பவை அவை. காம்யகர்மங்களைச் செய்தால் பிதுரு லோகமுண்டு. ஸ்வர்காதி போகங்களை யங்கே பெறலாம். வித்யை (அதாவது பக்தியோகம்) செய்பவன் தேவலோக மெனப்படும் ஸ்தானத்திற்கு (தேவயாந மெனப்படும் அர்ச்சிராதி மார்க்கத்தாலே) செல்வான். மனுஷ்ய லோகத்தைப் பெறுதற்கு, தான் சரீரத்துடன் இருப்ப தோடு நிற்காமல் புத்ரனையும் பெறுதல் வேண்டும். தான் மரணமடைவதற்கு முன்னே புத்திரனை யழைத்து. "வேதம், யஜ்ஞம். லோகமெல்லாம் நீ" என்று அவனி டம் ஒப்படைக்க வேண்டும். அவனும் அதனை யொப் புக்கொண்டு, நான் வேதமும், யஜ்ஞமும், லோகமு மாகிறேனெனல் வேண்டும். அதன் கருத்தென்ன வெனில். 'நான் செய்யவேண்டும் வேதாத்யயநத்தையும் வேள்வியையும் நீயே செய்து எனக்கு மேன்மேல் லோகத்தை ஸம்பாதிப்பவனாக வேண்டுமென்று தந்தை கேட்பதும், பிள்ளை யிசைவதுமாம். இப்படிப்பட்ட பிதா போன பிறகும் பிள்ளையினிடம் ப்ரவேசித்து அவன் மூலம் தான் செய்தவற்றில் நேரிட்ட குறைகளை நீக்கிக் கொள்ளுகிறான். இங்ஙனம் பிதாவைக் காப்பதாலே புத் திரனைப் புத்ரன் என்கிறது. இவ்வண்ணம் புத்ரன் வாயி லாக இவ்வுலகில் நிலை பெற்ற பிதாவானவன் முன் சொன்ன வாக்கு, மனம், ப்ராணன் என்றவைகளை வானு லகில் தெய்வீகங்களாகப் பெற்று விளங்குகிறான். இந்த ப்ராணன் முதலானவற்றின் நிலையை யறிந்தவன் அவற்றின் தேவதைகளைப் போல அனைவர்க்கும் கௌர விக்கத்தக்கவனாய், பாபத்திற்கிடமாகாதவனாயு மிருப் பான்.

இவற்றில் பிராணன் மிக்க மேன்மை யுடையது. வாக்கு முதலானவைகள் பேசுவது முதலான தங்கள் வேலைகளைச் செய்த வண்ணமே யிருக்க நினைத்தன. அவர்களை ம்ருத்யு ப்ரவேசித்து ஓய்வெடுத்துக் கொள்ளும் படி செய்துவிட்டது. ஆகவே அவை ஓய்வின்றி வேலை செய்யத் திறமற்றவையாயின. பிராணன் இராப்பக லெப்போதும் ஓயாமலுழைத்தும் சளைக்காமலே யிருக் கின்றது பற்றி இதற்கு அவை யெல்லாம் அதீனமாய் நின்று ப்ராணன் பெயரையே தாங்களு மிட்டுக்கொண் டன. குலத்திற்குப் பெரியோனு யிருப்பவனின் பெயரைக் கொண்டு குலத்தை வழங்குவதுபேல், பிராணன்கள் என்று பிராணன் பெயரை யிட்டே இந்திரியங்களும் அதனுல் சொல்லப்படுகின்றன.

இங்ஙனம் உடலினுள் ப்ராணனுக்கேற்றம் பணிக்கப் பெற்றது. இவ்வண்ணமே ப்ராண தேவதையான வாயுவும் பெருமையுடையதா மென வறிக. எரித்துக்கொண்டே யிருப்பே னென்றது அக்னி. வெய்யில் காயும் வண்ணமே யிருப்பே னென்றது கதிரோன். நிலவு வீசினபடியே நிற்பேனென்றது சந்திரன். இப்படி ஒவ்வொரு தேவ தையும் நினைத்தது. இந்த ஸூர்ய சந்திராதி தேவதை களுக்கெல்லாம் அஸ்தமன மென்ப துண்டு வாயுதேவதை தான் அஸ்தமியாமல் இராப்பகலெப்போதும் வீசின வண்ணமே யிருப்பதாம். ஸூர்யாதிகள் வானத்தில் ஸஞ்சரிப்பதற்கும் வாயுவின் ஸஹாயம் வேண்டும். ஆகையால் வாயு உயர்ந்தது. அதனைத் தேவதையாக வுடைய ப்ராணனும் அங்ஙனமே பெரிதாம். ப்ராணுயாம மென்ற செயலைச் சரிவர நடத்துமவன் அதில் நிஷ்டை யுடையவன் ப்ராண தேவதா ஸாயுஜ்யம் பெறுவான் (யோகத்தி லிழிகின்றவன் இந்திரியங்களை யெல்லாம் விஷயங்களினின்று இழுத்தடக்கி ப்ராணுயாமத்தினுலே

பிராணனைக் கொண்டே உடலையும் மனத்தையும் சீர்த் திருத்திக் கொள்ளுகிறுனுகையால் இதன் சிறப்பை இவ் வாறு இங்கு கூறிற்று.)

3-6. ப்ராணனுக்குக் கீழ்ப்பட்ட இந்திரியங்களைப் போலே அதற்கு மேற்பட்ட ஜீவாத்மாவும், பரமாத்மாவும் கூட ப்ராணனென வழங்கப்படுகிறதுண்டு. ப்ராணனும் அம்ருதம்; ஆத்மாவும் அம்ருதம். ஆத்மா அழியாதாகை யாலே அம்ருதமெனப்படுகிறது. (ஆனந்த ரூபமாய் போக்யமாகையாலும் அம்ருதமாம்.) எப்போதும் ஸஞ்சரித்தபடியே யிருப்பதாலும், வாயுவை அம்ருத மென்று சொல்வதுண்டாகையாலும் ப்ராணனும் அம்ருத மாகிறது. ஆத்மாவானது ப்ராண ஸம்பந்தம் பெற்றிருக்கும் வரையில் நாமரூபங்களால் மறைக்கப்பட்டேயிருக்கும். நாம ரூபங்கள் கர்மங்களுக்குப் பலனுகவும் கர்மங்களுக்கே காரணமாகவும் ஏற்பட்டவை. ஆக ப்ராணனெனப்படும் போது ஆத்மாவை நாம ரூப கர்ம மயமா யிருக்கிற நிலை மையிற் சொன்னதாகும்.

இப்படி மூன்ரு மத்யாயமானது கர்மாநுஷ்டானத் திலேயே யிழிந்தவர்க்கும் ஒருவகை வித்யை அவசியம் வேண்டுமெனவறிவிக்கக் கருதி அச்வமேதத்தைச் சேர்ந்த த்ருஷ்டிவிதியைத் தெரிவித்து, ஜகத் காரணமான ஆத் மாவை நானென உபாஸிக்க வேண்டுமென விதிப்பதற் காக அது செய்யும் ஸ்ருஷ்டியையும், ஒவ்வொன்றிலும் அது ஆத்மாவாகப் புகுந்திருக்கும் திறமையையும் கூறி, இந்த சரீராத்ம ஸ்வபாவத்தை யறிந்தவனுக்குத் தேவர்கள் எவ்விதத்திலும் இடையூறு செய்ய வியலாரென்பதையும், அல்லாதபோது இவன் தேவர்களுக்குத் தொண்டு செய்து ஆடுமாடுபோல் உழைத்து வரவேண்டும் படியா மென்பதையு முணர்த்தி, முன்சொன்னபடி கர்மவச்யராய்

படைக்கப்படும் தேவர்களுக்கும் மனிதருக்குப்போல் நான்கு வர்ணங்களும் தர்மநெறியு முள்ளதை விளக்கி மோக்ஷத்தில் உருசியைப் பெறுவித்து, உபாஸனம் செய்பவனுக்கு வேண்டும் ப்ராணன் முதலிய கருவிகளையும் ப்ராணனின் பெருமையையும் பகர்ந்தது. இப்படி ஜகத்காரணமான ஆத்மாவை உபாஸனம் செய்வது ஒருவாறு கூறப்பட்டதாம். இனி வேறு ப்ரம்மவித்யைகளும் விதிக்கப்படும்.

(4)

4-1. பாலாகி வித்யை—பாலாகி என்பானொருவன் தனக்கே ப்ரம்ம ஜ்ஞானம் சிறப்பாகவுள்ளதாகக் கர்வங்கொண்டு அஜாத சத்ரு என்னும் அரசனொருவனிடம் தன் ப்ரம்ம ஞானத்தை யறிவித்துக் கொள்ள நெருங்கினான். அஜாத சத்ருவும் 'என்னிடம் ப்ரம்மத்தைச் சொல்லுகிறேனெனச் சொன்னதற்கே ஆயிரம் பசுக்களைத் தானமளிப்பான்; ஜநகர் ஜநகரென்றல்லவோ ஜனங்களோடுகின்றன என்று அவனை வரவேற்றான். பாலாகியும் ஸூர்ய மண்டலம், சந்திர மண்டலம், மின்னல் ஆகாயம் முதலிய பலவிடங்களை ஒவ்வொன்றாக எடுத்து அங்கேயுள்ள புருஷனை (ஜீவாத்மாவை) ப்ரம்மமாகக் கொண்டு கூறி வந்தான். ஒவ்வொன்றைக் கூறும்போதே அஜாதசத்ரு அந்தந்த வாதத்தை யொப்புக் கொள்ளாமல் மறுத்தான். கடைசியில் அவன் ஒய்ந்தவுடன் உண்மையான ப்ரம்மத்தை உணரவில்லையே யென்றான்—அஜாத சத்ரு

உடனே பாலாகி அவனிடம் சிஷ்யனாயிருந்து ப்ரம்மத்தை யறியப் பணிந்து நின்றான். அவனை யரசன் ப்ரீதியுடன் கையிற் பிடித்து அழைத்துக்கொண்டு அண்டையில் உறங்கும் ஒருவனிடம் சென்று, 'பெரியவனே! வெண்ணிற உடையுடையவனே! ஸோமராஜனே!' என வெழுப்பினான். உறங்குகின்ற அவன் எழுந்திராமலிருக்கவே

கையால் அவனை யசைவித்தெழுப்பி, பாலாகியைப் பார்த்து, 'இங்ஙன முறங்கி இப்போது விழித்த விவன் உறங்கும்போ தெங்கிருந்தான், எங்குநின்று வந்தான், தெரியுமோ' என வினவினுன். பாலாகி யதை யறிந்தா னல்லன். பிறகு அரசன் அவனுக்குபதேசித்ததாவது—உறங்க இறங்கும் போது இந்திரியங்களெல்லாம் வெளியி லொன்றும் செய்ய வியலாதபடி லயித்து விடுகின்றன ஜீவன் சொப்பனம் காணவிருக்கும் நாடிகளிற் சென்று உயர்ந்தனவும் தாழ்ந்தனவும் அநுகூலங்களும் பிரதி கூலங்களுமான சொப்பனங்களையு மனுபவித்து, அங்கு நின்று ஹிதை எனப் பெயர் பெற்ற நாடிகள் நெருங்கி யிருக்கும் புரீதத்து எனப்படும் (ஹ்ருதயத்தினுள்ளிருக்கும் மாம்ஸ பிண்டம் போய்ச் சேர்ந்து, மஹாராஜன் அல்லது மஹா ப்ரம்ம ஞானியானவன் அனுபவிக்கு மானந்தத்திற் கொப்பான ஆனந்த மனுபவிப்பான் போலே அங்கே ஆகாசத்திற் சேர்ந்து (ப்ராஜ்ஞனையும் ஆநந்தமயனு மிருப்பதாலே ஆகாச பதத்திற்குப் பொருளாய் விளங்கும் பரமாத்மாவினிடத்திற் சேர்ந்து) உறங்குகின்றுள். இவ் வண்ண முறங்கி எழுந்திருக்கும் போது எல்லா ஜீவாத் மாக்களும் அந்தப் பரமாத்மாவினிடமிருந்து, நெருப்பி னின்று பொறிகள் கிளம்புமா போலே புறப்பட்டுப் பிறகு இந்திரியங்களுடன் சேர்ந்து எல்லா வுணர்ச்சிகளையும் பெறுகின்றனர். இந்தப் பரமாத்மாவிற்கு, 'ஸத்யத்திற்கும் ஸத்யம்' என இரஹஸ்யப் பெயராம். ப்ராணன்களெனப் படும் ஜீவர்களுக்கும் மேலான ஸத்யமென இதன் பொரு ளாம்—என்றவாறு. கௌஷிதகி யுபநிஷத்திலே இந்த பாலாகிவித்யையின் விரிவு கண்க.

4–2. ப்ராணனென்று ஜீவாத்மாவைச் சொல்லுவதற் குக் காரணத்தை விளக்குமா போலே யமைந்தது மேல் ப்ராம்மணம். இதில் ப்ராணனுக்கும் ஆத்மாவிற்குமுள்ள

ஸம்பந்த மொருவாறு தெளியலாகும். ப்ராணனென்ப தொரு பசுங்கன்று. இதற்கு கர்ப்ப ஸ்தானம் ஹ்ருதயம். இது வெளிப்பட்டு விளங்கும் ஸ்தானம் நம் உடல். இதனை ஜீவனென்கிற தூணிலே கட்டியிருக்கிறது. கட்டக் கயிறுவது அன்னமே. இங்ஙனம் உணர்ந்தவர்களுக்கு ஏழ்வகை சத்ருக்களும் எளிதில் அழிவர். முகத்தில் கண், காது, மூக்கு, வாயென்ற ஏழு இந்திரிய துவாரங்கள் ப்ராண ஸஞ்சாரத்திற்குள. அவை ஏழாலேற்படும் ராகத்வேஷாதிகளே ஏழு சத்ருக்களாம். கண்ணில் ஒவ்வொரு பாகத்தில் ஒவ்வொரு தேவதையாக இப்பிராணனுக்கு ஸந்நிதானம் செய்துள்ள தேவதைகள் ஏழு பேர். நமது தலையே ஓர் உண்கலம். ஆனால் உலகிலுள்ள உண்கலம் போலே மேற்பக்கத்தில் வாய்ப்புறமில்லாது வாய்ப்புறம் கீழேயுள்ளதாய், மேற்புறம் மூடப்பட்டுள்ள வோர் உண்கலமாம் இது. தலையென்ற அவயவத்தில் நிலைத்துள்ளது ப்ராணன். இப்படி யறிந்து, அதில் ஏழு இந்திரியங்களென்ற ரிஷிகள் வஸிப்பதையும், ப்ரம்மத்தைப் பேசும் வாக்கும் கூட விளங்குவதையும் அறிந்தார்க்கு அன்னம் குறையாது; எல்லா வகையன்னமு முண்டாமென்றது இந்த ப்ராம்மணம்.

43. ப்ரம்மத்திற்கு இருவகை ரூபங்களுள. கண்ணுக்கு இலக்காயும் பலவகை உருக்கள் கொண்டு அங்கங்கே தங்கியிருப்பனவுமான மண், நீர், நெருப்பென்பவை ஒருவகை ரூபம். இது மூர்த்த ரூபம். அங்ஙனமில்லாத வாயுவும் ஆகாயமும் மற்றொரு ரூபம். இது அமூர்த்த ரூபம். இத்த ப்ரம்மமானது ஸூர்ய மண்டலத்திலும் கண்ணிலும் புருஷவுரு கொண்டிருக்கிறது. ஸூர்ய மண்டலமும் கண்ணும் கண்ணுக்கிலக்கான முன் சொன்ன மூர்த்த ரூபத்தின் ஸாரமாகும். அங்கங்குள்ள புருஷ வுருவம் மற்றொரு ரூபத்தின் (அமூர்த்த ரூபத்தின்)

ஸாரமாகும். அந்தப் புருஷ உருவத்தின் நிறமானது குஸும்ப வஸ்திரம், வெண்கம்பளி, இந்திர கோபப் பூச்சி, அக்னி ஜ்வாலை, செந்தாமரை, மின்னல் என்றவற்றின் நிறத்திற்கு ஒத்ததாம். இதை யறிந்தானுக்கு மின்னொளிக்கு ஒத்த மேனியுண்டு. இந்த ப்ரம்மத்தை இவ்வளவாகவே யறியலாகாது. ஸத்யத்திற்கெல்லாம் ஸத்யமென்ற இதன் பெயரை யாராயுங்கால் இதன் மேன்மை மிக விளங்கும். (ஸத்யங்கள் ஜீவாத்மாக்கள், அவற்றிற்கும் மேலாக ஸத்யம் இது. ஆக பஞ்ச பூதங்களாக மாறும் அசேதனத்திற்கு மேலாய் ஸ்வரூப விகாரமற்றதாய், ஸ்வரூப விகாரமற்ற ஜீவர்களுக்கு மேலாய் ஸ்வபாவ விகாரமுமற்றதாம் ப்ரம்மம். ஸ்வபாவ விகாரத்தை பிரமன் முதல் பூண்டு வரையில் ஜீவர்களில் பார்க்க.) இது மூர்த்தா மூர்த்த ப்ராஹ்மணம்.

4-4. மைத்ரேயி வித்யை. யாஜ்ஞவல்க்யர் தமது மனைவிகளிலொருத்தியான மைத்ரேயியைப் பார்த்து, நான் இல்லற வாழ்க்கையை விட்டு விலகுவதா யிருக்கிறேன். உனக்கும் காத்யாயனிக்கும் சொத்துப் பிரிவினை செய்துவிடுகிறேன் என்றார். (காத்யாயனி யென்பவள் இளைய மனைவி.)

மைத்ரேயி—இப்பூமி யடங்கலும் பணம் நிறைந்து பெறப்பட்டாலும் அதனால் மோக்ஷம் பெற முடியுமா என்று கேட்டாள்.

யாஜ்ஞ—'முடியாது. சொத்துள்ளவர் இங்கே வாழ்கிற வண்ணம் நீயும் வாழலாமே யல்லது பணத்தினால் மோக்ஷம் பெறலாமென்று விரும்புவதற்கிடமே யில்லை.'

மை—மோக்ஷத்திற்கு ஆகாததைக் கொண்டு யான்

என்ன செய்வது? மோக்ஷத்திற்காகத் தாமறிந்திருப் பதையே உபதேசிக்க வேணும்.

யா—நீ எனக்கு ப்ரியை யானமைக்குத் தக்கபடி ப்ரியமே பேசுகின்றாய். வந்து உட்காரு; சொல்லுகிறேன். உற்றுணர்ந்து ஆராய்ந்து கொள்.

மை—உபதேசிக்கலாம்.

யா—புருஷன் மனைவிக்கு ப்ரியனாவது, 'நான் அங் ஙனமாக வேண்டும்' என்று புருஷன் நினைப்பதாலா குமோ? மனைவி கணவனுக்கு ப்ரியமாவது மனைவியின் நினைவாலாவதா? பிள்ளை பெற்றோருக்கு ப்ரியனாவது பிள்ளையின் நினைவு அங்ஙனமிருப்பதா லாகிறதா? பணம் அனைவர்க்கும் ப்ரியமாயிருக்கிறதே. அங்கே பணமா தான் அங்ஙனமாக வேண்டுமென நினைத்து அவ்வாறா கிறது? அல்ல. எதுவும் ப்ரியமாவது ஆத்மா (பரமாத்மா) அதது அங்ஙனமாக வேணுமென்று விரும்பினதைப்பற்றி யென வறிக. இப்படி அவன் விரும்பும்போது ப்ரியமா யும், இல்லையேல் வேறாயுமாகின்ற இவையெல்லாவற்றை யும் விட்டு எப்பொழுதும் ப்ரியமாகவே யிருக்கும் பரமா நந்த ஸ்வரூபமான அவ்வாத்மாவையே உபதேச மூலமா கக் கேட்டாராய்ந்து த்யானத்திலே பார்த்தனுபவிக்க வேண்டும். இவ்வித மிதைக் கண்டால் எல்லாவற்றை யும் கண்டதாம். எந்த வஸ்துவும் ஆத்மாவை விட்டறி யப்பட்டால் அவ்வறிவிலியைப் பரிபவித்துவிடும். எல் லாம் ஆத்மாவேயாம். இதை யறிவதற்கு இந்திரியங் களை யடக்க வேண்டும். வீணை முதலான வாத்யங்கள் வாசிக்கப் பெற்றால் சப்த முண்டாகா மலிருக்குமோ? சப்தம் கேட்கக் கூடாதென நினைத்தால் வாசிப்பதைத் தடுக்க வேண்டும். தன்னையும் தன் இந்திரியங்களையும் அடக்கிக் கொண்டால் புலங்களிலே பற்றுதல் பிறவாது.

உப்புக்கட்டி நீரில் கரைந்து கலந்து பரந்திருப்பது போல் அளவிட வொண்ணாத அப்பெருஞ்சேதநன் விஜ்ஞாநாத்ம (ஜீவாத்ம) ஸ்வரூபனாய் பஞ்ச பூதங்களோடு கலந்து பிறந்தும் இறந்தும் வருகிறது. விஜ்ஞாநாத்மா இறந்த போது ஸம்ஜ்ஞையை யிழக்கின்றது.

மை—முடிவில் சொன்னது எனக்கு மோஹ மளிக்கின்றதே. (விஜ்ஞாநாத்மாவா யிருப்பது ஸம்ஜ்ஞையை யிழக்க முடியுமோ).

யா—அறிவே யில்லையென்று நான் சொல்லவில்லை; அறிய வியன்றதே அது. (மறுபடி பிறவாதபடி இறந்தால் அதற்கு தேஹாத்ம ப்ரமம் போன்ற ஸம்ஜ்ஞைக்கு இடமில்லை யென்கிறேன்). எல்லாம் ஆத்மாவே யென்றறியாதவன்—அறிகிறவன், அறியும் கருவி, அறியப்படுவது என்றவற்றை வெவ்வேருகப் பார்ப்பான். எங்கும் வியாபித்த ஆத்மாவாகவே யெல்லாவற்றையும் காண்பவனுக்கு அப்படி வேறுபாடு தோற்ருது. எதைக் கண்டாலும் ஆத்மாவைக் காண்பதே அவனுக்கு ஆகும். அவ்வாத்மாவைக் கொண்டுதான் எதையு மறியவேண்டும். (இந்திரியங்களுக்கு இலக்காகாத) அவனையெதைக் கொண்டறிவது? ஸர்வமுமறிந்த அவனை எதனலறிவது? (எளிதி லறிய முடியாது. இந்திரியங்களை யடக்கி முன் சொன்னவாறு முயன்றே யறிய வேண்டும்).

இப்படி யாஜ்ஞவல்க்யர் தம் மனைவிக்கு உபதேசித்தார்.

4–5. இது **மதுப்ராம்மண** மெனப்படும். இன்னது மது என்பதை இது விளங்கக் கூறுகிறது. ஒவ்வொரு பிராணியிலும் பல அம்சங்கள் இருக்கின்றன. அவை யாவன-உடல், சுக்லம், பிராணன், மனம், கண், காது,

வாக்கு முதலான இந்திரியங்கள், ஜாடராக்கினி, சப்தம் ஹருத யாகாசம், தர்மம், ஸத்யம், மனித வமைப்பு, ஜீவாத்மா என்ருற் போன்றவை. இவற்றில் ஒவ்வொன்றுக் கும் அதிஷ்டான தேவதையுண்டு. ப்ருதிவி முதலான அத் தேவதைகள் வாயிலாக இவற்றிற்கு எல்லாம் அமைவதால் இவற்றிற்குத் தேவதைகள் மது=அனுகூல மென்றபடி. தேவதைகளிஷ்டப்படி யிவை யிருப்பதால் இவை அவர்க்கு மது=அனுகூலங்களாம். இவற்றிற்கும் இத் தேவதைகளுக்கு முள்ளே, அழிவற்றுத் தானே ப்ரகா சித்து வரும் பரமபுருஷனென்ற அந்தர்யாமி யிருக்கிருன். அவனே ஆத்மா, அவனே அம்ருதம், அவனே ஸர்வ ஸ்வரூபமான ப்ரம்மம் (மதுவான இவன் உள்ளே இருப்ப தாலேயே அவை ஒன்றுக்கொன்று மதுவாகின்றன) என இது அறிவித்தது.

இந்த மதுரஹஸ்யத்தை தத்தியங் என்ற மஹர்ஷியி னிடத்திலே அச்வினி தேவதைகள் பெற்ருர்கள். இந்த ரஹஸ்யத்தை அவர்கள் மஹரஷியிடம் வந்து உபதேசிக் கக் கேட்டபோது, ‘இந்த ரஹஸ்யத்தை வெளியிட்டால் தலையை வெட்டிவிடுவேனென்று இந்திரன் சொல்லியிருக் கிருன். ஆகவே அஞ்சுகிரேன்’ என்ருர் அம்மஹர்ஷி. ஆகில் நாங்கள் முதலில் உம்முடைய தலையை வெட்டித் தனியாகப் பாதுகாத்து உமக்குக் குதிரையின் தலையைச் சேர்த்துவைக்கிரோம்.உபதேசம் செய்த குதிரைத் தலையை இந்திரன் வெட்டின பிறகு உமது தலையையே உமக்குச் சேர்த்தமைத்துவிடுகிரோம். நாங்கள் சிறந்த தேவ வைத்யர்க ளல்லோமோ என்றனர் அவர்கள். பரமோதர ரான மஹர்ஷியு மிசைந்தார். அங்ஙனமே எல்லாம் நடந் தேறியது. (ரிஷிவரரை ஹயக்ரீவராக்கிப் பிரயாசைப்பட் டுப் பெறும்படி அவ்வளவு அருமையான இரஹஸ்யமிது. இந்த மது ரஹஸ்யத்திலிருந்து பரமாத்மாவின் நிலை நன்கு விளங்கும்.) அவன் இருகால் நாலுகால் ப்ராணிகளென்ற

எல்லாவற்றிலும் பக்ஷமுள்ளவனுய்ப் புகுந்து புருஷ னெனப் பெயர் பெறுகிருன்; உள்ளும் வெளியும் எங்கும் அவன் பரந்திருப்பதாலே அவனில்லாத இடமே கிடை யாது. உலக வ்யவஹாரத்தை நடத்துவதற்காக ஒவ் வொருருவிலும் அவன் உருவெடுத்திருக்கிருன், ஸர்வைச் வர்யமுள்ள அவன் தனது பலவகை ஸங்கல்ப்பங்களாலே பல ரூபங்களை யெடுக்கின்ருன். ஆகவே ஹரி யென்ற அவன் ஒரு ஹரியாயிராமே ஆயிரக்கணக்கான ஹரிகளா கிருன். இந்த ப்ரம்மமானது எல்லாக் காலத்திலும் எல்லாத் தேசத்திலும் இருந்து கொண்டு ஸர்வஜ்ஞத்வம் முதலான ஸகல குணங்களுக்கும் பண்டாரமாயிருக்கும்.

4-6. இது வம்ச ப்ராம்மணம். இது, வித்யையை யுப தேசிக்கும் குரு முதற் கொண்டு எம்பெருமான் வரையி லுள்ள குருபரம்பரை யொன்றைப் படிக்கிறது. இதற்கு, எல்லோரும் தங்கள் தங்கள் குருபரம்பரையைத் தம் ஆசார்யனைத் தொடங்கி குலமுதல்வனளவாக அனுஸந் திக்க வேண்டுமென வறிவிப்பதிலே நோக்காம்.

## (5)

5-1. விதேஹ தேசத்தரசனுன ஜநகன் விசேஷமாக தக்ஷிணையளித்து யஜ்ஞமொன்றை நடத்தினுன். அங்கே குருதேச பஞ்சால தேசத்து ப்ராம்மணர்கள் ஒன்று சேர்ந் தனர். இவர்களில் எவர் வேதாங்காத்யயனம் செய்து ப்ரம்ம வித்யை வரையிலுள்ள ஸர்வ வித்யையிலும் சிறந்து விளங்குபவரென்பதை யறிய ஆவல் கொண் டான் ஜனகன். பத்துப் பத்துப் பாதங்களளவு (பாதமாவது ஒரு பலத்தில் நான்கிலொன்ரும்) கொண்ட ஒரு பொன்னுற் செய்த கொப்பியைக் கொம்புகளி

லமைக்கப் பெற்ற ஆயிரம் பசுக்களை யொன்று சேர்த்து நிறுத்தி, சிறந்த ப்ரம்மஞானியா யிருப்பவர் இப்பசுக்களை ப்ரதிக்ரஹிக்க வேணும்' என்று கோரினன். ப்ராம்மணர்கள் துணிவு பெறவில்லை. நானே சிறந்தவன்' என்று நினைக்க எவருக்கும் கூடவில்லை. அப்போது யாஜ்ஞவல்க்யர் தமது சீடனை யழைத்து; அப்பா! ஸாமச்ரவஸ்ஸே! பசுக்களை நம்மில்லத்திற்கு ஓட்டு' என்றுர். பிராம்மணர்கள் முனிந்தனர்; நமக்குள் இவர் எப்படிச் சிறந்தவரெனப் பேசினர். அவரிற் கலந்த அச்வலரென்றவரொருவர், ஜநக ராஜனின் ஹோதா—யாகத்தைச் செய்து வருமோர் ருத்விக்காயிருப்பவர் மற்றவர்களின் மனத்திற் கிணங்கி, யாஜ்ஞவல்க்யரை விளித்து, 'நீரே சிறந்த ப்ரம்ம வித்தோ' என வினவினுர். அதற்கு யாஜ்ஞவல்க்யர், 'சிறந்த ப்ரம்மவித்தை தலையால் வணங்குகிறேன். நமக்குப் பசுக்கள் வேண்டியிருப்பது மாத்திரம்' என விநோதமாக மறுமொழி கூறினுர்.

அப்பொழுதே ஸதஸ்ஸில் அச்வலர் அவரைப் பரீக்ஷிக்க 'வேண்டுமென்று சில கேள்விகளைக் கேட்கத் தொடங்கினுர். யாகத்தில் யஜமாநன் மரணத்தினின்று விடுபட்டு மோக்ஷம் பெறுவதற்காக ஹோதா, அத்வர்யு, உத்காதா, ப்ரம்மா என்ற ருத்விக்குகளினிடம் நடவா நிற்கும் பாவனைகளைப் பற்றியும், ஹோதா ஓதும் ருக்குகளையும், உத்காதா ஸாமகானம் செய்யும் ருக்குகளையும், ப்ரம்மா யஜ்ஞத்தைக் காக்க நோக்கும் தேவதைகளையும் பற்றியும் அங்கங்கே நேரும் பலனைப் பற்றியும் விஞக்களை விடுத்து யாஜ்ஞவல்க்யரிடமிருந்து விடை பெற்றொழிந்தார்.

5-2. பிறகு ஆர்த்தபாகரென்னும் மற்ருெரு ப்ராம்மணர் சில கேள்விகளைக் கேட்க, யாஜ்ஞவல்க்யரும், க்ரஹங்கள் எட்டு, அவை மூக்கு, வாக்கு, நாக்கு, கண்,

காது, மனது, கை, த்வக்கு என்றவை. அவற்றின் விஷயங்களே அதிக்ரஹங்கள். ஆகவே அவையுமெட்டாம். ம்ருத்யுவாவது அக்னி. அதை அன்னமாகவுடையது ஜலம். ஜீவன் மரணமடையும்போது ப்ராணன்கள் அவனை விடுவதில்லை. உலகில் எல்லா மவனை விட்டாலும், அவன் பேர் மட்டும் அவனதாகவே யிருக்கும்' என்று கூறி, எல்லாம் லயிக்க ஜீவன் எங்கே போகிருனென்ற கேள்விக்கு மறுமொழி மொழிய ஏற்பட்டபோது, 'வாரீர் ஆர்த்தபாகரே! இது ஸதஸ்ஸிற் சொல்லத் தகாதது, (அறியாதார் பலருளர்); ஏகாந்தத்திற் சொல்லுகிறேன் கேண்மின்' என்று கை பிடித்தெழுந்து தனியே சர்ச்சை செய்து, 'புண்யம் பாபம் என்ற கர்மாநுகுணமாகச் செல்லுகிருன்' என விடையளித்தார்.

5-3. பிறகு புஜ்யு என்பாரொருவர் யாஜ்ஞுவல்க்யரிடம்,—'மத்ர தேசத்திலே நாங்கள் அத்யயனம் செய்து வந்தபோது பதஞ்சல ரென்பவரின் இல்லத்திற்குச் சென்ருேம். அவருடைய பெண்ணை ஒரு கந்தர்வன் (மனிதனல்லாத தொன்று. ஒருவகைப் பிசாசம்) பிடித்திருக்க, அவனை, 'நீ யார்' என வினவிருேம், 'நான் ஸுதந்வா என்பவன். ஆங்கிரஸ கோத்ரன்' என்ருனவன். அவனை லோகங்கள் விஷயமாகச் சிலவற்றைக் கேட்டபோது பாரிக்ஷிதர்கள் எங்கே போயிருந்தன ரென்று கேட்டோம். அக்கேள்வியை உம்மைக் கேட்கிறேன்— என்ருர்.

யாஜ்—பாரிக்ஷிதர்கள் அச்வமேத யாகம் செய்பவர் போகுமிடத்திற்குப் போயினர்.

புஜ்—அச்வமேத யாகம் செய்பவர் எங்கே போகின்றனர்?

யாஜ்—'ஸூர்யனுடைய ஒவ்வொரு நாளைய ஸஞ்சா ரத்தினுல் ப்ரகாசம் செய்விக்கப் பெறும் அளவுகள் முப்பத் திரண்டுள்ளதாய் விசாலமாயுள்ள லோக மிது. இதனை இதற்கு இரண்டு மடங்குள்ள பூமி சுற்றிக் கொண்டிருக் கிறது. அதற்கு இரண்டு மடங்கு விஸ்தாரமுள்ளது ஸமுத்ரம். அங்கே அண்ட கடாஹத்திலே கத்தி முனை யளவு, கொசுவின் இறகளவு கனமுள்ள சந்தில் பாரிக்ஷி தர்கள் போயினர். இந்திரன் அவர்களை கருட பக்ஷியா யிருந்து சுமந்து சென்று வாயுவினிடம் சேர்த்தான். வாயு அவர்களை அச்வமேத யாகம் செய்தவர் உள்ள இடம் சேர்த்தது. இங்ஙனம் தானே அந்தக் கந்தர்வன் சொல்லி, வாயுவே வ்யஷ்டி ஸமஷ்டி யெல்லாம்' என்றும் கூறி லோகங்களுள்ள விடத்திலும் இல்லாதவிடத்திலு மெங்கும் ஸஞ்சரிக்கும் வாயுவைக் கொண்டாடினுன்.'

புஜ்யுவின் கேள்விக்குப் பிறகு உஷஸ்தரும் கஹோ ளரும் கேட்டனர்.

5-4. உஷஸ்தர்—ப்ரத்யக்ஷமாயுள்ள ப்ரம்மம் எல் லாவற்றிற்கு முள்ளே யிருக்கு மாத்மா என்கின்றனர். இது யாது?

யாஜ்—உமக்காத்மாவா யிருப்பதே அது. ப்ராணுப நாதி வாயுவைக் கொண்டு ஜீவனத்தை நடத்தும் ஆத்மா தான் அது.

உஷ—இதென்ன பேச்சு. 'இது மாடு; இதுவே குதிரை' யென்றுற் போலுள்ளதே.

யாஜ்—ச்ரவணம், மனனம், த்யானம், தர்சனமென்ற வற்றைச் செய்யு மாத்மாவை யான் எல்லாவற்றிற்கு முள் ளிருக்கு மாத்மாவாகச் சொன்னதாக நினைக்க வேண்டா.

நான் சொன்ன ஆத்மாவைத் தவிர்த்து மற்றது அழி வுற்றதாம்.

5-5. கஹோளர், 'உஷஸ்தருடைய கேள்விக்கு மறு மொழி கூறின உமக்கு எது அந்த ஆத்மாவெனக் கருத்தி லுள்ளதென்று விளங்கச் சொல்லவேண்டும்' என்று கேட்க நினைத்து, உஷஸ்தருடைய கேள்வியை யப்ப டியே தாமும் கேட்டார்.

யாஜ்—'பசி, தாகம், சோகம், மோஹம், மூப்பு, மரண மென்றவை யில்லாத ஆத்மா அது. இதனை யறிந்து தான் ப்ராம்மணர்கள் புத்திரன், பணம், உலகம் என்ற மூன்றிலும் அறப் பற்றற்று (ஸந்யாஸம் செய்துகொண்டு) பிக்ஷையால் தேஹயாத்ரையை நடத்திக் கொள்ளுகின்ற னர். ப்ராம்மணன் (இரஹஸ்யமாய் உபதேச மூலம் பெற வேண்டுமான) பாண்டித்யத்தைப் பெற்று பாலன் போலே அஹங்கார மற்றிருக்க வேண்டும். இப்படி பால்ய பாண்டித்யங்களைப் பெற்ற பிறகு எப்போதும் அவ்வாத் மாவையே சிந்தித்தவண்ணமிருந்து முனி என்ற பேர் பெற வேண்டும். பிறகு த்யானத்தை நன்கு செய்ய வியன்று ப்ராம்மண னெனப்படுவான். ப்ராஹ்மணனு கைக்கு இதைவிட வேறு வழி ஏது?

5-6. பிறகு கார்கி என்னுமொரு ஸ்த்ரீ வினவினள். இப்பூமிக்கெல்லாம் ஆதாரமானது ஜலம். அதற்கு எது ஆதாரமென்று முதல் கேள்வி. இங்ஙனம் மேன்மேல் லோகங்களை யாக்ஞவல்க்கியர் சொல்லிவர, கார்கியும் மேன்மேல் ஆதாரத்தைக் கேட்டு வந்தாள். கடைசியாக ப்ரம்ம லோகங்களுக்கும் ஆதார மெதென வினவினாள். கேட்கத் தகாதபடியை யுணராமல் கேட்டால் தலை விண்டு விழுந்துவிடுமென்றார் இவர். உடனே அவள் கேள்வியை நிறுத்திக் கொண்டாள்.

5–7. பிறகு உத்தாலக ரென்பவர்—'மத்ர தேசத்திலே பதஞ்ஜலருடைய இல்லத்திலே நாங்கள் அத்யயனம் செய்திருந்தபோது அவருடைய மனைவியை ஒரு கந்தர்வன் (ஒருவகையான பிசாசம்) பிடிக்க அவனை யாரென்று கேட்டோம். 'நான் ஆதர்வணன் கபந்தன்' என்றானவன். பிறகு பதஞ்ஜலரையும் எங்களையும், எல்லா வுலகத்தையும் எல்லா ப்ராணிகளையும் தரித்திருக்கும் ஸூத்ரம் (மணிகளிலே கோர்க்கப்பட்ட நூல் போன்றது). 'ஒன்றையும், இப்படியே யிவை எல்லாவற்றையுமுள்ளே யிருந்து நியமிக்கும் அந்தர்யாமியையும் நீங்கள் அறிவீர்களோ' என்றும் கேட்டான். இதை யறிந்தவன் தான் ப்ரம்மம், லோகம், வேதம் போன்ற எல்லாவற்றையும் அறிந்தவனாவான் என்றும் சொன்னான். அந்த ஸூத்ரத்தையும், அந்த அந்தர்யாமியையும் அறியாமலே பசுக்களை யோட்டிக் கொள்வீராகில் உமது தலை விண்டு விழும்' என்றார்.

யாஜ்—யான் அவ்விரண்டையும் அறிவேன்.

உத்—அறிவே னென்று சொல்ல எவனு மியல்வான். அறிந்தபடி சொல்லும்.

பிறகு யாக்ஞவல்க்கியரும்—அந்த ஸூத்ரமாவது ப்ராணனென்றும், அந்த அந்தர்யாமிதான் பூமி முதலிய எல்லாத் தேவதைகளுக்கும், எல்லா ப்ராணிகளுக்கும், எல்லா இந்திரியங்களுக்கும், எல்லா ஆத்மாக்களுக்கும், ஒன்று விடாமல் எல்லாவற்றிற்கு முள்ளே புகுந்து நியமிக்கிறவன்; உமக்கு முன்னே யுள்ளவன்; அழிவில்லாதவன்; அவனுக்கு மேம்பட்ட அறிவாளியில்லை யென்று மறுமொழி கூறினார்.

(உபநிஷத்துக்களிலே பலவிடங்களிலே ப்ரஸித்தரான ப்ரம்மவித்து உத்தாலகர். அவருடைய கேள்விகே

விடை கிடைத்த பிறகு இனிஅந்த ஸதஸ்ஸிலே இவரை வெல்ல யாரு மியலார். இதை யுணர்ந்த கார்கி யென்றவள் தான் முன்னே கேட்கத் தொடங்கி நின்றிருப்பதாலே மறு படியு மொருவாறு கேட்க இடமுண்டாக வேணுமென்று கருதினவளாய் ஸதஸ்ஸிலுள்ள ப்ராம்மணர்களைப் பார்த்து கீழ் வருமாறு விண்ணப்பித்து வினவ முன் வந்தாள்.)

5-8. 'ப்ராம்மணர்களே! இவரை நான் இரு கேள்வி கள் கேட்கப் போகிறேன். அவற்றிற்கும் விடையளிப்பா ராகில் உங்களில் யாரும் இவரை ஜெயிக்க முடியாது' என்ருள். 'கேள்' என்ருர்கள் அந்தணர்கள்.

கார்கி—யாக்ஞவல்க்கியரே! காசியிலோ விதேஹ தேசத்திலோ பிறந்த சூரன் வில்லை வளைத்து நாணேற்றி விரோதிகளை வதைக்கும் வாணங்கள் சொருகின சரங்களி ரண்டை விடுமா போலே நான் இரு கேள்விகளை விடப் போகிறேன். விடையளியும்.

யாஜ்—கேட்கலாம், கார்கி!

கார்கி—வானுலகுக்கு மேலும், பூவுலகுக் கீழுமுள்ள வைகளோடு சேர்ந்த கார்யங்களனைத்தும, முன்காலம், வருங்காலம், நிகழ்காலமென்ற அந்தந்த காலத்திலே மட்டுமிருக்கும் வஸ்துக்களும் எல்லாம் எதை யாதாரமாக யுடையனவே, எது காரணமோ, அது யாது?

யாஜ்—அது ஆகாச மெனப்படுவது (அவ்யாக்கு தாகாசம். மூல ப்ரக்குதி)

கார்கி—அவர் சொன்னதைத்தான் ஒருதரம் சொல்லி 'இரண்டாம் கேள்வியை உற்றுக் கேண்மின்' என்று அறிவித்து ஸர்வத்துக்கு மாதாரமாகச் சொல்லப்பெற்ற

ஆகாசத்திற்கும் ஆதாரமா யிருப்பதெது என்று கேட்டாள்.

யாஜ்—இதனைத் தான் அக்ஷர மென்கின்றனர். இது பெரிதுமன்று, சிறிதுமன்று, நீண்டது மன்று; குறுகினது மன்று; நிறம், நைப்பு (ஸ்நேஹம்), நிழல், இருள் என்ருற் போலுள்ளவை யில்லாததும் அல்லாததுமானது; வாயு, ஆகாசம், கண், காது போன்றவைகளுள்ள அந்தந்த வஸ்துவைப் போலன்றி யிருப்பது; உள்ளே மட்டுமிருப்பதும் வெளியிலே மாத்திரமிருப்பது மன்று; இது எதையு முண்பதுமில்லை; இதனை யுண்பவ னெவனுமில்லை இதன் ஸங்கல்பத்திருலே ஸூர்யன் சந்திரன் ஸ்வர்க்கம் பூமி முதலானவை தரிக்கப்பட்டிருக்கின்றன. இதன் ஸங்கல்ப்பத்திருலே நதிகள் மலைகளினின்று ப்ரவஹிக்கின்றன. பிறர் கொண்டாடும்படி கொடுப்பதும், யாகம் செய்வதும், ச்ராத்தம் செய்வது மெல்லாம் இதன் ஸங்கல்ப்பத்திருலேயேயாம். இதற்கு மேம்பட்ட அறிவும் சக்தியும் வாய்ந்தது கிடையாது. இவ்வக்ஷரம் தன்னிலே முன் சொன்ன ஆகாசம் பிரியாதபடி புனைதலுற்றிருக்கிறது—என்று விரித்துரைத்தார்.

இதை யெல்லாம் கேட்டு கார்கி யென்பவள் ப்ராம்மணர்களைப் பார்த்து, 'இனி இவரை ஜெயிக்க முடியாது. நமஸ்காரம் செய்து விடுதலுற்று நில்லுங்கள்' என்று கூறி வணங்கி நின்றனள்.

5-9 இதற்குப் பிறகும் விதக்த ரென்பவர் சில கேள்விகள் கேட்கப் புறப்பட்டார். (முதலில் மூன்று பேர் கர்மானுஷ்டானத்தையும் புனர்ஜன்மத்தையும் சேர்ந்த பல கேள்விகளைக் கேட்டான பிறகு, உஷஸ்தர் முதலானேரும் பரப்ரம்ம விஷயத்திலே பல வினக்களை யெழுப்பி

நன்கு விடையளிக்கப்பட்ட பிறகு, யாக்ஞவல்க்யர் எல்லோரையும் ஜெயித்து ப்ரம்மிஷ்டராகு ரென்று கார்க் கியும் ஸதஸ்ஸில் கோஷித்த பிறகு, ப்ரம்ம ஜ்ஞானம் செவ்வனே பெருத விதக்தர் வீண் ஆடம்பரத்துடன் வினவ முன் வந்தது மிகத் தவருனது. ஆயினும் யாஜ்ஞ வல்க்யர் சிறிது காலம் பொறுத்தவண்ணமே மறுமொழி கூறலானுர்.)

தேவதைகள் எத்தனை பேர், அவர்கள் யாவரென்ற தைப் பலபடியாகக் கேட்டு விடை பெற்ருர் விதக்தர். பிறகும் அவர் கேட்ட கேள்விகளுக்கு உத்தரம் சொல் கின்றவராய், சாரீர புருஷன், கர்மமய புருஷன், ஆதித்ய புருஷன், செவியைச் சேர்ந்த புருஷன், நிழற் புருஷன், கண்ணுடி புருஷன், நீர்ப் புருஷன், புத்ரமய புருஷன் என்ற எட்டு புருஷர்களை யடைவாகக் கூறி இவரு மவரை யப்பப்போது அந்தந்த புருஷனுக்கு அதிஷ்டாந தேவதை யாரென்று கேட்டு விதக்தரிடமிருந்து விடையும் பெற்ருர். இதற்கு மேலும் தளராமலும் தயங்காமலும் கேள்வி கேட்டவண்ணமே யிருப்பார் போலிருந்தார் விதக்தர். ஆகவே யாஜ்ஞவல்க்யர் அவரைப் பார்த்து, என்ன, சாகல்யரே! இந்த ப்ராம்மணர்கள் உம்மைத் தணற் குழியிலே தள்ளிவிட்டார்கள் போலிருக்கின்றது' என்ருர். (நீர் விதக்தர் சாகல்யரென்ற பேர்களுக்குத் தக்கபடி சகலங்(துண்டு)களாகப் போவதோடு விசேஷமாக தஹிக்கப்பட்டும் போவீர் போலிருக்கிறதே. இனி நீர் வீணே எனது சாபத் தீயிலே விழுந்து உயிரிழப்பீர் போலிருக்கிறது எனக் கருத்து). (பிராம்மணர்கள் உமக்கு இடம் கொடுத்தது பீசகென்றறிவிக்கும் முறையிற் சொன்ன இதனைக் கேட்ட பிறகாவது பிராம்மணர்கள் ஒன்று சேர்ந்து அவரை தடுத்திருக்க வேண்டும். அவரே யாவது தம் ப்ராணனைக் காக்கத் தாமே கருதி விலகியிருந் தால் மிக நன்ருயிருக்கும். ஒன்றும் நடைபெறவில்லை.)

மறுபடியும் விதக்தர் கோபித்துக் கேட்கவே தொடங்கினர்—

'குரு தேச பஞ்சால தேச, ப்ராம்மணர்கள் இத்தனை பேரையும் இவ்வளவு அலக்ஷ்யமாக்கிப் பேசுகின்றீரே, என்ன, உமக்கு ப்ரம்மஜ்ஞானம் சிறந்திருப்பதாக நினைத்தா? அல்லது திக்குகளைப் பற்றி—அவற்றின் தேவதைகள், ஆதாரங்களுள்பட-நன்ருகத் தெரியுமென்று நினைத்தா? தெரியுமாகில் கேட்கிறேன், கூறும் என்று தீவிரமாகப் பேசி ஒவ்வொரு திக்கைப் பற்றியும் கேட்டார். கூறவேண்டியவை யெல்லாம் இவரால் கூறப் பெற்றன. அங்கே மேன் மேலாதாரங்களைப் பற்றி ப்ரச்னம் ஏற்பட்டபோது ப்ராண அபாந வ்யாந உதாந ஸமாந வாயுக்கள் இவரால் குறிக்கப்பட்டன. இவ்வளவு கேட்ட வண்ணமிருக்கும் விதக்தரை, முன்னமே தாம் கேட்க வேண்டியிருந்த கேள்வியை, 'இதுவும் தருணம். இப்போதாவது அந்தச் சேதநா சேதந விலக்ஷணமான புருஷனைக் கேட்கவேண்டு'மென நினைத்து, கேட்பாராய் 'ஓ அஹல்விகா! முன் எட்டு புருஷர்களைச் சொன்னேனே, அந்தப் புருஷர்களுக்கும் அவர்களின் ஆதாரம் முதலான வற்றிற்கும் (இப்போது சொன்ன ஸமாந வாயுவுக்கும்) மேற்பட்டு அவற்றை யெல்லாம் நியமித்தடக்கும் ஔபநிஷத புருஷன்—உபநிஷத்துக்களிலே விரித்துரைக்கப் படும் புருஷன் யார்? அவனை இன்னுனென்று நீர் சொல்ல வல்லீரல்லீராகில் உம் தலை விண்டு விழும்' என்று வெகுண்டு வாதித்தார். அந்தப் பரம புருஷனை விதக்தர் அறிந்தவரல்லராகையாலே அவர் தலை விழுந்துவிட்டது. அவருடைய சீடர்கள், அவர் அஸ்திகளை (எலும்புகளை) யாவது அவரில்லம் கொண்டு சேர்ப்போமென்று எடுத்து மூட்டையாகக் கட்டிக்கொண்டு போயினர். நடுவழியில் திருடர்கள் இது இவர்கள் ஸம்பாதித்து வரும் பணமூட்டை

யென்று ப்ரமித்து பிடித்திழுத்துப் பிடுங்கிக் கொண்டோடி விட்டனர். (இதெல்லாம் ப்ரமவித்தினிடம் அபராதப்பட்டதின் பலனென வுணர்க.)

இப்படி வாதிப்பது வலித்து நின்றபோது யாஜ்வல்க்யர் அங்கே ஸதஸ்ஸிலுள்ள ஸர்வ பிராம்மணர்களையும் பார்த்து, 'உங்களில் யாராவது என்னை ஏதாவது கேட்க விரும்பினுல் கேட்கலாம். எல்லோரு மொன்று சேர்ந்து வேண்டுமாலுைம் கேட்கலாம். இல்லையேல், நான் உங்களைக் கேட்கிறேன்' என்ன, அவர்கள் நடுநடுங்கி நிற்க, இவரும் உடலை ஒரு விருட்சமாக உருபித்து விருட்சத்திற்குள்ள வண்ணமே இதற்கு மெல்லாமிருப்பதை விரித்துரைத்து, 'மரமானது, முறிந்தால் மறுபடி வேரிவிருந்து வளர்ந்து விடுகிறதே, உடல் ஒடிந்தொழிந்தால் மறுபடி உடல் பெறுதற்குக் காரணம் யாது? விதையிலிருந்து விருட்சம் உண்டாகின்ற ஜீவனுக்குடல் உண்டாவதற்கு மூலகாரண முண்டு. அது எது?' என்று வினவினுர் ஒருவரும் ஒன்றும் சொல்லவில்லை. பரப்ரம்மமே மூலகாரணமென்று யாராவது தெளிந்துரைப்பாரோ என அவர் நினைத்துச் சொன்னுர். பிறகு ஸதஸ்ஸு கலைதலுற்றது. இப்படியால் யாஜ்ஞவல்க்யர் ப்ரம்மிஷ்டர் என்றதும் தேறினது.

## 6

6-1. ஜனகராஜன் ஆஸநத்தில் உட்கார்ந்திருந்த போது யாஜ்ஞவல்க்யர் அங்கே வந்தார் 'என்ன? பசுக்கள் வேண்டுமென்று நினைத்துத் தாங்கள் வந்தபடியா, அல்லது ஸூக்ஷ்மங்களான சில வேதார்த்தங்களுக்காகவோ' என்றுன் அரசன். இரண்டுக்குமாகவே தானென்று மறுமொழி கூறி மஹரிஷி

யானவர், 'உபதேசம் செய்யாமே ஒன்றும் வாங்கி வர வேண்டா என்று எமது தந்தையார் அருளினுர். உமக்குச் சிலர் உபதேசித்திருப்பவற்றை முன் நம்மிடம் சொன்னுல் அதன்மேல் சொல்ல வேண்டுவதென்னவென வாராய்ந்து சொல்லலாம்' எனவு முரைத்தார். அதன் மேல் அரசனும் விதக்தர் அளவாக ஆறுபேர் அப்போதைக்கப்போது தனக்குச் சொல்லியிருந்த விஷயங்களையெல்லா மெடுத்துரைக்க, யாஞ்ஞுவல்க்யரும், ஒவ்வொருவர் சொன்ன விஷயத்தைக் கேட்கும்போதும், 'சொன்னவர்கள் மாதா, பிதா, குரு என்ற பெரியோர்களுக்குப் படிந்து தெரிந்து கொண்ட பரமார்த்தங்களையே சொல்லியிருக்கின்றனர். ஆகிலும் பூரணமான உபதேசம் ஏற்படவில்லை' என்று கூறி அவரவர் சொன்னவற்றிலே மிகுதியாய் நின்றவற்றை யுபதேசித்து விட்டு, அரசன் ஆயிரம் பசுக்களைக் கொடுக்க, இவரும், 'உபதேசம் செய்யாமல் ஒன்றும் பெற வேண்டாமென்று தந்தையா ரருளினுரே யென்றுர்.

6-2. உடனே அரசன் ஆஸநத்திலிருந்து எழுந்து வணங்கி அருகே வந்திருந்து கேட்க விரும்பினுன் 'இவ்வளவு ஸம்பத்துடன் உபநிஷத்தும் — இரஹஸ்யமும் பலர் மூல மறிந்து பெற்றுள்ள நீர் பின்னிட்டு இவற்றைக் கொண்டு எங்குச் செல்வதாக நினைத்திருக்கிறீர்' என்றுர் இவர். அது எனக்கு விளங்கவில்லை யென்றுன் அரசன்; உபதேசிக்கவும் கோரினுன். அதன்மேல் யாக்ஞுவல்க்யரும்—

'மஹாராஜரே! வலக் கண்ணிலே புருஷனெருவனிருக்கிறுன். அவனுக்கு இந்தன் எனப் பெயராம். இந்தனையே இந்திரனென மறைமுகமாகச் சொல்வர். ஏனெனில், தேவதைகளுக்கு மறைமுகமாகச் சொல்வதே ப்ரியமானது. இடக் கண்ணில் அவனுடைய பத்னி யிருக்

கிருன். மனித வுருவிலுள்ள இவ்விருவர்க்கும் ஹ்ருதயா காசமே வாஸஸ்தானம். அங்குள்ள (புரீதத்து என்ற) பிண்டா காரமான மாமஸமே அன்னம். ஹ்ருதயத்தினுள் ஒன்ருேடொன்று சேர்ந்து வலே போலுள்ள நாடிகளே பட்ட வஸ்த்ரம். பரமபதத்தில் அவர்களேப் பெறுவிப்ப தாய் அவர்கள் ஸஞ்சரிக்கும் மார்க்கமானது ஹ்ருதயத்தி லிருந்து மேலே எழுந்து தலேவரை சென்ற நாடி(ஸுஷும் நா நாடி)யாம். ஹ்ருதயத்தினுள் பலவாயிரமாகப் பிரிந்து, மயிர்போன்று மெல்லிய நாடிகள் ஹிதை யென்ற பெயர் பெற்றவை யிருக்கின்றன. அவற்றின் வாயிலாலே ஜீவன் ஸம்ஸரிக்க வெளிக் கிரும்புகிருன். வலக் கண்ணிலே யுள்ள புருஷன் இந்த ஜீவாத்மாவைக் காட்டிலும் வேறு வகை யாஹார மூள்ளவன். ப்ராணனுக்கும் இந்திரி யங்களுக்கும் பவ்யப்பட்ட ஜீவனேக் காட்டிலும் ப்ரத்ய க்ஷத்திற் கிலக்காகாதவனும், பற்றற்றவனும், அயரற்ற வனும், அழிவற்றவனுமான பரமாத்மா வேறுபட்டவன். மஹாராஜரே! இப் பரம புருஷனே யறிந்தீர்; நீர் அபயம் பெற்றீர்' என்ருர்.

அரசனும், மிகவும் தெளிந்து தன்னேயும் தனது தேசத்தையும் அவருக்கு சேஷமாக்கி நின்ருன்.

6-3. (மற்ருெரு ஸமயம் நடந்த விருத்தாந்த மிந்த ப்ராம்மணத்திலே பணிக்கப்படுகின்றது.) யாஞ்ஞ வல்க்யர் ஜநகரிடம் சென்ருர். இப்போது ஜநக ருக்கு ஒரு விசேஷார்த்தமும் சொல்வதில்லே யென்று நினேத்திருந்தார். ஆனுல் அக்னி ஹோத்ர விஷயமான ஸம்வாதம் இருவருக்கும் நடந்ததில் அரசனுடைய ஜ்ஞா னத்தைக் கண்டு அவனுக்கு வரமளிப்பதாக யாஜ்ஞவல்க் யர் சொல்ல நேரிட்டது. அதன் பேரில் அவ்வரசனும் தனக்கு இஷ்டமான தெதையும் கேட்பதாக வரித்துத் தத்துவ விஷயமாய்க் கேட்க முன்வந்து, புருஷனுக்கு

ஜ்யோதிஸ்ஸு எது — புருஷன். அறிவு பெறுவ தெதனுலே ?என வினவினுன்.

யா—'ஸூர்யன்தான் ஜ்யோதிஸ்ஸு. அதனுல் தானே எங்கும் செல்வதும் வேலையைச் செய்வது மெல்லாம் நடைபெறுகின்றன'.

ஐ—ஸூர்யன் அஸ்தமித்தபோது?

யா—அப்போது சந்திரன்

ஐ—இருவரும் இல்லாத காலத்தில்?

யா—'அப்போது அக்னி (விளக்கு முதலானவை).

ஐ—''அதுவு மில்லாதபோது?

யா—வாக்கு. தனது கைகூடத் தெரியாத விருளிலே நின்று ஒருவன் பேசினுல் பேச்சைக் கொண்டு அவனை யறிவதும் அணுகுவதும் செய்வதுண்டே?

ஐ—வாக்குமில்லாத காலத்திலே?

யா—அப்போது ஆத்மாவே இவனுக்கு ஜ்யோதிஸ்ஸாம்.

ஐ—ஆத்மாவாவது எது?

யா—ஹ்ருதயத்திலே ப்ராணவாயு, இந்த்ரியங்களெல்லாமிருக்க அறிவுக்கு ஆதாரமாயிருப்பவனே ஆத்மா. இந்த வாக்கியத்தினுல் ப்ராணன் வேறு, இந்த்ரியங்கள் வேறு, அறிவு வேறு, ஆத்மா வேறு என்று தெரிவிக்கப் பெற்றதாம்). அவனே இரு வுலகங்களிலும் ஸஞ்சரிப்பவன். ஸ்வப்ந லோகத்தைச் சேரும்போது துக்க ரூபமான இந்த வுலகைக் கடக்கிருன். உடலோடு

சேர்ந்திருக்கும் வரையில் பாபங்களைச் செய்கிறான். உடலினின்று விடுபட்டவனுக்குப் பாபம் நேரிடாது. ஸ்வப்ந ஸ்தானத்திலிவன் இந்த லோகம் பரலோகமெல்லாம் கலந்தனுபவிப்பான். இவ்வள வனுபவமுள்ள ஸ்வப்ந காலத்திலே விழித்திருந்த காலத்தி லிவனுக்கு ஜ்யோதிஸ்ஸுக்களா யிருந்த சூரியன், சந்திரன், அக்னி, வாக்கு என்பவற்றால் சிறிதும் ப்ரகாசம் கிடையாது. தன்னாலேயே, அதாவது தனது சொப்பனத்திற்காக ஏற்பட்டவைகளைக் கொண்டு தானே அவற்றை யறிகிறான். சொப்பனத்திலிவன் எத்தனையோ வண்டிகள், குதிரைகள், வழிகள், குளங்கள், குட்டைகள், ஆறுகள் என்றவாறு ஆனந்தக் காட்சிகளைக் காண்கிறானே. அவை யெல்லாம் விழித்த போதிருக்கு மவை யல்ல. சொப்பனத்திற்காக ஸ்ருஷ்டிக்கப் பெற்றவை இவன் இவ்வளவு ஸ்ருஷ்டி செய்ய வல்லனோ என்ன வேண்டா. அவன் (ஸ்ருஷ்டியைச் செய்பவனாக வேத லோகங்களிலே ப்ரசித்தி பெற்றவன் பரமாத்மா) அல்லனோ இவற்றைப் படைக்கிறவன். இவ்விஷயத்தைப் பற்றிய பத்யங்களும் சில வுள—(அவற்றின் பொருளாவது)—

உடலிலெல்லாம் உறங்கிக் கிடக்கும்போது உடலை யசையாதபடி செய்துகொண்டு ஸ்வப்னங்களை யனுபவித்துவிட்டு தனக்குத் தானே ப்ரகாசமான அந்தப் புருஷன் திரும்பவும் விழிகருவிகளுடன் முன் இருந்த இடம் வந்து சேருகிறான். ப்ராண வாயுவைக் கொண்டு தன் கூட்டைக் காப்பவனாய் அழியாதபடி வெளியிலே தனக்கு இஷ்டமான இடமெல்லாம் திரிந்து பிறகு திரும்புகின்றான். சொப்பனத்திலே பலவகை ரூபங்க ளெடுக்கிறான். அழகிய ஸ்திரீகளோடு ஆனந்த மனுபவிப்பதும், உண்பதும், ஒரு சமயம் பயங்கர வஸ்துக்களைக் கண்டு பயப்படுவதுமாக இருக்கிறான், இப்படிப்பட்ட ஆத்மாவை யார் அறிகிறார்

கள்? அதற்கு போகத்திற்குக் கருவிகளாவுள்ள உடல் முதலியனவே உணரப்படுகின்றன. தூங்குபவனை விரைவிலெழுப்பக் கூடாதென்பர். ஏனெனில், அவன் எல்லா இந்திரியங்களோடும் வெளியிலே சென்றவன். இவர்களுக்காக விரைவில் வந்து புகும்போது தாறுமாருக இடம் மாறி இந்திரியங்களைப் புகுவித்தாளுகில் பிறகு சிகித்ஸைக்கு வழி யேது எனவாம்.

இப்படிச் சொப்பன காலத்திலே ஆத்மா தனக்குத் தானே ஜ்யோதிஸ்ஸாகிறதென வாராய்க—என்ருர்.

இதையெல்லாம் கேட்டு ஜனகராஜன் தெளிந்து ஆயிரம் கோக்களை யளித்து, 'இனி எனக்கு மோக்ஷத்தைப் பற்றி யருள வேண்டும்' என்ருன். யாஜ்ஞுவல்க்யரும் கீழ்ச் சொன்ன நிலைகளைச் சுருங்கச் சொல்லி, உறங்கும் நிலையை யுணர்த்தி, அந்நிலையிலே பரமாத்மாவோடு இவ்வாத்மா சேர்ந்து, காதலியைக் கட்டியணைத்திருக்கும் காதலன் வெறென்றுமே யறியாதிருக்குமா போலே யிருக்கின்ருனென்றும், இவனுக்கு உற்ருர், உறவினர், உவர், உலகம், புண்யம், பாவம் துக்கம் என்றவாறுள்ளவற்றில் ஒன்ரேடு இணைப்பு அப்போதில்லை யென்றும், அவனடைந்துள்ள பரமாத்மா பரமானந்தமான வஸ்துவென்றும், அந்த வானந்தமானது, (தைத்ரீயோபநிஷத்தில் தெரிவித்தவாறு) மனுஷ்யானந்தம், பித்ருக்களின் ஆனந்தம், தேவானந்தம், சதுர்முகனுனந்தம் என மேன்மேலுள்ள ஆனந்தங்களுக்கு நூறு மடங்கு மேம்பட்டதென்றும், அவ்வளவு ஆனந்தம் ஜ்ஞான வைராக்யங்களாலே பாபங்களினின்று விடுபட்டவனுக்கு முண்டென்றும் கூறினர்.

மீண்டும் மஹாராஜன் கேட்க,—இந்த விழிப்பு, சொப்பனம், உறக்கம் என்ற நிலைகளுக்கு மேலான இறப்

பென்ற நான்காம் நிலையையும், அப்போது பரமாத்மாவி லுல் அவன் வேறிடம் கொண்டுபோகப் படுவதையும், புண்ய பாபங்களுக்குத் தக்கவாறு புதிய சரீரம் பெறு வதையும் தெரிவித்து, மோக்ஷம் பெற ப்ரம்மஜ்ஞானத்தி லமர்ந்தவன் இங்கு ப்ரம்மானுபவம் செய்வதையும், அப் போது பாம்பினு லுறிக்கப்பட்ட தோல்போல் அவனுடல் கிடப்பதையும், பிறகு புனர்ஜன்ம மின்றி தேவயாந மார்க்கத்திலிழிந்து ஸூர்ய மண்டலம் புகுந்து மோக்ஷம் பெறுகின்றமையையும், கிடைக்காத மானிடப் பிறவி கிடைத்தற் கேற்ப இப்போதே யிங்கு ப்ரம்மஜ்ஞானம் பெருவிடில் பெருங்கேடு விளையு மென்பதையு மறிவித்தார்.

அவனே ப்ராணேந்திரியங்களுக்குச் சக்தியளிப் பவன், மனதொன்ருலே தான் அவனைப் பார்க்கவேண்டும் அவன் ஒருவனே எங்குமுளன். அவன் மேன்மைக்கு அளவில்லை. அழியாதவன். ஒருவித குற்றமுமில்லாதவன். அவனைப் பற்றினவைகளைத் தவிர்த்து வேறு சொற்களை கற்கலாகது. கர்மாதீனமான பிறப்பில்லாத இப்பரமாத்மா ப்ராணன்களோடு சேர்ந்து விஜ்ஞான ஸ்வரூபியான ஜீவாத்மாவுக்கு அந்தர்யாமியாய் ஹ்ருதயாகாசத்திலிருக் கிருன். அவனே ஸர்வத்திற்கும் தாரகனும் நியமனம் செய்பவனும் ஸ்வாமியுமா யிருக்குமாத்மா, அவன் புண்யம் செய்து புதிதாக ஸம்பாதிக்க வேண்டிய தொன்று மில்லை. பாவம் செய்தானென நேரும் குறைவு மவனுக் கில்லை. இவ் வுலகங்களை யெல்லா மொன்ருேடொன்று மோதி யழியாதபடி எல்லா வஸ்துக்களும் அததன் தன்மையை விட்டு வேருெரு தன்மை பெருதபடி நிலையில் நிறுத்துகின்றவன். இவனை வேதாத்யயநம், யஜ்ஞம், தானம், தபஸ்ஸு என்ற தர்மங்களை நிஷ்காமமாகச் செய்து அந்தணர் அறிய விரும்புகின்றனர். இவனையே யோக காலத்திற்போல் எப்போதுங்கூட ஆராய்ந்து

வண்ண மிருப்பர். இவனைப் பெறுதற்காக ஒன்றிலும் பற்றின்றி ஸந்யாஸமும் செய்து கொள்கின்றனர். ப்ரபஞ் சத்திற் போலன்றி விலக்ஷணமானவிவனை யுபாஸிப்பவ னுக்கு, 'புண்யமும் பாவமும் ஏராளமாகச் செய்துள் ளோமே. அவற்றை யனுபவிக்கத்தான் நம் காலமெல்லாம் செல்லும். நமக்கேது மோக்ஷம்?' என்ற கவலை கிடை யாது. இவனை யுபாஸிப்பவனுக்குப் புண்ய பாபங்கள் லேபியா—பயன்படா. ஆகவே இப்பரமாத்மாவைக் கேட்டறிந்து இந்திரியங்களை அடக்கி, தீய வினைகளையும் காம்ய கர்மங்களையும் செய்யாமே, சீதோஷ்ண ஸுக துக்கங்களை யெல்லாம் பொறுத்துக் கொண்டு மனதை நன்கு செலுத்தித் தனக்குள்ளே இருக்கும் இவ்வாத் மாவை மனத்தினாலே பார்த்துப் புண்யபாபங்களைக் கழித்த பிறகு ஜீவாத்மா விளங்குகிறான். இவ்வாத்மாவே பரப்ரம்மம்' எனவுமுபதேசித்தார்.

இவ்வாறெல்லாம் யாஜ்ஞவல்க்யர் உபதேசிக்க ஜனகராஜனும் அவருக்குத் தனது இராஜ்யத்தையளித்து தன்னையும் அடிமையாக்கிக் கொண்டே னென்றனன். இந்தப் பரமாத்மா மோக்ஷந்தானளிக்கும் மென நினைக்க வேண்டா. அன்னம், பணமென்றவாறு ஐச்வர்ய மனை வற்றையு மளிக்கும். அச்சம் மூப்பு இறப்பென்றவாறான தோஷமொன்று மில்லாத இதனை யுபாஸிப்பார்க்கு இது ஸம்ஸார பயத்தைப் போக்கி மோக்ஷமு மளிக்கும்.

6-5. முன் மைத்ரேயீ ப்ராம்மணத்திற் கூறப்பட்டதே இங்குமொரு வகையில் மறுபடி கூறப்பட்டுள்ளது. ஒரு தரத்திற்கு இரண்டுதரமாகச் சொன்னால் உள்ளது மனதிற் படியும்; ஊற்றமு முண்டாகும். இங்ஙன முபதேசமெல் லாம் செய்த பிறகே யாஜ்ஞவல்க்யர் துறவறம் துவங் கினது.

6-6. முன்போல் மறுபடி யொரு குருபரம்பரையைக் கூறினது இந்த ப்ராம்மணத்தில்.

## *(4)*

7, 1—5. முதலில் ப்ரணவத்தை ப்ரம்ம மென்றும் ஹ்ருதயத்தை ப்ரஜைகளுக்குப் பதியானவ னென்றும் ப்ரம்மமென்றும் உபாஸிப்பதையும், உபாஸகனிடம் தர்மம், தானம், தயை என்ற மூன்று மிருக்கவேண்டு மென்றும் கூறி, மேலே இருவகை யுபாஸநங்களை விதிக்கின்றது. அதற்காக முதன் முதல் இவ்வாறு கூறியுள்ளது அது, இது எல்லாம் பூரணமென்பதேயாம். பூர்ணத்தினின்றும் பூர்ணம் உத்க்ருஷ்டமானது. பூர்ணத்தைச் சார்ந்த பூர்ணத்தை அழித்துப் பூர்ணமொன்றே முடிவிலும் நிற்கிறது என்றதாம் அது இதன் கருத்தென்னவெனில்—இவ்வுலகம் மேலுலகமெல்லாம் வேதத்திற் கூறியபடி பிரமனால் ஸ்ருஷ்டிக்கப்படுகின்றதாகையாலே வேதமெதிலும் நிறைந்திருக்கிறது—காரணமான வேதம் கார்யமான ப்ரபஞ்சத்தைக் காட்டிலும் மேலானது—கார்யமாய் காரணம் நிறைந்துள்ளதுமான உலகத்திற்கு மேலான வ்யாஹ்ருதி (பூ:, புவ:, ஸுவ:) என்னப்பட்டவைகளுக்கு லயஸ்தானமாய் ஸர்வத்திற்கும் காரணமான ப்ரணவமே கடைசியில் மிகும் என்றதாம். இப்படியுள்ள ப்ரணவத்தை ப்ரம்மமாக உபாஸிக்க வேண்டும். (இந்த பூர்ணமென்கிற மந்த்ரத்திற்கு ப்ரம்மம் பொருளென்பதை பரிஷ்காரத்தில் காண்க.

ப்ரஜைகளுக் கெல்லாம் ஸ்வாமியா யிருப்பவனின் ப்ரஜைகள் மூன்று சாதியினராவர்—தேவதைகள், மனிதர்கள், அசுரர்களென்றவாறு. மூன்று வகுப்பினரும் தகப்பனை யாச்ராயித்தனர். அவரில் தேவர்கள் உபதேசிக்கக்

கேட்டுக்கொண்ட பொழுது 'த' என்று உபதேசித்து 'தெரிந்து கொண்டீர்களா? சொல்வது தெரிந்ததா?' என வினவினார். தெரிந்தது தமம் வேண்டும். அதாவது இந்திரிய நிக்ரஹம் செய்யவேண்டு மென்றபடி' என்றனர் தேவர். ஆம் என்றார் தந்தை. தேவதைகள் எப்போதும் ஐச்வர்ய மிகுதியாலே போகங்களி லிழந்தவர்களாகையாலே அதுவேண்டாமென்று தங்களைச் சிக்ஷிப்பதாக வுணர்ந்து 'த' என்பதற்கு தமம் என்று பொருள் கொண்டனர். இவ்வண்ணமே மனிதரிடம் 'த' என்றபோது அவர்கள் உலோபிகளானபடியாலே தானம் செய்யுங்கோள் என்கிறாரெனவுணர்ந்தனர். அஸுரர்களிடம் அந்தச்சொல்லைச் சொன்னபோது, அவர்கள் கொடுமை செய்பவராகையாலே தயை புரியுங்கோள் என்கிறா ரென்றறிந்தனர். இம்மூன்று தர்மங்களையும் சேர்த்துச் சொல்வது போல் தோன்றுகிறது. வானத்தில் மேகமானது த, த, த என்று கர்ஜிப்பதைக் கேட்கும்போது. ஆகையால் இம்மூன்றையும் அனுஷ்டித்தல் வேண்டும்.

ஸதயமென்று பரப்ரம்மத்திற்குப் பெயராம். ப்ரம்மத்தினின்று பிறந்த ப்ரஜாபதியின் புதல்வர்களான தேவர்கள் ஸத்யத்தையே யுபாஸிக்கின்றனர். ஸத்திய மென்ற சொல்லில் ஸத், தி, யம் என மூன்று பதங்கள் உள சேதநாசேதநேச்வரர்களை இப்பதங்கள் அடைவே கூறும். இந்த ஸத்ய ப்ரம்மம் தான் ஆதித்ய மண்டலத்திலேயும் கண்ணிலு மிருப்பதாம். இதற்கு பூ:, புவ:, ஸுவ: என்ற வியாஹ்ருதிகளே உடலின் முக்கியமான அவயவங்கள். ஸூர்ய மண்டலத்தில் உபாஸிக்கப்படும் ரூபத்திற்கு அஹ எனப் பெயராம். கண்ணி லுபாஸிக்கப்படும் ரூபத்திற்கு அஹம் எனப் பெயர். இவ் வுபாஸநங்களி லொவ்வொன்றுக்கும் பாபங்கள் கழிந்து விளங்குவது பலனும்

7. 6—11. இதற்குமேல் சாந்தோக்யத்திலே செவ்வனே சொல்லப் பெற்ற சாண்டில்ய வித்யையும், மின்னலை ப்ரம்மமாக உபாஸிப்பது, வாக்கைப் பசுவாக உபாஸிப்பது, மரண காலத்திலே வயிற்றிலுள்ள அக்நிக்கு ஆஹாரத்தைப் பக்குவம் செய்யச் சக்தியில்லாமை, மோக்ஷம் போகிறவன் தேவயாந மார்க்கத்தினுலே ஆத்யாத்மிக ஆதிபௌதிக ஆதிதைவிக தாபங்களுக் கிடமாகாத ப்ரம்மலோகம் போய்ச் சேர்ந்து அங்கேயே காலமனைத்தும் களித்திருப்பது போன்றவையும் பணிக்கப் பெற்றன.

7-12. அன்னத்தையும் பிராணனையும் சேர்த்து ப்ரம்மமாக உபாஸிக்க வேண்டுமென்று நினைத்திருந்த பிராத்ருத னென்னும் பிள்ளையைப் பார்த்து அவன் தகப்பனுர், அன்னத்தை வி என்றும் ப்ராணனை ரம் என்றும் உபாஸிக்க வேண்டும். ஸர்வ பூதங்களும் அன்னத்திலே வியாபித்து ப்ரவேசித்திருப்பதாலே அன்னம் 'வி'யாம். அவை ப்ராணனுலே ரமிக்கின்றமையால் ப்ராணன் 'ரம்' ஆகும். என வுபதேசித்தார்.

7 13. ப்ராணனையே ருக்காகவும், யஜுஸ்ஸாகவும் ஸாமமாகவு முபாஸித்தல் உரைக்கப் பெற்றது.

7-14. காயத்ரீ ப்ரம்மோபாஸநம் இங்கே விரிவாகக் கூறப்படுகிறது—காயத்ரியின் முதற் பாதத்தை மூன்று லோகங்களாக வுபாஸிப்பவன் மூவுலகி லெதையும் பெறுவான். இரண்டாம் பாதத்தை மூன்று வேதங்களாக வுபாஸிப்பவன் அவற்றில் கூறப்படும் பலனை யெல்லாம் பெறுவான். மூன்றும் பாதத்தை ப்ராண—அபாந-வ்யாநங்களாக உபாஸித்தால் ஸர்வ ப்ராணிகளையும் வசமாக்கிக் கொள்வது பெறப்படும். நான்காம் பாதமு மிதற்கிருக்

கின்றது. அதற்கு தர்சதபத மென்று பெயர். அது மேலே ஸூர்ய மண்டலமாகத் தரிசிக்கப் படுகிறதன்றோ! இது பரோ ரஜஸ்ஸு. ரஜஸ்தமோ லோகங்களைக் கடந்து இருப்ப தொன்று. இதனை யிதன் பொருளான பரப்ரம்ம மாக வுபாஸித்தால் புகழும் ஸம்பத்தும் பெறப்படும். இந்த காயத்ரீயானது நான்காம் பாதத்திலும், அது ஸத்யமா யுள்ள கண்ணிலும், கண்ணானது பெலனுயுள்ள ப்ராணனி லும் பிரதிஷ்டை பெறுகிறதாகவு முபாஸிக்க வேண்டும். ப்ராணன்களுக்கு கயமெனப் பெயராம். கயங்களைக் காப்பதாலே இது காயத்ரி யெனப்படுகிறது. காயத்ரீ ஸாவித்ரியை யுபாஸிப்பவன் எதை ப்ரதிக்ரஹித்தாலும் கெடுவதில்லை. அதனால் அவனுக்கு தோஷம் சிறிதும் கிடையாது. காயத்ரிக்கு உபஸ்தானம்-(மந்த்ரத்தைச் சொல்லி நெருங்கி நின்று புகழ்தல்) செய்யச் சில முறை களுள. அதை யனுஷ்டிப்பவன்—தான் இஷ்ட பலனைப் பெறலாம்; சத்ருவானவன் பலனைப் பெறாதபடியும் செய்ய லாம். ஜநகர் புடிலரென்பவரைப் பார்த்து, காயத்ரீயின் உபாஸனம் செய்வதாகச்சொன்னீரே; ஏன் யானை சுமக்க வேண்டுமாறு கிடக்கும் இவ்வளவு பாபங்களைச் சுமக்கி றீரென்று கேட்டார். அதற்கு அவர் எனக்கு எது முகமென்று தெரியவில்லை யென்றார். ஜநகர் அவருக்கு அக்னி யென்றதை முகமாக வுபதேசித்தார். அக்னி எரிக்குமா போலே அப்போது இவ் வுபாஸநம் எல்லாப் பாபங்களை எரித்து விடும். உபாஸிப்பவனும் பரிசுத்த னாய் ப்ரம்மத்தைப் பெற விரகுடையவனாய் மூப்பு இறப்பு களினின்றும் மீள்வான் என்றது.

7-15. ப்ரம்மோபாஸநம் செய்பவனுக்கு ப்ரார்த் தனைக்காக நான்கு மந்த்ரங்கள் இங்கே யோதப்படுகின் றன. இவை யீசா வாஸ்யத்திலு முள்ளவையே. இவற் றின் பொருளாவது—பொன் மயமான பாத்திரத்தினாலே

முகம் மூடப்பட்டிருக்கிறது. அதனால் ஸத்தியத்திற்கு இயற்கையாயுள்ள தர்சனம்-பார்வை இராமலிருக்கிறது. அதை நீக்க வேண்டும். ஸூர்யபகவானே! உக்ரங்க ளான கிரணங்களை யொதுக்கிச் சிறந்த ப்ரகாசத்தைச் சேர்த்தமைத்துக் கொள்வாயாக. யான் உனது திவ்ய மங்கள ரூபத்தைக் காண்பேன். அந்த உயர்ந்த புருஷ னாக யானாகின்றேன். ஆத்மா அழியாத தொன்று. உடல் பஸ்மமாய் விடக் கூடியது. ப்ரணவத்தின் பொருளான பரம புருஷனே! ஸர்வ கர்மஸமாராத்யனே! யான் செய் யும் நற்செயலை நினைவுறுவாயாக. நல்ல மார்க்கத்தாலே யென்னை எனது சொத்துள்ள விடத்திற்கொண்டு சேர்க்க வேண்டும். எல்லா வகையான அறிவுகளையு மறிந்தவ னல்லையோ நீ, வலித்து வதைக்கு மெனது பாபங்களைப் போக்கவேணும். உனக்கு உயர்ந்த நமஸ்காரச் சொல் லைச் செய்துவருவேன்' என்றதாம்.

8—1. 2. 3. ப்ராண வித்யை, பஞ்சாக்நி வித்யை, மந்த்த கர்ம என்ற மூன்றும் இம்மூன்று பிராம்மணங் களிலே முறையே கூறப்பெற்றன. இவற்றைச் சாந்த் தோக்யோபநிஷத் ஸாரத்திலேயே விரித்துள்ளோம். மந்த்தகர்மாவில் இங்குச் சிறப்பாகவுள்ளது கீழ்வருமாறு: நெய்யினால் ஹோமங்களைச் செய்த பிறகு மந்த்தமென்கிற வஸ்துவை ப்ராணனைப் புகழும் மந்த்ர மொன்றையுரைத் துக் கொண்டே கையில் வைத்துக்கொண்டு, காயத்ரியினா லும் மற்றும் சில மந்த்ரங்களாலும் விதிப்படி ஆசமனம் செய்து கையைக் கழுவி அக்னிக்கு மேற்கிலே கிழக்கில் தலை வைத்து இரவில் படுத்திருந்து உதயத்தில் ஸூர்ய னுக்கு உபஸ்தானம் சில மந்த்ரங்களைக் கொண்டு செய்ய வேண்டும். இந்த மந்த்த திரவியத்தின் மாஹாத்ம்யத்தை உத்தாலகர் தமது சீடரான யாஜ்ஞவல்க்யரிடமும் அவர் மதுகரிடமும், மதுகர் பைங்க்யரிடமும், பைங்க்யர் சூலரிட மும், அவர் ஜாநகி யென்பவரிடமும், அவர் ஸத்ய காம

ரிடமும், ஸத்யகாமர் தமது பல சிஷ்யர்களிடமும் சொன்ஞர்கள்,—'இந்த மந்த்த திரவியத்தாலே உலர்ந்த கட்டையை நனைத்தால் அதுகூட துளுத்துக் கப்பும் கிளையுமாய்விடும் என்றதா மது. இந்த மந்த்த கர்மாவிற்கு வேண்டிய ஸ்ருவம், சமஸம், இத்மம், உபமந்தநி என்று கருவிகள் அததி மரத்தினின்று செய்யப்பட வேண்டும். மந்த்த திரவியங்களாவன—கிராமத்தில் விளையும் நெல், யவம், எள்ளு, உளுந்து, அணு பிரயங்கு, கோதுமை, மஸூரம், கல்வம், கலகுலமென்ற பத்துத் தானியங்களாம். இவற்றை யரைத்துத் தயிர், தேன், நெய் இவற்றில் ஊர வைக்க வேண்டும். ஹோமங்களை யெல்லாம் நெய்யைக் கொண்டே செய்ய வேண்டும்.

8–4. இந்த பிராம்மணத்திலே சொல்லுமவை பின்வருமாறு—பிறந்த பிள்ளை தனக்கும் தன் தகப்பனுக்கும் சிறந்த பலன்களை மேலுலகிற் பெறவிக்கும்படி யிருப்பதற்காக பிள்ளை பெறுகிறவன் முன்னமே என்னவிதமாக நடந்து கொள்ள வேண்டும். என்ன கார்யங்களைச் செய்ய வேண்டு மென்றவாறு பல விஷயங்கள் ஓதப்பெற்றன. ஒரு வேதமோதுபவன், இரு வேதங்க ளோதுபவன், மூன்று வேதங்களை யோதுபவன், எல்லா வேதங்களையு மோதுபவன் என்ற படிகளி லொன்றையும், தீர்க்கமான ஆயுளையும் பிள்ளைக்கு விரும்பினாலும், படித்து ப்ரஸித்தி பெறும் பெண் பிறக்க வேண்டுமென விருப்பமிருந்தாலும் செய்ய வேண்டும் சில நன்முறைகளு மோதப் பெற்றன.

8-5. இது வம்ச ப்ராஹ்மணம், தனக்கு உபதேசம் செய்யு மாசார்யனைத் தொடங்கி பரப்ரம்ம மென்கிற பரம புருஷனை ப்ரதமாசார்ய னளவாக குருபரம்பரையை யநுஸந்தித்தல் வேண்டுமென்பதை யறிவிக்க இது பிறந்தது.

இக் குருபரம்பரை முன் கூறப்பெற்ற பரம்பரைகளை விட வேறானது. பரப்ரம்மம், ப்ரஜாபதி யென்ற அடைவில் வரும் பரம்பரை யொன்று, ஆதித்ய பகவானிடமிருந்து வரும் பரம்பரை மற்றொன்றென்ற இரு பரம்பரைகள் பிறகு ஒன்று சேர்ந்த வண்ண மிங்கே யுள்ளது.

ஆதித்யனிடம் யாக்ஞவல்க்யர் சுக்ல யஜுஸ்ஸுக்களைப் பெற்றாரென்பதும் இங்கே குறிக்கப்பட்டது. யாக்ஞவல்க்யர் முதலில் வைசம்பாயனரின் சீடராயிருந்து பிறகு அவரை விட நேரிட்டபோது நேராக ஸூர்யனை யுபாஸித்து யாரு மறியாத சுக்ல யஜுஸ்ஸுக்களையு மறிந்து கொண்டாரென விஷ்ணு புராணம் முதலியவற்றின் விரிவாகக் கூறப்பட்டுள்ளதை வேறிடத்தில் வெளியிட்டிருக்கிறோம்.

இங்ஙனம் ஒவ்வொரு ப்ராம்மணத்தையு மெடுத்து அதில் கூறப்பட்டது இன்னதெனச் சுருக்கமாக வரைந்தனம்.

இது ப்ருஹதாரண்ய கோபநிஷத்தின் ஸாரமாம்.
தசோபநிஷத்து என்கிற பத்து உபநிஷத்தின் ஸாரம் முற்றிற்று.

சுபமஸ்து.

---

## 11. ச்வேதாச்வதரோபநிஷத்து

உபநிஷத்துக்களில் ஈசாவாஸ்யம் முதல் பிருஹதாரண்யகம் வரையிலாம் பத்து உபநிஷத்துக்கள் த்வைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம் என்ற மூன்று மதத்தினராலும், மற்றும் பல வேதாந்திகளாலும் உரையிடப்பட்டிருக்கின்றன. வேதவ்யாஸரென்ற பாதராயண முனிவர்

தமது சாரீரகசாஸ்த்ரமாகிற ப்ரம்மஸூத்ரத்தில் இந்தப் பத்து உபநிஷத்துக்களைப் போலே பிற உபநிஷத்துக்களி லும் சிலவற்றைக் கையாண்டிருக்கின்றாரென்பது எல்லா மதத்தினரும் இசைந்ததேயாம். இதனை இவ்வுபநிஷத் பாஷ்ய பரிஷ்கார பூமிகையில் விளக்கியுள்ளோம். அவ் வண்ணமே பகவத் ராமானுஜஸ்வாமிபாதர்களும் தமது ஸ்ரீபாஷ்யம் முதலான க்ரந்தங்களில் கையாண்டிருப்ப தால் அத்தகைய உபநிஷத்துக்களுக்கும் உபநிஷத் பாஷ்யகாரர் என ப்ரஸித்தி பெற்ற ஸ்ரீரங்கராமாநுஜ ஸ்வாமிகள் பாஷ்யமியற்றியுள்ளார். ஆனால் ஈசாவாஸ் யோபநிஷத்துக்கு ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்த பாஷ்யமிருப்பது போல் பத்துக்கு மேலான உபநிஷத்துக்களில் ஸுபாலோபநிஷத்திற்கு ஸ்ரீச்ருதப்ரகாசிகாசார்யர் அருளிச்செய்த பாஷ்யமிருப் பதை நினைத்து மற்ற உபநிஷத்துக்களுக்கு மட்டுமே இவர் பாஷ்ய மிட்டருளினபடி.

அவ்வுபநிஷத்துக்களில் முதன்மையானது ச்வேதாச் வதரோபநிஷத்து. இது நூற்றெட்டு உபநிஷத்துக்களில் பதினோராம் உபநிஷத்தானபடியாலே மேலுபநிஷத்துக் களுக்கு முந்தியதாம். இதில் அத்யாயங்கள் ஆறு. சித்து, அசித்து, ஈச்வரன் என மூன்றாகத் தத்துவங்களை வகுத்ததற்கு இதுவே மூலாதாரமாம். மற்ற உபநிஷத் துக்கள் போன வழியை விட்டு இது வேறு வகையிலே அழகாகத் தத்துவத்தை உபதேசிக்கிறது. இது உபதே சிக்கும் வகையாவது—

1. ப்ரம்மவாதிகள் பேராராய்ச்சி செய்து ப்ரம்மம் இன்னதென்பதை ஸ்தாபிக்க இழிந்தனர்.—நாம் பிறப்ப தும், இருப்பதும், இருந்த காலம் பல தொழில்களைச் செய் வதுமாயிருப்பதற்குக் காரணமாக எல்லோருமிசைந்த

ப்ரம்மமெனப்பட்ட வஸ்து யாதென ஆராய்ந்தனர். உல கில் காரணங்களாகத் தோற்றும் பலவற்றைக் கண்டு பலர் பலவிதமாகச் சொல்லுவர். காலமே காரணமென் பர் சிலர். இயற்கை யென்பர் மற்றும் சிலர். முன்வினை காரணமென்பாருமுளர். திடீரென எதுவும் உண்டாகிற தென்பர் சிலர். இவ்வாறு, பஞ்சபூதங்கள், மூல ப்ரக்ருதி, ஜீவன் என்ருற் போன்றவற்றிலொன்றைக் கொள்வது முண்டு. இப்படி ஏதேனுமொன்றை மட்டும் காரண மாகக் கூறுவது பொருந்தாது. இனி, இவையெல்லாம் சேர்ந்து காரணமென்னில், சேர்ப்பது யார்? ஜீவாத்மா வுக்கு இவற்றையெல்லாம் சேர்க்க சக்தியுமில்லை. அவனே ஸ்ருஷ்டி வலையிற் சிக்கி ஸுகம் போல் துக்கமும் அனுபவித்து வருவதாலே, தானே தனக்கு இவ்வாறு செய்து கொண்டானென்ன வொண்ணுது. இவ்வாறெல்லா மாராய்ந்து ப்ரம்மவாதிகள் ஜீவாத்மாவுக்கு மேம்பட்ட தேவாத்மாவின் சக்தியே ஸத்துவ ரஜஸ்தமோ குணங் களையுடையதா யிருக்கிறதொன்றென்றும். அதனையும், காலத்தையும், ஜீவாத்மாக்களையும், மற்றுமுள்ள காரணங் களையும் ஆண்டு தகுமாறு உபயோகிக்கிருன் அந்த தேவாத்மா என்றவனெனவும் முடிவு செய்தனர்.

இந்த மூலப்ரக்ருதி யென்ற நதியின் ப்ரவாஹமான ஸம்ஸார சக்கரத்திலே சுழன்று வருகின்ற சேதனர் களான ஜீவர்கள் வேறு. இவற்றை நியமிக்கு மிறைவன் வேறென விவேகமுள்ளவன் இறைவனின் அநுக்ரஹத் திற்குப் பாத்ரமாகி மோக்ஷம் பெறுகிருன். ஆகவே சேதநன், அசேதநம், ஈச்வரனென மூன்று தத்துவங்கள் உள. எல்லாமறிந்த ஈச்வரனென்வன். அவ்வாறறிவில் லாதவரும் சக்தி யற்றவர்களுமாவர் ஜீவர். அவர்களுக்கு போகத்தை யளிப்பதற்காக அநாதியாக உள்ளது ப்ரக் ருதி யென்பது. போகமாவது வினைப்பயன்களின் அனு

பவம். இப்படி ப்ரம்மமானது குறையற்ற குணங்கள் நிறைந்த சோதியாகவும், சேதனர்களுக்கு அந்தர்யாமியா கவும் அசேதநங்களுக்கு அந்தர்யாமியாகவும் மூன்று வித மாயிருக்கின்றது. அதை விசதமாக அறிந்து எப்பொழுதும் அதனையே சிந்தனை செய்துக்கொண்டு யோகத்திலிழிந்து தத்துவத்தைக்கண்டவன் மாயையினின்று விடுபடுகிறான். அநாதியாகச் சேர்த்துவைத்திருக்கும் வினைகள் மாள் கின்றன. பிறவி, இறப்பு முதலான துன்பங்கள் தொலை கின்றன. உடலினின்று பிரிந்தபோது பரமாத்மாவினிடம் சென்று கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைப் பெற்று அவனிடம் வாழ்ந்து வருகிறான். இப்படிப்பட்ட ப்ரம்மத்திற்கு மேல் ஒன்றும் இல்லை. இது அரணிக்கட்டையில் அக்னி போன்றது. எளிதிலறிய வியலாதது. ஜீவாத்மா கீழரணிக் கட்டை ப்ரணவம் மேலரணியாம். இதைக் கொண்டு த்யானம் செய்தலே கடைவதாம். மறைந்துள்ள அதை இப்பெருஞ் செயலால் க்ரமமாகக்காணவேண்டும். எள்ளில் எண்ணெய் போலவும், தயிரில் நெய் போலவும், ஆறு களில் தண்ணீர் போலவும், அரணிக்கட்டையில் அக்னி போலவும் ஜீவாத்மாவினுள் பரமாத்மா மறைந்திருப்ப தைத் தவம் செய்து தெரிந்து கொள்ள வேண்டும்.

2. த்யானம் செய்பவர் கர்மாநுஷ்டானத்தை விடாமற் செய்து வரவேண்டும். பரமாத்மாவிற்கு அந்தரங்கர்களின் (அவனிடம் நெருங்கியுள்ள விஷ்வக்ஸேநர், ஆசார்யர் போன்றோரின்) அனுக்ரஹம் பெறவேண்டும். எம்பெரு மானை வாயார வாழ்த்தி அவனது அருள் பெற்று அவனி டம் மனத்தைப் பதிய வைக்கவேண்டும். பருக்கைக் கற்கள், மணல் முதலியன இல்லாததும், சத்தம், சூடு, குளிர்ச்சி முதலியவற்றிற்கு இடமாகாததும், மனத்துக்கு அனுகூலமாயும், மேடுபள்ளமின்றியும், சுத்தமாயுள்ள காற்றில்லாக் குகைபோன்றதோரிடத்திலே, தலை, கழுத்து,

மார்வு இவற்றை நன்கு நிமிர்த்தி, தகுந்த ஆஸநத்தில் வீற்றிருந்து புலன்களினின்று பொறிகளைப் பறித்து, ப்ராணுயாமங்களை ஒழுங்காகச் செய்து மனத்தை இலக்கில் நிறுத்தவேண்டும். பரப்ரம்மம் இனி த்யானத்தில் தோன்றுமென்பதற்குப் பல அறிகுறிகள் உண்டாம். யோகத்தினுல் அக்னியைப் போன்ற உடல் பெற்றவனுக்கு, நோய், மூப்பு, இறப்பு என்பவை நெருங்க மாட்டா. உடல் இலகுவாயிருக்கும்; நிறமும் பெறும். குரல் செம்மையாயிருக்கும். நறுமணமுண்டு. மூத்ரபுரீஷங்கள் குறைபடும். த்யாயனத்தில் பளபளப்பான பிம்பம்போலும் தீபம்போலும் விளங்கின ஜீவாத்மாவினுள்ளே பரமாத்மாவைக் கண்டவன் கட்டி நின்று விடப்படுகிருன். ஸர்வாந்தர்யாமியான பெருமானவன்.

3. ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்பவன் ஒருவனே. மோக்ஷமளிப்பவன் அவனே; வேறெருவனல்லன். எல்லாவற்றையும் செய்ய வல்லமை வாய்ந்தவன். மோக்ஷத்திற்கு விரகான அறிவையு மளிப்பவன் அவன். வினைகளை யெல்லாம் போக்கும் அவனது திவ்ய மங்கள விக்ரஹமும், ஆயுதம் முதலானவையும் த்யானம் பண்ணப்படும். உள்ளும் புறமும் பரந்துள்ள அவன் புருஷஸூக்தத்தின்படி இந்த ப்ரக்ருதி மண்டலத்திற்கு மேலான இடத்திலே சூரியனைப் போன்று விளங்குபவனே யாவன். அவனுக்கு மேம்பட்ட வஸ்து ஒன்றுமில்லை. அங்குள்ள அவனே இங்கெங்கும் பரந்துளன். திவ்ய மங்கள விக்ரஹமுள்ள அவனுக்குப் பிணி, பசி, மூப்பு என்றுற் போன்றவை சிறிதும் கிடையா. அவ்வாறு அவனை யறியாதாரே துன்பத்துக் காளாவர். அவனே பகவா னெனப்பட மிக்க மங்களமானவன். மோக்ஷத்திற்கு ஸாதகமான புத்தியை விளைவிக்கும் ஸத்துவ குணத்தையும் அவனே அளிப்பான். அவனே

உபாஸிப்போர்க்கு ஸுலபனுவதற்காக ஒவ்வொருடைய ஹ்ருதய கமலத்திலும் அந்தர்யாமி ரூபத்துடன் அவதரித்துள்ளான். அவனுக்கு மேற்பட்ட ஸூக்ஷ்ம வஸ்து கிடையாது; பெரிய வஸ்துவுமில்லை. அவனை யறிந்தே வீடு பெற வேண்டுமென்று ப்ரம்மவாதிகள் பணிப்பர்.

4. அக்ஷரங்களெல்லாம் அகரத்தினின்று உண்டாகின்றன. அகரத்தின் பொருளான பரமாத்மாவினிடமிருந்து உலகனைத்தும் உண்டாகிறது; அவ்விடமே மறைகிறது. அவன் அனைத்துக்கும் அந்தராத்மாவானபடியாலே அனைத்துக்கும் பேரான சொற்களெல்லாம் அவன் வரையிலாகப் பொருள் பெறும். எனவே அக்னி, ஆதித்யன், சந்திரன் என்ருற் போன்ற தேவதைகளைச் சொல்லும் சொற்களும், ஸ்திரீ, புருஷன், குமாரன், குமாரி, கிழவன், பக்ஷி, காலம், கடல் என்றவை முதலாக எல்லாவற்றின் பெயர்களும் அவனைச் சேர்த்து சொல்வதாகையால், நீயே அக்னி, ஆதித்யன், ஸ்திரீ, புருஷன், காலம், கடல் என்றவாறெல்லாம் அவனை வர்ணிப்பதாம். உலகில் பல ப்ரஜைகள் ஸ்ருஷ்டி செய்வதும், ஸம்ஸாரிகளாலே அனுபவிக்கப்படுவதும், விரக்தர்களாலே விடப்படுவதுமான மூல ப்ரக்ருதிக்கும் அவன் அந்தர்மியமியாவான். ஒன்றுக்கொன்று தோழமை கொண்டனவாய், அழகிய சிறகுகளும் பொருந்திய குணங்களுமுடைய பக்ஷிகள் இரண்டு ஒரு மரத்தில் தங்கியிருக்கின்றன. அவற்றில் ஒன்று அதில் பழுக்கும் பழங்களைச் சுவைத்து உண்டொழிகிறது. மற்றொன்று உண்ணுதே உயர்ந்து விளங்குகிறது. இப்படி ப்ரகிருதிக்கு வசப்பட்டு மரத்தில் தங்கி மங்கிக் கிடக்கும் இந்த ஜீவாத்மா தன்னில் வேருய்த் தன்னிடம் அன்புள்ள ஸர்வேச்வரனையும் அவன் மேன்மையையும் அறிந்தாணுகில் துயரற்று விளங்குவான். அவனை யறியாமே எத்தனை வேதங்களை யோதுவதும் வீணும். அவனே

மாயன், மாயையாவது மூல ப்ரக்ருதி. அவனுடைய அம் சங்களே ஜீவர்கள் யாவருமாவர். தேவர்களையும் ஸ்ருஷ்டி செய்பவன். ஹிரண்யகர்ப்பனென்ற நான்முகனைப் படைத்த அனுக்ரஹம் செய்தவ னவன். எங்கு முளனு கிலும் எவ்வித தோஷமும் தட்டாதவன். இவனே ப்ரள யத்தில் இருந்தவன். ஸூர்ய மண்டலத்தினுள் விளங்கு கின்றவன். இவனாலே நல்வழியி விழியத் தொல்லறிவு பெறுகின்றனர். இவனும், இவனுடைய திருவுருவும் கண்ணுற் காணக்கூடா. இவனைச் சரணமடைந்து பக்தியை வளர்த்த வேண்டும்; ஐச்வர்யங்களைப் பெறலாம்.

5. ஜ்ஞானம், கர்மம் என்ற இரண்டாலும் அவனை யாராதிக்க வேண்டும். ஆராதிக்கும் ஜீவன் வேறு; ஆரா திக்கப்படும் அவன் வேறு. ஜ்ஞயானத்திற் சிறந்த கபிலரைப் படைத்தவனும் அவனே. தேவதைகளும், ரிஷிகளும, பிரமனுமெல்லோரும் இந்த ப்ரம்மத்தை யறிந்தே மோக்ஷம் பெற்றனர். ஸத்துவ ரஜஸ் தமோ குணங்களுக்கு வசப்பட்டுப் பல வினைகளைச் செய்து பலன்களை யனுபவிக்க உடலும் கருவியும் கொண்டு அஹங்கார மமகாரங்களுடன் திரியும் இந்த ஜீவனெவ்வரு வனும் தன் இருப்பிடமான ஹ்ருதயம் கட்டைவிரலள வாயிருப்பதனால் அங்குஷ்டமரத்ர மெனப்படும். உண்மை யில் செருப்பாணியின் முனையத்தனையாய் வால்நெல்லின் வாலின் நுனியை எண்ணற்ற பாகங்களாகப் பிரித்தால் முடிவில் இருக்கும் (பிரிக்க முடியாத) ஒரு பிரிவவ்வள வாய் (அவயவமின்றி) அணுவாயிருக்கும், மோக்ஷத்தில் தனது ஞானமாம் ஒளியைக் கொண்டு எங்கும் பரந்தி ருக்கும். இந்த ஜீவாத்மா ஆணல்லன், பெண்ணல்லன் அலியுமல்லன், எந்த உடல் பெறுமோ; அதைப் பற்றி அவ்வாறு கூறப்படும். நல்வினைகளால் சிறந்த பிறவி

பெறுதலாம். வேறு வினைகளின் பயனாக வேறு பிறவி யாம். அத்தகைய வினைகளுக்கு அவ்வவ ஆத்மாவின் குணங்களே காரணம். அக்குணங்களுக்கு முன்வினை காரணமாம். இவற்றை யெல்லாம் கண்டுகொண்டு ஸர்வத்தையும் ஸ்ருஷ்டி செய்யும் பெருமானை யறிந்தார் மோக்ஷம் பெறுவர்.

6 இந்தத் தேவனை யறியாமே பலர், இயற்கையே உலகுக்குக் காரணமென்றும், காலம் காரணமென்றும் மற்றும் பலவிதமாகவும் பேசிவருகின்றனர். எல்லாம், எம்பெருமாளின் விபூதியாம். அவனுடைய ஸங்கல்ப்பத் தாலே பஞ்சபூதங்களும், அவற்றிற்கு முன்னும் பின்னு மான கார்யங்களும் உண்டாகின்றன. அவனுக்கு ஆராத னங்களாக எல்லாச் செயல்களையும் செய்துகொண்டு, அவனுக்குத் தான் சேஷனென்பதைச் செவ்வனே யறிந்து, அனுபவிக்க வேண்டு மவற்றை யனுபவித்து விட்டு அந்த ப்ரம்மத்தை யடைகிருன். அந்த ப்ரம்மத்தை விட ஜீவன் வேருவான், ப்ரக்ருதி, காலம், ஜீவன் என்ப வற்றிற்கு மேலாய் ப்ரபஞ்ச காரணமாய், பாவங்களைப் போக்குகின்றவனும், ஆத்மாவில் வசித்து வருபவனும், ஈச்வரர்களுக்கும் எல்லோர்க்கும் மேலான ஈச்வரனும். வேதைகளுக் கெல்லாம் மேலான தேவதையும், ஸர்வ சேஷியும், கர்மாதீனங்களான காயமும், கருவிகளு மில்லா தவனும், ஒத்தார் மிக்கார் யாருமில்லாதவனும், இயற்கை யாகவே பலவகை சக்தி, அறிவு, செயல் எல்லாம் உடை யவனும், எல்லாவற்றையும் நியமிக்கிறவனும், ஸத்வ ரஜஸ் தமோ குணங்களுக்கு உட்படாதவனுமாவான் அவன. ஸாங்க்யம், யோகம் முதலான சாஸ்த்ரங்களில் கூறியபடி தன்னைப் போல் நித்யர்களும் சேதநர்களுமான பலருக்குத் தான் ஸகல பலன்களையுமளிப்பவனுமாய் கர்மயோக ஜ்ஞான யோகங்கள் வாயிலாக ஜீவாத்மா வினுள் அறியப்படுகிறவனுமான அந்த ஜகத்காரண

புருஷனை யறிந்து பாசங்களினின்று விடுபட வேண்டும். சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மின்னல்கள், அக்னி போன்ற சோதிகளெல்லாம் அவனெதிரில் ஒளி பெரு. அவனது அனுக்ரஹமும், அவன் திருமேனி யொளியின் உதவியும் பெற்று அவை ப்ராசிக்கின்றன. உலகினில் மிகச் சிறந்து விளங்கும் அன்னமது. அலைகடலில் அழி வற்றிருக்கும் அக்னியது. ஜ்ஞானம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேசு என்ற குணங்கள் நிறைந்தவனும், ப்ரக்ருதி ஜீவர்களைக் கொண்டு, ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார மோக்ஷங்களை நடத்துகின்றவனும், தனக்கு மேல் ஈச்வர னொருவனில்லாதவனுமான இவனே பிரமனை ஸ்ருஷ்டித்து, வேதங்களையு மவனுக்கு ஓதியவன். இப்படி ஆத்மாக்களுக்கு அறிவைக் கற்பிக்கும் பரமபுருஷனை முமுக்ஷுவாய் சரணமடைக. நிரவயமானதாலே விருத்தி க்ஷயங்களைப் பெருததாய், கர்மங்களுக்கு உட்படாததாய், பசி தகாம் போன்ற துன்பங்களுக்கு இடமாகாததாய் ஆச்ரிதர்களை யுபேக்ஷிக்கும் ஸ்வபாவ மில்லாததாய், பக்ஷபாத மற்றதாய், மோக்ஷமென்ற அக்கரை சேரக் கடல் கடக்கத் திடமான அணையாயுமுள்ள இந்தப் பரதேவதையை யறியாமே மோக்ஷம் போவதென்பது மனிதர்கள் வானத்தை, தோலைப்போல் சுருளாகச் சுருட்டவியுன்றுபோதே கூடுவதாம். அமூர்த்தமான ஆகாயத்தைச் சுருட்டுவது கூடுமோ? அது போல் அவனையறியாது மோக்ஷம் பெற யாருக்குமாகாது.

இப்படி ச்வேதாச்வதரரென்பவர், தபோபலத்தாலும் தெய்வ அநுக்ரஹத்தாலும் ப்ரம்மத்தை யறிந்து, ரிஷிகள் திரள்திரளாகப் பரிவுடன் அறிந்து கொண்டாடும் அதைப் பரமஹம்ஸர்கள் போன்ற பலருக்கு உபதேசித்தருளினர். தெய்வத்தினிடமும், குருவிடத்திலும் துல்யமாய்ச் சிறந்த

பக்தியுள்ள மஹாத்மாவுக்கே இவ்வர்த்தங்களெல்லாம் நன்கு விளங்கும்.

ச்வேதாச்வதரோபநுஷத்தின் ஸாரம் முற்றிற்று.

---

## 12. அதர்வசிர உபநிஷத்து

தேவதைகள் ஸ்வர்க்கலோகம் புகுந்து ருத்ரனை, நீர் யார் என்று கேட்டார்கள். அவர் சொன்னார்—நானொருவனே முதலிலிருந்தேன், இருக்கின்றேன், இருக்கப் போகிறேன், என்னைவிட்டு வேறான தொன்றில்லை என்றவாறு. (இதன் மேல் அவர்கள், 'என்ன, பகவான் சொல்ல வேண்டும் சொல்லை இவர் சொல்லுகிறாரே. இவர் தன்னையே பகவானாக நினைத்திருந்கிறாரா, அல்லது தனக்கு அந்தர்யாமி பகவான் என்று கொண்டாரா என்று ஆராய்தலுற்றனர். அப்போது கீழ்ச் சொன்னதை விரித்துரைப்பதற்காக அவர்—'தேவதைகளே! நீங்கள் நினைத்துள்ள அந்த ஸுப்ரஸித்தனான பரமாத்மா ஸூக்ஷ்மத்தினும் ஸூக்ஷ்மமானவற்றில் புகுந்தவன். திக்கு முதலாக எங்கும் உட்புகுந்தவன். ஆகையால் நான் அவன் (எனக்கு அந்தர்யாமி அவன்). இவ்வாறே நித்யமான வஸ்துவும், புலப்படுவதும் புலப்படாததும் இப்படி எந்தெந்த வஸ்துவும் நான் (அதாவது எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியே எனக்கும் அந்தர்யாமி), என்று சொன்னார். இவ்வளவால் அந்தந்த காலத்திலிருப்பவையெல்லாம் நான் என்றதும் அவன் எனக்குள் புகுந்திருப்பதால். நான் என்ற சொல் அவனையும் சொல்லுமாகையால் அவ்வாறே தெளிந்து த்யானம் செய்து சொன்னேன் என்றதாயிற்று. (இவ்வாறே வாமதேர் ப்ரஹ்லாதர் முதலானோர் ஆங்காங்கு சொல்லிருப்பதையும் காண்க.

